அடிகளாசிரியன் வெளியீடு-5

உ

இறைவன் துணை

காசிமடாலயம்

அருட்டிரு-குமரகுருபர அடிகளார்

இயற்றியருளிய

வைத்தீசுரன் கோயில்

# முத்துக் குமார சாமி பிள்ளைத்தமிழ்ப்

பாட்டும்

இதற்கு

கரந்தைப் புலவர் கல்லூரி தமிழ் விரிவுரையாளர்

வித்துவான்

## திரு. அடிகளாசிரியரவர்கள்

எழுதிய

சொற்பொருளுரையும்.



மகாலிங்கம் பதிப்பகம், தஞ்சை.

1958



விலை ரூ. 2—0—0

அஞ்சற் செலவு வேறு.

அடிகளாசிரியன் வெளியீடு-5

உ
இறைவன் துணை

காசிமடாலயம்
அருட்டிரு-குமரகுருபர அடிகளார்
இயற்றியருளிய
வைத்தீசுரன் கோயில்

# முத்துக் குமார சாமி பிள்ளைத்தமிழ்ப் பாட்டும்

இதற்கு
கரந்தைப் புலவர் கல்லூரி தமிழ் விரிவுரையாளர்
வித்துவான்

## திரு. அடிகளாசிரியரவர்கள்

எழுதிய
சொற்பொருளுரையும்.

*

மகாலிங்கம் பதிப்பகம், தஞ்சை.

1958



விலை ரூ. 2—0—0
அஞ்சற் செலவு வேறு.

பட்டத்தில் அருளாசிரியராய் அமைந்திருந்த ஸ்ரீலஸ்ரீ-மாசிலாமணித் தேசிகர் பேரறிஞராய் விளங்குவதை அறிந்து குமரகுருபரர் அவரிடம் சென்றார். அங்கே நிகழ்ந்த நிகழ்ச்சியால் அப்பேரறிஞரே தமக்குரிய ஆசிரியர் என்பதை அறிந்துகொண்டு தமக்குத் துறவு நிலை அருள வேண்டுமென்று அவரைக் குமரகுருபரர் வேண்டினர். அந்நிலையை அருளுதற்கு முன் அதனைப் பெறுதற்குரிய மாணவரைத் தல யாத்திரை செய்துவரப் பணித்தல் அவ்வாதீன மரபாதலின், அப்பெரியார் குமர குருபரரைக் காசி யாத்திரை செய்து வரும்படி பணித்தனர். காசிக்குச் சென்று வருவதில் நெடுங்காலம் செல்லுமே என்று குமர குருபரர் மனங்கவன்றார். பெரியார் சில காலம் சிதம்பரத்தில் தங்கியிருந்தேனும் வருக என்று பணித்தார்.

ஆசிரியர் ஆணைப்படியே சிதம்பரம் செல்லப் புறப்பட்ட குமர குருபரர் இடையே வைத்தீசுரன் கோயிலில் தங்கி வைத்தியநாத சுவாமியையும், தையல் நாயகி அம்மையையும், முத்துக்குமார சுவாமியையும் கண்டு வணங்கிக்கொண்டு, அத்தலத்தின் எல்லையைக் கடந்து புறப்பட்டார். அப்பொழுது முத்துக்குமார சுவாமியானவர் குமரகுருபரரிடம் அருச்சகர் வடிவமாக எழுந்தருளித் திருநீறு கொடுத்து "நம்மைக் குறித்தும் ஒரு பிள்ளைத்தமிழ் பாடுவாயாக', என்று கட்டளையிட்டு மறைந்தருளினர். குமரகுருபரர் இங்ஙனம் எழுந்தருளினவர் முருகக் கடவுளே என்று தெளிந்து மீண்டும் அத் திருப்பதியை அடைந்து முத்துக் குமார சுவாமிப் பிள்ளைத் தமிழைப் பாடத் தொடங்கி, செங்கீரைப் பருவம் பாடும்பொழுது 'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாளன், எனவும், 'தேனூறு கிளவிக்கு' என்று தொடங்கும்பொழுது 'வாயூறி நின்றவன்' எனவும் தெய்வ நிகழ்ச்சியாய்ப் பிறர்பால் நிகழ்ந்த சொற்களையும் திருவருட்டிறம் என்று விடாதமைத்துப் பாடி முடித்து அக்கடவுள் திருமுன்பே அரங்கேற்றினர்.

பின் சிதம்பரம் சென்று அம்பலக் கூத்தனை நாடொறும் வழிபட்டுக்கொண்டு சில காலம் தங்கி யிருந்தனர். அப்பொழுது சிதம்பர மும்மணிக் கோவை, சிதம்பர செய்யுட் கோவை, நீதிநெறி விளக்கம் என்னும் நூல்களை இயற்றினர்.

குமர குருபரர் சிதம்பரத்தில் இங்ஙனம் சிலகாலம் வாழ்ந்த பின்னர் தம் ஞான தேசிகர்பாற் சென்று தம்முடைய வேட்கையை மீட்டும் விண்ணப்பித்துக்கொண்டார். இவருடைய மன நிலையை

நன்கு அறிந்த ஞான தேசிகர் இவருக்குத் துறவுநிலை அருளினர். அப்பொழுது இவர் தம் ஞான தேசிகரைப்பற்றி 'பண்டார மும் மணிக் கோவை' என்ற நூல் ஒன்றை இயற்றினர்.

பின்னர் ஞான தேசிகரிடம் விடைபெற்றுக்கொண்டு காசிக்குச் சென்று தங்கினர். அங்கு நிலையாகத் தங்கியிருந்து சிறந்த அறங் களைச் செய்ய விரும்பி அதன் பொருட்டு டில்லி பாதுஷாவைக் காண எண்ணினர். அவ்வரசனுக்குரியது இந்துஸ்தானி மொழியாகையால் அதனை விரைந்து அறிந்துகொள்ள வேண்டுமென்றெண்ணிச் 'சகல கலாவல்லி மாலை' என்னும் நூலை இயற்றிக் கலைமகளை வேண் டினர். அவ்வம்மையின் திருவருளால் அம்மொழியிலே சிறந்த அறிவு பெற்றுப் பாதுஷாவிடம் பேசிப் பழகினர். இவருடைய கல்வி யறிவு தவப் பண்பு முதலானவற்றில் ஈடுபட்ட அவ்வரசன் இவரு டைய விருப்பத்தின்படியே இவர் காசியில் தங்கியிருந்து அறம் செய் வதற்குரிய மடம் அமைப்பதற்குக் கேதார கட்டத்தில் இடம் உத வினன். அங்கு கட்டப்பட்ட மடத்திற்குக் குமாரசாமி மடம் என்று பெயர் வழங்குகின்றது. அவர் அங்கு வாழ்ந்திருந்தபொழுது 'காசித் துண்டி விநாயகர் பதிகமும்' 'காசிக் கலம்பகமும்' இயற் றினர். பின் தருமபுரம் வந்து தம் ஞானசிரியரை வணங்கிக் கொண்டு மீட்டும் காசிக்கே சென்று வாழ்ந்திருந்து வைகாசித் திங்கள் கிருட்டின பக்கத் திருதியையில் சிவபெருமான் திருவடி நிழலை அடைந்தார்.

இவருக்குக் குமார சுவாமிக் கவிராயர் என ஒரு தம்பி இருந் தார். கி. பி. 1629லிருந்து 1659 வரை திருமலைநாயக்கர் காலம் ஆகையால் அக்காலமே குமர குருபரர் காலமுமாகும்.

# குழந்தை இலக்கியம்.



அன்பு தோன்றுவதற்குக் காரணமான பல பொருள்களில் குழந்தையாகிய பொருள் மிகச் சிறந்த பொருளாகும். கடவுளிடத்தே அன்புகொண்ட அறிஞர் அக்கடவுளைப் பிள்ளையார், முருகன், கண்ணன் என்னும் குழந்தை வடிவத்தில் வைத்து அன்பு செலுத்தி வருகின்றனர்.

பாட்டிசைக்கும் புலவர் பாடாண்டிணையில் 'குழவி மருங்கினும் கிழவ தாகும்' என்னும் 'குழவிக்கட்டோன்றிய காமப் பகுதி' யாகிய துறையை வகுத்துக்கொண்டு குழந்தையைப் பாடி மகிழ்கின்றனர்

வாகைத் திணையில் 'பொருளொடு புணர்ந்த பக்கம்' என்னும் துறைப் பகுதியில் புதல்வர்ப் பேற்றையும் அடக்குவர் இளம்பூரணர்,

ஏனைய பெரும் பொருள்களைப் பெற்றிருந்தாலும் குழந்தையாகிய பொருளைப் பெற்றிராவிட்டால் அப்பொருள்களால் பயனில்லையென்று அப்பொருள்களுக்கு நிலையாமை கூறிய,

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே".

என்னும் பொருண்மொழிக் காஞ்சிப் பாட்டினைப் புறநானூற்றில் படித்து மகிழ்கிறோம்.

இவ்வாறு குழந்தையைப் பல வகையாகப் பாராட்டிப் பாடப் பெறும் இலக்கியத்திற்குப் பிள்ளைப் பாட்டு பிள்ளைத் தமிழ் எனப் பெயர் வழங்குகின்றது. இவ்விலக்கியம் ஆண்பாற் பிள்ளைப் பாட்டென்றும் பெண்பாற் பிள்ளைப் பாட்டென்றும் இரண்டு வகையாயுள்ளது.

திவாகரம், பிங்கலம், வெண்பாப் பாட்டியல், பன்னிரு பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் முதலானவற்றில் இதன் இலக்கணங்கள் பலவகையாகக் கூறப்பட்டுள்ளன.

### பிங்கல நிகண்டு கூறுவது.

"பிள்ளைப் பாட்டின் இலக்கணத்தைத் தெளிவாகக் கூறின் இரண்டாந் திங்களில் காப்புக் கூறுதலும், ஐந்தாந் திங்களில் செங்கீரை கூறுதலும், ஆறுந் திங்களில் சொற்களைப் பழகுதலோடு ஏழாந் திங்களில் அமுதூட்டலும், எட்டாந் திங்களில் தாலாட்டுதலும், ஒன்பதாந் திங்களில் சப்பாணி கொட்டுதலும், பதினோராந் திங்களில் முத்தங் கூறலும், ஒன்றும் யாண்டில் வருக என்றழைத்தலும், பதினெட்டாந் திங்களில் அம்புலியை அழைத்தலும், இரண்டாம் யாண்டில் சிறுபறை கொட்டலும், மூன்றும் யாண்டில் சிற்றில் சிதைத்தலும், நான்காம் யாண்டில் சிறு தேர் உருட்டலும், பத்தாம் யாண்டில் பூண் அணிதலும், பன்னிரண்டாம் யாண்டில் கச்சினோடு உடைவாளை விரும்பத் தரித்தலும் என்று சொல்லப்பட்டவையும் இவை ஒழிந்த பிறவும் ஆண்பாற் பிள்ளைப் பாட்டிற்கு ஆகும்" என்று பிங்கல நிகண்டு (6—267) கூறுகின்றது.

### பன்னிரு பாட்டியல் பகர்வது.

ஆண்பாற் பிள்ளைப் பாட்டினைக் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் பத்துப் பொருள்கள் அமையப் பாடவேண்டும் என்றும்; காப்பினுள் திருமால், சிவன், நான்முகன், கணபதி, முருகன், சூரியன், வடுகன், ஏழு கன்னியர், இந்திரன், ஐயனர், குபேரன், காளி, முப்பத்து மூன்று தேவர், திருமகள், நாமகள், திங்கள் ஆகிய தெய்வங்களைக் காக்கும்படி பாடவேண்டும் என்றும்; இப்பாட்டினைக் குழந்தை பிறந்தபின் மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின் மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்தொன்று என்னும் ஒற்றித்த மாதங்களில் தந்தை, தாய் அல்லது, பாட்டன், பாட்டி என்னும் இவர்முன் உரைக்கவேண்டும் என்றும் பன்னிரு பாட்டியல் (102, 106, 101, 103) பகர்கின்றது.

காப்புப் பருவத்தில் திருமாலை முதலிற் கூறவேண்டிய காரணங்களை,

"காப்புமுத லிசைக்குங் கடவு டானே
பூக்கமழ் தண்டுழாய் புனைந்தவ னுமவன்
காவற் கிழமைய னுத லானும்
பூவின் கிழத்தியைப் பொருந்துத லானும்
முடியுங் கடகமும மொய்பூந் தாரும்
குழையும் நூலும் குருமணிப் பூணும்
அணியும் செம்ம லாத லானும்
மன்னுறு பிரமனைத் தருத லானும்
முன்னுற மொழிதற் குரிய னுமெனப்
பன்னி யுரைத்தனர் பாவலர் தாமே

என்று பிங்கல நிகண்டு (6—266) கூறுகின்றது.

## பிள்ளைத்தமிழ் பாடும் செய்யுள்.

இப்பிள்ளைத் தமிழை ஆசிரிய விருத்தத் தாலும், கட்டளை ஒலி என்னும் சந்த விருத்தத்தாலும், கலி விருத்தத்தாலும், பாடவேண்டும் என்று பன்னிரு பாட்டியல் (சூ. 110) பகர்கிறது. ஒட்டக் கூத்தர் பாடிய குலோத்துங்கன் பிள்ளைத் தமிழில் கலி விருத்தப் பாட்டுக்களும் உள்ளன. வெண்பாப் பாட்டியல் 'வகுப்பாலும் ஆசிரிய விருத்தத்தாலும் பாடுக' என்று விளம்புகின்றது.

## முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழ்.

அருட்புலமை வாய்ந்த குமரகுருபர சுவாமிகள் இம்முத்துக் குமாரசாமிப் பிள்ளைத் தமிழைப் பன்னிரு பாட்டியல் பகர்ந்துள்ளபடி காப்பு முதலான பத்துப் பருவங்களை அமைத்துப் பாடியுள்ளார்கள். விநாயகர் காப்புடன் இதன் பாட்டு 101.

**காப்பு :—** குழந்தையைக் காக்கவேண்டும் என்று கடவுளரை வேண்டுவது. முத்துக் குமாரசாமிப் பிள்ளைத் தமிழ் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் பதிப்பு முதலானவற்றில் திருமால், வைத்திய நாதர், தையனுயகி அம்மை, கற்பக விநாயகக் கடவுள், பிரமதேவர், தேவேந்திரன், திருமகள், கலைமகள், ஏழு கன்னியர், முப்பத்து முக்கோடி தேவர்கள் என இம்முறையில் காப்புக் கூறப்பட்டுள்ளது. மகாவித்துவான் இராமசுவாமி நாயுடு பதிப்பில் திருமால், வைத்திய நாதர், தையல்நாயகி, கற்பக விநாயகர், திருமகள், கலைமகள், பிரமன், தேவேந்திரன், ஏழு கன்னியர், முப்பத்து முக்கோடி தேவர் என இம்முறையில் காப்புக் கூறப்பட்டுள்ளது.

**செங்கீரை :—** குழந்தைக்குச் சொற்களைப் பழக்குவதற்கு முன் 'இங்கு' என்னும் ஓசையைச் செவ்வையாய் ஒலிக்கும்படித் தாயர் முதலானவர் கற்றுக்கொடுப்பர். செம் + இங்கு என்னும் சொல் செங்கீரையென மருவிற்று. இன்றும் இளங் குழந்தைகள் 'இங்கு' என்னும் ஒலியை எழுப்பிக்கொண்டு கையையும் காலையும் அசைத்தாடலை நாம் காண்கின்றோம். பெரிய வாச்சான் பிள்ளை எனனும் பெரியார் செங்கீரை யாடலை ஒரு நிருத்த விசேடமென்பர். இன்னும் சிலர் கீரம் என்பதற்குக் கிளி என்று பொருள்கொண்டு, 'கிளியானது மரக்கிளையில் ஒரு காலையூன்றி ஒரு காலைத் தூக்கி முன்னும் பின்னும் அசைந்தாடுவதுபோல்' குழந்தையும் ஒரு முழந்தாளை யூன்றி யெழுந்து இரண்டு கைகளையும் நிலத்தில் பதிய வைத்து நிமிர்ந்து தலையசைத்தாடலே செங்கீரை என்றனர். இங்ஙனமே நமது அடிகளாரும் 'ஒரு தாளுந்தி எழுந்திரு கையும் ஒருங்கு பதித்து நிமிர்ந் தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி தாடுக செங்கீரை' என்று கூறியுள்ளனர். இன்னும் சிலர் காற்றிலே செவ்விய கீரைத்தண்டு ஆடுவதைப்போல் குழந்தை அசைந் தாடுவதே செங்கீரை என்றனர். இந்நிகழ்ச்சியைப் பாடுவது

செங்கீரைப் பருவமாயிற்று. (சிறு குழந்தைக்குச் 'செங்கீரை' என்று பெயரிருத்தலை வீரராசேந்திரன் மெய்க் கீர்த்தியால் அறிக.)

**தால்** :— குழந்தையைத் துயிலச் செய்யும் தாயர் தம் தாலாகிய நாவை அசைத்து ஒரு வகை ஒலியை எழுப்பித் துயிலச் செய்வர். இந்நிகழ்ச்சியைப் பாடுவது தாலப் பருவமாயிற்று.

**சப்பாணி** :— 'ஸ : பாணி' என்னும் சொல் சப்பாணி என்று ஆயிற்று என்பர். இரண்டு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல் என்பது இச்சொல்லிற்குப் பொருளாகும். இதனைப் பூக்கொட்டுதல் என்றும் வழங்குவதுண்டு. இந்நிகழ்ச்சியைப் பாடுவது சப்பாணிப் பருவமாகும்.

**முத்தம்** :— குழந்தையை முத்தம் தரும்படி வேண்டுவது இந்நிகழ்ச்சியைப் பாடுவது முத்தப் பருவமாகும்.

**வருகை** :— குழந்தை எழுந்து சிறிது நடக்கத் தொடங்கும் பொழுது அதனை வா வா வென்று அழைப்பது. இந்நிகழச்சியைப் பாடுவது வருகைப் பருவமாகும்.

**அம்புலி** :— அம்புலியாகிய திங்களைக் குழந்தையொடு விளையாட வருக என்று, குழந்தைக்கும் அம்புலிக்கும் ஒப்புக் (சாமம்) கூறியும், வேறுபடுத்திக் (பேதம்) கூறியும், விளையாட வரின் அம்புலிக்கு வரும் நன்மை (தானம்) கூறியும், வராவிட்டால் அம்புலிக்கு வரும் தீமை (தண்டம்) கூறியும் அழைப்பது. இந்நிகழ்ச்சியைக் கூறுவது அம்புலிப் பருவமாகும்.

**சிற்றில்** :— சிற்றி லிழைத்து விளையாடும் சிறுமியர் பாட்டுடைத் தலைவன் தம் சிற்றிலை அழிக்கும்பொழுது எங்கள் சிற்றிலைச் சிதையேல் என்று வேண்டிக்கொள்வது. இந்நிகழ்ச்சியைப் பாடுவது சிற்றிற் பருவமாகும்.

**சிறுபறை** :— பாட்டுடைத் தலைவனைச் சிறுபறை யறைந்து விளையாடும்படி வேண்டுவது. சேனாவரையரும் 'இவளும் இவனும் சிற்றிலிழைத்துஞ் சிறுபறையறைந்தும் விளையாடுப' என்னும் தொடரை எடுத்துக் காட்டாக அமைத்துள்ளார். (தொல்-சொல் உ) இதனைப் பாடுவது சிறுபறைப் பருவமாகும்.

**சிறுதேர்** :— பாட்டுடைத் தலைவனைச் சிறுதேருருட்டி விளையாடும்படிக் கூறுவது சிறுதேர்ப் பருவமாகும்.

குமரகுருபரருடைய அறிவிலே முருகன் எழுந்தருளியிருந்து உலகமெல்லாம் மகிழத் தமிழாகிய அமுத கிரணத்தை ஒழுக்கினான் என்பதை, "உலகு குளிர எமது மதியில் ஒழுகும் அமுத கிரணமே" (வருகை-9) என்னும் இந்நூல் செய்யுட் பகுதியால் உணரலாகும். அருட் புலமையால் தோன்றிய இப்பிள்ளைத் தமிழை அன்புடன் கற்றுப் பொருளுணர்ந்து கூறுபவர்க்குப் பழுத்த தமிழ்ப் புலமை உண்டாகும் என்று அறிஞர் கருதுகின்றனர்.

---

உ

இறைவன் துணை.

# வைத்தீசுவரன் கோயில்
# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்
## பாட்டும் உரையும்.

---

### மூத்தபிள்ளையார் வணக்கம்.

(ஆசிரிய விருத்தம்)

1. பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
        பொருப்பிற் பிறந்துதவளப்
    பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர்
        போர்க்களிற் றைப்புணர்ந்து

தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
        செழும்பிடி பயந்தளித்த
    சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
        செஞ்சரணை யஞ்சலிப்பாம்

மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள்
        வேழங் கடம்படுபடா
    வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை
        விண்டுதண் டேன்றுளிக்கும்

கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
        குருசிலைப் பொருசிலைக்கைக்
    குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
        கொழிதமிழ்க் கவிதழையவே.

---

இந்நூலின் பெயர் முத்தையன் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்ச் சேனாபதிப் பெருமாள் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்க் குமாரதேவர் பிள்ளைக்கவி எனவும் ஏட்டுப்பிரதிகளிற் காணப் படுகின்றது. (உ. வே. சா. குறிப்பு.)

(இ-ள்.) மின் பூத்த சிறு இடை பேர் அமர் கண் கடவுள் வேழம்—மின்னல்போற் றோன்றிய சிறிய இடையையும், பெரிய போர் செய்யும் கண்களையும் உடைய தெய்வ யானை (அம்மையார்);

கடம் படு படா வெம் முலை கோடு கொண்டு உழுது உழுது உழக்க—(உவமையாகாமையால்) குடத்தை அழியச்செய்து, சாயாத, விரும்பத்தக்க நகிலாகிய தந்தத்தினால் (முருகனது மார்பினை, உழுது உழுது கலக்க (அதனால்);

முகை விண்டு தண் தேன் துளிக்கும் கொன் பூத்த தெரியல் கடம்பு அணி தட புயம் குருசிலை — அரும்பு மலர்ந்து குளிர்ந்த தேனைச் சிந்தும் பெருமை தோன்றிய கடப்ப மலரின் மாலையை அணியும் அகன்ற தோள்களையுடைய பெருமையிற் சிறந்தோனை;

பொரு சிலை கை குமரனை — போர் செய்தற்குரிய வில்லினை யேந்திய கையையுடைய குமாரதேவனை;

கந்தபுரி முருகனை — கந்தன் நகரம் (என்று பெயர் பெற்ற வைத்தியநாதபுரியில்) எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானை;

பரவும் என் கொழி தமிழ் கவி தழைய—வாழ்த்துகின்ற எனது வடித்த தமிழ்ச் செய்யுள்கள் செழிக்கும் பொருட்டு;

பொன் பூத்த குடுமி பொலம் குவட்டு இமவான் பொருப்பில் பிறந்து—அழகு தோன்றப்பெற்ற உச்சியோடு கூடிய பொன் நிறம் வாய்ந்த சிகரங்களைப் பெற்றிருக்கும் இமயமாகிய மலையிலே தோன்றி;

தவளம் பொழி நிலவு தவழும் முழு வெள்ளி வேதண்டத்து ஓர் போர் களிற்றை புணர்ந்து — வெண்மையாய்ச் சொரிகின்ற நிலவு தவழ்ந்து கிடப்பதும், முற்றிலும் வெள்ளியால் ஆனதும் ஆகிய (கயிலை) மலையில் வாழும் ஒன்றாகிய (சிவபெருமானாகிய) போர் செய்யும் ஆண் யானையைக் கூடி;

தென் பூத்த பாட்டு அளி துதைந்த பை கூந்தல் செழு பிடி — அழகு பொலிந்த இசையைப் பாடுகின்ற வண்டு மொய்த்த நீலநிறம் வாய்ந்த கூந்தலையுடைய (உமாதேவியாராகிய) பெண் யானை;

பயந்து அளித்த—ஈன்று காத்தருளிய;

சிறு கண் பெரு செவி குஞ்சரம் கன்றின் இரு செம் சரணை அஞ்சலிப்பாம்—சிறிய விழிகளையும் பெரிய காதுகளையும் உடைய யானைக் கன்றின் இரண்டாகிய சிவந்த திருவடிகளை (யாம்) கை தொழுவோம். (எ...று)

முடிபு:— குருசிலை, குமரனை, முருகனைப் பரவும் என் தமிழ்க்கவி தழைய, இமவான் பொருப்பிற் பிறந்து, (பிறந்த) பிடி களிற்றைப் புணர்ந்து பயந்து அளித்த குஞ்சரக் கன்றின் சரணை (யாம்) அஞ்சலிப்பாம்.

**(குறிப்புரை)** 'பிறந்து' என்னும் வினையெச்சத்தைப் பெயரெச்சம் ஆக்குக. இல்லையேல் 'பிடி பிறந்து புணர்ந்து' என்று கூட்டினும் அமையும். இமயமலை பொன்னிறமுடையதாதலின் 'பொன்பூத்த குடுமிப் பொலங்குவடு' என்றார். 'பொன்' என்னும் மங்கலச் சொல்லால் இந்நூல் தொடங்கப்பெற்றுள்ளது.

மந்தரம் என்னும் மலையிலுள்ள சித்திரசாலையில் எழுதப்பட்டிருந்த சிவப்பிரணவமறையும் சத்திப் பிரணவமறையும் முறையே ஆண்யானை பெண்யானை வடிவம்போல் தோன்றின. அவற்றைக் கண்ட சிவபெருமானும் உமாதேவியும் அவ்வடிவங்கொண்டு சேர்ந்து தேவர் முதலியோரது துன்பத்தைப் போக்குதற்காக யானை முகக் கடவுளை ஈன்றனர் என்னும் வரலாறு தோன்ற 'இமயவரையிற் பிறந்த ஒருபிடி கயிலைமலையிலுள்ள களிற்றைப் புணர்ந்து பெற்ற குஞ்சரக் கன்று' என்று கூறினார். 'குரிசில்' என்றும் பாடம்.

## க. காப்புப் பருவம்.

### திருமால்

2, பூமேவு கற்பகப் பொங்கரிற் செங்கட்
புலோமசை வளர்த்தகும்பப்
புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை விருப்பனைத்தும்

கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த
குழகனைக் கழகந்தொறும்
கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்
குமாரனைத் துனிபுரக்க

தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரிகள்
திகிரிகிரி குலகிரியொடும்
திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடற்
றெண்டிரை முகட்டுதித்த

பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும்
பசுங்குதலை மழலையஞ்சொற்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே. (க)

(இ-ள்.) தே மேவு கடவுள் பொலம் கிரி திசை கரிகள் திகிரி கிரி குலம் கிரியொடும் திரிய திரித்து மத்து எறிய—தெய்வங்கள் விரும்பும் கடவுட்டன்மை வாய்ந்த பொன்மலையாகிய மேருமலையும் திக்கு யானைகளும் சக்கரவாளகிரியும் இமயம் முதலான குலமலைகளுடன் சுழலும்படி (மந்தரமலையாகிய) மத்தைத் திரித்துக் கடைய;

தட கடல் தெள் திரை முகட்டு உதித்த பா மேவு மதுரம் பழுத்து அமுதம் ஒழுகும் பசு குதலை மழலை அம் சொல் பங்கயம் செல்வி—பெரிய பாற் கடலின் தெளிந்த அலைகளின் உச்சியில் தோன்றிய, பாக்களிற் பொருந்திய சொல்லினிமையும் பொருளினிமையும் முதிர்ந்து அமிழ்தத்தின் சுவை ஒழுகுகின்ற இளைய குதலைச் சொல்லாகிய மழலை (என்னும்) அழகிய சொல்லையுடைய, தாமரை மலரை இருக்கையாகவுடைய செந்திரு;

(பங்கயச்செல்வி)இரு கொங்கை குவட்டு வளர் பச்சை பசு கொண்டல் — (அத்தகைய செந்திருவினுடைய) இரண்டு கொங்கையாகிய மலையில் கண்ணுறங்கும் (திருமாலாகிய) மிகவும் பசுமைகொண்ட முகிலானது;

பூ மேவு கற்பகம் பொங்கரில் செம் கண் புலோமசை வளர்த்த கும்பம் புணர் முலை களி யானை விளையாடும் பன்னிரு பொருப்பனை—மலர்கள் பொருந்தும் கற்பக மரங்களின் சோலையில் நல்ல கண்களையுடைய புலோமசையால் வளர்க்கப்பெற்ற குடம்போல் நெருங்கின நகிலையுடைய களிப்பொடு கூடிய தெய்வ யானையானது விளையாடுகின்ற தோள்களாகிய பன்னிரண்டு மலைகளையுடையவனை;

விருப்பு அனைத்தும் கோ மேவு சாரல் குறம் சிறுமிமேல் வைத்த குழகனை—தனது விருப்பமெல்லாம் மலையில் மேவும் சாரலில் உள்ள குறவர் குலத்தில் வளர்ந்த சிறுமியாகிய வள்ளிநாயகியின்மேல் வைத்த இளமைப்பருவமுடையவனை;

கழகம் தொறும் கொத்து முத்தமிழ் மொய்த்த கந்தபுரி முத்துக் குமாரனை தனி புரக்க—கல்வி பயிலுமிடமெல்லாம் தொகுதியாகிய இயல் இசை நாடகம் என்னும் மூன்று தமிழ்கள் நிறைந்த கந்தபுரியில் வாழ்கின்ற முத்துக் குமாரக் கடவுளை ஒப்பறக் காக்க. (எ-று)

முடிபு :— பொலங்கிரி திசைக்கரி திகிரிகிரிகள் குலகிரியொடும் திரியும்படி மத்தைத் திரித்து எறிய (அதனால்) கடல் திரை முகட்டு உதித்த பங்கயச் செல்வியின் கொங்கையாகிய குவட்டுள் வளர் கொண்டலானது, பன்னிரு பொருப்பனைக் குழகனை முத்துக்குமாரனைத் தனிபுரக்க. பொங்கரில் புலோமசை வளர்த்த களியானை விளையாடு பொருப்பனை, விருப்பனைத்தும் சாரலில் சிறுமிமேல் வைத்த குழகனை, கழகந்தொறும் தமிழ் மொய்த்த கந்தபுரி, அப்புரியில் வாழும் முத்துக் குமாரனை என்று கூட்டுக.

(கு—ரை) சோலையில் வளர்ந்த யானை மலையில் விளையாடியது என்ற நயங்காண்க. புலோமசை—இந்திரன் மனைவி; அவள் புலோமன் என்பவனது மகளாதலால் அப்பெயர் பெற்றாள். தேம் மேவு என்று பிரித்து இடம் பொருந்திய என்றுரைப்பர் மகாவித்துவான், இராமசாமி நாயுடு அவர்கள். 'கோ மேவு' என்றதில் 'கோ' மலை என்னும் பொருளது. 'கோத்ர:' என்பது மலையின் பெயர்.

3 அடி, 'திசைக்கிரிகள்' என்றும் பாடம்.

## வைத்தியநாதர்

(சந்த விருத்தம்)

தனன தத்ததன தனன தத்ததன
தானன தத்தன தானனத் தாத்தன

3. ஒருபு றத்துமர கதமி மைப்பவொளிர்
மாமேரு மற்றொரு மேருவைச் சாய்த்தென
உலக ளக்கநிமிர் வடபொ ருப்பையொரு
தோளால்வ ளைத்தபி னாகியைத் தீக்கனல்

உமிழு முக்குடுமி யயிறி ரித்துவரு
வாய்வாண்ம ழுப்படை வீரனைப் பார்த்தனொ
டுடலு மற்றொழிலி னறவி ளைத்துமெதிர்
ஓடாது டற்றுகி ராதனைக் கூக்குரல்

விரிக டற்புடவி முழுது ணச்சமையும்
ஓர்காளை கட்டுப்ர தாபனைக் கார்க்கடு
விடமெ டுத்தரிய திருமி டற்றிலிடு
காமாரி யைக்கவு மாரியைப் போற்றிரு

விழிமு னிற்கும்வடி வழகு டைக்கடவுண்
மாமோகி னிக்கும ணாளனைச் சூக்கும
வெளியி னிற்பரம நடந விற்றுதிறல்
வேளூர்வ யித்திய நாதனைப் போற்றுதும்

குரவு செச்சையொடு நறவு யிர்ப்பவிரி
தேனுறு வட்டெழு மார்பனைப் பேய்த்திரள்
குரவை யிட்டவுணர் தடிசு வைத்திடவொர்
கூர்வேல்வி டுத்தகு மாரனைப் பார்ப்பதி

குமர னேச்சமரி லுருமு கக்குளிறு
காலாயு தக்கொடி யாளனைக் கோட்டிய
குறுந கைக்குமன முருக வெற்பவர்த
மானொடு மற்பொரு தோளனைத் தாக்கிய

திரண்ம ருப்பினமர் பொருத னிக்கடவுண்
மால்யானை யைப்புணர் காளையைச் சாற்றிய
செழும றைப்பொருளி னுரைவி ரித்துமெனும்
வேதாமு டித்தலை மோதுகைக் காய்ப்பொடு

திருவ டித்துணையென் முடிப தித்தவடு
ஆறுத மெய்ப்புக ழாளியைப் பூட்டிய
சிறைவி டுத்தமரர் குறைமு டித்துதவு
சேனாப திப்பெரு மாடனைக் காக்கவே. (உ)

(இ-ள்.) குரவு செச்சையொடு நறவு உயிர்ப்ப விரி தேன் ஆறு உவட்டு எழு மார்பனை—குராமலர் வெட்சி மலரோடு மணம் வீச மலர்தலால் உண்டாகிய தேன்யாறுனது பெருகி எழுவதற்கிடமான மார்பையுடையவனை;

பேய் திரள் குரவை இட்டு அவுணர் தடி சுவைத்திட ஓர் கூர் வேல் விடுத்த குமாரனை—பேய்க்கூட்டங்கள் குரவைக் கூத்தைச் செய்து அசுரருடைய தசையைச் சுவைக்கும்படி ஒப்பற்ற கூர்மையாகிய வேலாயுதத்தைச் செலுத்திய குமாரனை;

பார்ப்பதி குமரனை—மலைமகள் மகனை,

சமரில் உரும் உக குளிறு காலாயுதம் கொடியாளனை—போர்க்களத்தில் இடி சிந்திவிழும்படி முழங்கும் சேவற் கொடியை உடையவனை;

கோட்டிய குறு நகைக்கு மனம் உருக வெற்பவர் தம் மானொடு மல் பொரு தோளனை—(வள்ளி நாயகியார்) செய்த புன்சிரிப்புக்கு மனம் உருகியபடியால் குன்றக்குறவர் தமது மான்போன்ற அவ் (வள்ளிநாயகியுடன்) மற்போர் செய்தாற்போல் தழுவிய தோளையுடையவனை;

தாக்கிய திரள் மருப்பின் அமர் பொரு தனி கடவுள் மால் யானையை புணர் காளையை—(நகிலாகிய) தாக்கும் திரண்ட தந்தத்தால் காமப் போரைச் செய்யும் ஒப்பற்ற மயக்கம் தரும் தெய்வ யானையைக் கூடும் காளை போன்றவனை;

சாற்றிய செழு மறை பொருளின் உரை விரித்தும் எனும் வேதா முடி தலே மோது கை காய்ப்பொடு திரு அடி துணே என் முடி பதித்த வடு ஆருத மெய் புகழாளியை — "சிறப்பித்துச் சொல்லப் பெறும் செழுமையான மந்திரம் என்னும் பிரணவப் பொருளுக்கு உரையை விரித்துச் சொல்லுவோம்" என்ற, பிரமதேவனது முடியுடன் கூடிய தலேயைக் குட்டின கைத்தழும்புடன், அழகிய தாள் இரண்டில் எனது தலேயைப் பதித்தலால் (தோன்றிய) தழும்பு ஆறப்பெருமலிருக்கும் உண்மையாகிய புகழுடையவனே;

பூட்டிய சிறை விடுத்து அமரர் குறை முடித்து உதவு சேனுபதி பெருமாள் தனே காக்கவே — தளேக்கப்பட்ட சிறையினின்றும் நீக்கித், தேவரது இன்றியமையாத செயலே முடித்து, உதவிய சேனேத்தலேவனுகிய பெருமாளேக் காக்கும் பொருட்டு;

ஒரு புறத்து மரகதம் இமைப்ப ஒளிர் மா மேரு மற்று ஒரு மேருவை சாய்த்து என உலகு அளக்க நிமிர் வட பொருப்பை ஒரு தோளால் வளேத்த பிஞகியை—'இடப்பக்கமாகிய ஒரு பக்கத்திலே (உமாதேவியாகிய) பச்சைமணி மின்ன விளங்கும் பெரிய மேருமலேயானது வேருெரு மேரு மலேயை (எடுத்து) வளேத்தாற்போல, உலகங்களே அளக்கும் பொருட்டு நிமிர்ந்த வடதிசையின்கண்ணே உள்ள மலேயை ஒரு தோளாலே வளேத்த பிஞகம் என்னும் வில்லேயுடையவனே;

தீக்கனல் உமிழும் மு குடுமி அயில் திரித்து வரு வாய் வாள் மழு படை வீரனே — தீய்க்கும் நெருப்பை வெளிப்படுத்துகின்ற முத்தலே வேற்படையைச் சுழற்றிக்கொண்டு வருகின்ற வாய்த்த கூர்மையையுடைய மழு என்னும் படையைத் தாங்கிய வீரமுடையவனே;

பார்த்தனெடு உடலும் மல் தொழிலில் அற இளேத்தும் எதிர் ஓடாது உடற்று கிராதனே — அருச்சுனனெடு போர் செய்த மற்போரிலே மிக இளேப்படைந்தும் அவன் முன்னின்றும் ஓடாமல் போர் செய்த வேட வடிவத்தையுடையவனே;

கூக்குரல் விரி கடல் புடவி முழுது உண சமையும் ஓர் காளே கட்டு ப்ரதாபனே — கூவுகின்ற குரல் விரியும் கடல் சூழ்ந்த உலகம் முற்றிலும் உண்ணப் பொருந்திய (திருமாலாகிய) ஒப்பற்ற காளேயைத் (தனக்குரியதாகப்) பிணித்துக்கொண்ட வீரப் புகழுடையவனே;

கார் கடு விடம் எடுத்து அரிய திரு மிடற்றில் இடு காமாரியை — கரிய மிக்க நஞ்சினே எடுத்து அருமையாகிய அழகிய கண்டத்திலே வைத்துக்கொண்ட காமன் பகையாயுள்ளவனே;

கவுமாரியை போல் திரு விழி முன் நிற்கும் வடிவு அழகு உடை கடவுள் மா மோகினிக்கு மணுளனே — உமாதேவியைப்போன்ற (வடிவத்துடன்) அழகிய கண்களின்முன் நின்ற வடிவழகுடைய தெய்வத் தன்மை வாய்ந்த கரிய (திருமாலாகிய) மோகினிக்கு மணவாளனுக உள்ளவனே;

சூக்கும வெளியினில் பரமம் நடம் நவிற்று திறல் வேளூர் வயித்திய நாதனை போற்றுதும்—சூக்கும ஆகாயத்திலே மேலான நடனத்தைச் செய்கின்ற ஆற்றல் படைத்த வேளூரில் வாழும் வயித்திய நாதனை (யாம்) போற்றுவோம். (எ—று)

முடிபு:— மார்பனை, குமரனை, பார்ப்பதி குமரனை, காலாயுதக் கொடியாளனை, மற்பொரு தோளனை, மால்யானையைப் புணர் காளையை, மெய்ப்புகழாளியை, சேனுபதிப் பெருமாள் தனைக்காக்க (காப்பாற்றவேண்டி) பிறுகியை, மழுப்படை வீரனை, கிராதனை, ப்ரதாபனை, காமாரியை, மணுளனை, வேளூர் வயித்திய நாதனைப் போற்றுதும்,

(கு—ரை) 'மாமேரு' பொன்னிறமுடையதாதலின் அது இறைவனது பொன்னுர் மேனிக்கு உவமையாயிற்று, பதினுறு வயதுடையவனைக் காளை என்று வழங்குதல் மரபென்பர் (தக்—5—உரை) பிள்ளைத்தமிழ்ப் பாட்டுடைத் தலைவனுக்குப் பன்னிரண்டாண்டில் உவமை கூறப்பெறும் உவமைகள் இளங்கதிர், இளம்பிறை, புலிப்பறழ், குஞ்சரக் குழவி, கோளரிக்குருளை, அடல்இள விடை என்பனவாம் (பன்னிரு—114) ஆதலின், முருகனைக் 'காளை' என்று குறித்து, 'கடவுள் மால் யானையைப் புணர் காளை' என்ருர். இதனுள் 'யானையைக் காளை புணர்கின்றது' என்ற நயங்காண்க. காலாயுதம்—காலினை ஆயுதமாகக் கொண்ட கோழி. 4 அடி 'திருவடித் துணையின்' என்றும் பாடம்.

தையனுயகி யம்மை

(வேறு)

தனன தந்ததன தனன தந்ததன
தனன தந்ததன தய்யனத் தாத்தன

4. குழைய டர்ந்துவடி கணை துரந்துசெறி
குமிழ்ம றிந்தவிழி நவ்வியைக் கோட்டொடு
குவடெ றிந்தமுத கலசம் வென்றதட
முலைசு மந்தமலை வல்லியைச் சேற்ருளிர்
குமுதம் விண்டசுவை யமுத முண்டினிய
கொழுநர் கொஞ்சுசிறு கிள்ளையைத் தாட்டுணை
குறுகு தொண்டர்பிழை யறம றந்துபிறர்
குணமி கழ்ந்ததக வில்லியைச் சேட்செலும்

எழுபெ ருப்புவன முழுதொ ருங்குதவும்
இறைவி யென்றுமறை கையெடுத் தார்க்கவும்
இடைநு டங்குமட நடையி ளங்குமரி
எனவி ருந்தகன கள்வியைப் பூத்தவென்

இதய புண்டரிக மலரி லெந்தையொடும்
இனித மர்ந்தவொரு செல்வியைப் பாற்றுரும்
இருவர் கண்கள்கது வரிய செஞ்சுடரின்
இடம ருங்குடைய தையலைப் போற்றுதும்

முழுது ணர்ந்துமுணர் வரிய தொன்றையொரு
மொழியின் விண்டசிறு பிள்ளையைச் சூர்ப்பெயர்
முதுப ழம்பகையை யறவெ றிந்தவுணர்
முதற டிந்ததனி வில்லியைப் பாட்டளி
முரல விண்டதரு நிழலெ ழும்புகுடி
புகவ ழங்குகொ டைவள்ளலைப் போற்றடி
முடியு மின்றிவெறு வெளிக டந்துமறை
முடிவி னின்றுநிறை செல்வனைக் காத்தொறும்

மழலை வண்டுதட மலர்கு டைந்துபுது
மதுவ ருந்திநறு மல்லிகைச் சேக்கையின்
வடிப சுந்தமிழி னிசைப யின்றபெடை
யொடுது யின்றினிய செவ்வழிப் பாட்டினை
வருவி பஞ்சிபயி றரும தங்கர்தெரு
மரமு ரன்றுநெடு வைகறைப் போய்ச்செழு
மலரி லஞ்சிதொ று முலவு கந்தபுரி
மருவு கந்தனையெ மையனைக் காக்கவே. (௩)

(இ-ள்.) முழுது உணர்ந்தும் உணர்வு அரியது ஒன்றை ஒரு மொழியின் விண்ட சிறு பிள்ளையை—எல்லாவற்றையும் அறிந்திருந்தும் உணர்வதற்கு அரியதாய் உள்ள ஒன்றாகிய பொருளை ஒரு சொல்லால் வெளிப்படச் சொன்ன சிறிய குழந்தையை;

சூர் பெயர் முது பழ பகையை அற எறிந்து அவுணர் முதல் தடிந்த தனி வில்லியை—சூரன் என்னும் பெயர்பெற்ற களைய முடியாமல் மூத்த பழைய பகையைத் துண்டாகும்படி படையெறிந்து அசுரர் குலமாகிய வேரை அழித்த ஒப்பற்ற வில்லையுடையவனை;

பாட்டு அளி முரல விண்ட தரு நிழல் தொழும்பு குடிபுக வழங்கு கொடை வள்ளலை—பாட்டினை வண்டுகள் ஒலிக்க மலர்ந்த கற்பகச் சோலையின் நிழலிலே (தேவர்களான) அடியவர் குடிபுகும்படி (அந்நிழலை) வழங்கிய கொடையையுடைய வள்ளலை;

போற்று அடி முடியும் இன்றி வெறு வெளி கடந்து மறை முடிவில் நின்று நிறை செல்வனை—போற்றும்படி தோற்றமும் அழிவும் இல்லாமல் (ஒரு பொருளும் இல்லாத) வெட்டவெளியைக் கடந்து நான்மறை முடிவிலே நின்று எங்கும் நிறைந்த செல்வனை;

கா தொறும் மழலை வண்டு தட மலர் குடைந்து புது மது அருந்தி நறு மல்லிகை சேக்கையில் வடி பசு தமிழின் இசை பயின்ற பெடையொடு துயின்று இனிய செவ்வழி பாட்டினை வரு விபஞ்சி பயில்தரு மதங்கர் தெருமர முரன்று நெடு வைகறை போய் செழு மலர் இலஞ்சி தொறும் உலவு கந்தபுரி—பகலிலே சோலை தொறும் இளைய வண்டுகள் பெரிய பூக்களைக் குடைந்து புதிய தேனை உண்டு மாலையிலே நறுமணமுள்ள மல்லிகை மலராகிய படுக்கையில் (குற்றமில்லாமல்) வடிக்கப்பெற்ற செழிய தமிழின் இசையைப் பழகின பெண் வண்டோடு உறங்கி இனிய மாலைப் பண்ணுகிய செவ் வழிப்பண்ணை வழிவழியாய் வருகின்ற யாழினைப் பழகும் பாணரும் மனஞ்சுழலும்படி பாடி நீண்ட வைகறைக் காலத்திலே சென்று செழுமையான பூக்களையுடைய குளந்தொறும் திரிகின்ற கந்தபுரி;

(கந்தபுரி) மருவு கந்தனை எம் ஐயனை காக்க—அத்தகைய கந்தபுரியிலே பொருந்தியுள்ள கந்தனை எமது தலைவனுகிய முத்துக் குமாரனைக் காக்கவேண்டி;

குழை அடர்ந்து வடிகணை துரந்து செறி குமிழ் மறிந்த விழி நவ்வியை—(காதிலணிந்துள்ள) குழை என்னும் அணியை நெருங்கி வடித்த அம்பைத் தனக்கு (உவமையாகாதென்று) துரத்தி (மூக் காகிய) குமிழமலரால் தடுக்கப்பட்ட கண்களையுடைய பெண்மானை;

கோட்டொடு குவடு எறிந்து அமுத கலசம் வென்ற தட முலை சுமந்த மலை வல்லியை—தந்தத்துடன் மலையைத் (தனக்கு உவமை யாகாதென்று) அழித்து அமிழ்த குடத்தை வென்ற பெரிய நகிலைச் சுமந்த மலையிற்றேன்றிய கொடி போன்றவளை;

சேற்று ஒளிர் குமுதம் விண்ட சுவை அமுதம் உண்டு இனிய கொழுநர் கொஞ்சு சிறு கிள்ளையை—(கீழ் உதடாகிய) சேற்றிலே விளங்கும் குமுத மலரில் தோன்றிய சுவைதரும் அமிழ்தத்தை நுகர்ந்து இனிய கணவராகிய சிவபெருமானல் கொஞ்சப்பெறும் சிறு கிளி போன்றவளை;

தாள் துணை குறுகு தொண்டர் பிழை அற மறந்து பிறர் குணம் இகழ்ந்த தகவு இல்லியை—தனது கால்கள் இரண்டினைக் கிட்டும் அடியாரது குற்றத்தை முற்றிலும் மறந்து (அருள்செய்து) தொண்ட ரல்லாதாரது நற்குணத்தை இகழ்ந்த (அவர்க்கு அருள்செய்யாத) தகுதி இல்லாதவளை;

சேண் செலும் எழு பெரு புவனம் முழுது ஒருங்கு உதவும் இறைவி என்று மறை கை எடுத்து ஆர்க்கவும்—சேய்மையிலே திரிகின்ற ஏழாகிய பெரிய உலகங்கள் முற்றிலும் ஒருசேர ஈன்ற தலைமையானவள் என்று நான்கு மறைகளும் கைகளை உயர எடுத்து ஆர்வாரித்துக் கூறவும்;

இடை நுடங்கும் மட நடை இள குமரி என இருந்த கன கள்வியை—இடை அசையும்படி நின்ற இளநடையையுடைய இளைய குமரி என்று சொல்லும்படி இருக்கும் பெரிய கள்வியை;

பூத்த என் இதயம் புண்டரிக மலரில் எந்தை யொடும் இனிது அமர்ந்த ஒரு செல்வியை — மலர்ந்த எனது நெஞ்சத் தாமரை மலரில் எம் தந்தையாகிய சிவபெருமானோடும் இனிதாய் அமர்ந்துள்ள ஒப்பற்ற செல்வமுடையவளை;

பால் தொகும் இருவர் கண்கள் கதுவ அரிய செம் சுடரின் இட மருங்கு உடைய தையலை போற்றுதும்—இரண்டு பக்கத்திலும் சேர்ந்திருக்கும் திருமால் பிரமன் என்னும் இருவருடைய விழிகள் சென்று பற்றுதற்கரிய சிவந்த ஒளிமயமாயுள்ள சிவபெருமானின் இடப்பக்கத்தைத் தனதாக உடைய தையல் நாயகியை யாம் போற்றுவோமாக. (எ—று.)

முடிபு :— *சிறு பிள்ளையை, தனி வில்லியை, கொடை வள்ளலை, நிறை செல்வனை, கந்தனை, எம் ஐயனை காக்க (காக்க வேண்டி) நவ்வியை, மலை வல்லியை, சிறு கிள்ளையை, தக வில்லியை, கன கள்வியை, ஒரு செல்வியை, தையலை (யாம்) போற்றுதும்.*

**(கு—ரை)** தொழும்பர் என்பது தொழும்பு என அர் விகுதி குறைந்து நின்றது; அரசு, அமைச்சுப்போல. 'ஒன்றை' என்றது பிரணவத்தால் உணரப்பெறும் பொருளை. 'ஒருமொழி' என்றது பிரணவத்தை.

இளைய வண்டுகள் பகற்காலத்தே சோலைதொறும் பெரிய மலரைக் குடைந்து மதுவைக் குடித்து மாலைக் காலத்தே மல்லிகைச் சேக்கையில் பெடையொடு துயின்று செவ்வழிப் பாட்டினை முரன்று வைகறையிலே இலஞ்சி தொறும் உலவுதற்கிடமான கந்தபுரி என்று வண்டின் செயலை இவர் கூறியதுபோல்

" காலைப்போய் மதுகரங்கள் கிளைத்தும்பை திளைத்துக்
கடும்பகற்போய் இருகரடக் கடக்கலுழி கவர்ந்து
மாலைப் போய் மதிக்கதிர்கால் அமுதெடுத்து மடுத்து
வைகறை போய்க் கொன்றைபுகு மணிமுடி வாரணமே"

என்று ஒட்டக்கூத்தர் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழில் ஐங்கரன் வணக்கத்துட் கூறியதைக் காண்க.

'பால் தொகும் இருவர்' என்ற பகுதியுடன்

"தேமன்னு தாமரையாள் மகிழ்ந்திருக்கு மார்பின்
திருமாலும் நான்முகனும் இருமருங்கும் சிறந்து
மாமன்னு மணிவரையும் பொன்வரையுங் கிளைத்த
மாணிக்க வரையனைய வானிடைக்கற் பகமே"

(குலோ—I)

என்ற பகுதியை ஒப்பிட்டுக் காண்க.

## கற்பக விநாயகக் கடவுள்
## (வேறு)

தனதன தத்தனத் தந்தனத் தாத்தன

5. கடாமுமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு
கராசல மிட்டமெய்க் கஞ்சுகிக் கேற்பவொர்
படாமணி மத்தகத் தந்தியைத் தீர்த்தர்கள்
பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும்
வடாதுபொ ருப்பினிற் றுன்றுபுத் தேட்கெதிர்
மனோலய முற்றமெய்ப் பண்பினைக் காட்டிய
சடானன னைத்தலைச் சங்கம்வைத் தாற்றிய
சடாயுபு ரத்தருட் கந்தனைக் காக்கவே. (ரு)

(இ-ள்.) வடாது பொருப்பினில் துன்று புத்தேட்கு எதிர் — வடக்கின்கண் உள்ளதாகிய மேரு மலையிலே பொருந்திய தேவர்களுக்கு முன்பு;

மனம் லயம் உற்ற மெய் பண்பினை காட்டிய சாடானனனை — மன அடக்கம் பொருந்திய தனது உண்மை இயல்பைக் காட்டிய ஆறு முகங்களை உடையவனை;

தலைச்சங்கம் வைத்து ஆற்றிய சடாயுபுரத்து அருள் கந்தனை காக்க — முதற் சங்கத்தை வைத்து நடத்திய, சடாயுபுரமாகிய வேளூரிலே உள்ள அருள் தங்கிய கந்தனைக் காக்கவேண்டி;

கடாம் உமிழ் கை கதம் கிம்புரி கோட்டு ஒரு கராசலம் இட்ட மெய் கஞ்சுகிக்கு ஏற்ப ஓர் படாம் அணி மத்தகம் தந்தியை — மத நீரை உமிழ்கின்றதும் தும்பிக்கையையும் சினத்தையும் கிம்புரி என்னும் பூண் அணிந்த தந்தத்தினையும் உடையதும் ஆகிய யானைத் தோலால் உடம்பிலே தரித்திட்ட சட்டையையுடைய சிவபெருமானுக்கு ஏற்ப ஓர்முக படாத்தை அணிந்துள்ள மத்தகத்தையுடைய யானைமுகக் கடவுளை;

தீர்த்தர்கள் பராவு அரு கற்பகம் கன்றினை போற்றுதும் — தூய தொண்டரால் வழிபடப்பெறும் அரிய கற்பகக் கணபதியை யாம் போற்றுவோம். (எ-று.)

முடிபு :— பொருப்பினில் துன்று புத்தேட்கு எதிரே பண்பினைக் காட்டிய சடானனனை, சங்கம் வைத்து ஆற்றிய கந்தனைக் காக்க, கஞ்சுகிக்கு ஏற்ப படாம் அணி மத்தகத்தந்தியை தீர்த்தர்கள் பராவுகன்றினைப் (யாம்) போற்றுதும்.

(கு-ரை) கற்பக விநாயகர் என்னும் பெயர் தலவிநாயகர்க்குரியது.

## நான்முகன்

### (ஆசிரிய விருத்தம்)

6. பைங்காற் கமுகு செம்பழுக்காய்ப்
பவள முதிர்ப்பக் கதிர்ச்செந்நெல்
பனிமுத் துகுக்குஞ் சோணாட்டின்
பரிசு பாடி ஞிமிறிரைப்பக்

கொங்கார்த் திறைக்கு நறைக்காந்தள்
குறிஞ்சி மலரோ டணிந்தநறுங்
குஞ்சிப் பெருமாள் வேதபுரிக்
குமரப் பெருமா டனைக்காக்க

செங்காற் கருங்கட் பைந்தொடியார்
சிற்றாய்ப் பாடிப் பெருங்குடியில்
தீம்பா றிருடிக் கட்டுண்டு
திரியா வண்ணந் திருத்தாதைக்

கங்காப் படங்கப் பாறயிர்நெய்
அருந்தேன் கடலோ டிருந்துண்ண
அகிலம் படைத்துத் தனக்கேற
அன்னம் படைத்த பெருமாளே. (ரு)

(இ-ள்.) செம் கால் கரு கண் பை தொடியார் சிறு ஆய்ப்பாடி பெரு குடியில்—சிவந்த கால்களையும் கரிய கண்களையும் பசிய வளையலையும் உடைய பெண்கள் வாழும் சிறிய ஆயர்பாடியிலுள்ள பெரிய குடிகளில்;

தீம் பால் திருடி கட்டுண்டு திரியா வண்ணம்—இனிய பாலைத் திருடி (அதனால்) கட்டப்பெற்று (மேலும் அதனைக் கருதித்) திரியாதபடி;

திரு தாதைக்கு அங்காப்பு அடங்க பால் தயிர் நெய் அரு தேன் கடலோடு இருந்து உண்ண அகிலம் படைத்து—தனது உயர்ந்த (திருமாலாகிய) தந்தைக்கு (உண்ணும் விருப்பால்) திறந்த வாய் அடங்கவேண்டிப் பால் தயிர் நெய் அரிய தேன் என்னும் கடல்களோடு பின் அமைந்திருந்து உண்ண உலகங்களையெல்லாம் தோற்றுவித்து;

தனக்கு ஏற அன்னம் படைத்த பெருமாள்—தனக்கு ஏறிக் கொள்வதற்கு அன்னப் பறவையைப் படைத்த பிரமனாகிய பெருமாள்; (தனக்குத் தகுதியாக உண்ணும் அன்னத்தைப் படைத்துக்கொண்ட என்றும் பொருள் கொள்ளக் கிடந்தது)

பை கால் கமுகு செம் பழுக்காய் பவளம் உதிர்ப்ப கதிர் செம் நெல் பனி முத்து உகுக்கும் சோணாட்டின் பரிசு பாடி ஞிமிறு இரைப்ப—பசிய அடிப்பகுதியையுடைய பாக்குமரமானது சிவந்த பழுத்த காயாகிய பவளத்தைச் சிந்த கதிரையுடைய செந் நெற்கள் குளிர்ந்த முத்தைச் சிந்துகின்ற சோழ நாட்டின் இயல்பைப் பாடி வண்டு ஆரவாரிப்ப;

கொங்கு ஆர்த்து இறைக்கும் நறை காந்தள் குறிஞ்சி மலரோடு அணிந்த நறு குஞ்சி பெருமாள்—தேனைப் பொருந்தி சிந்துகின்ற நறுமணமுள்ள காந்தள் மலரைக் குறிஞ்சிப் பூவுடன் அணிந்து கொண்டுள்ள நறிய மயிர்முடியையுடைய பெருமாள்;

வேதபுரி குமரன் பெருமாள் தனை காக்க — வேதபுரியிலே வாழும் குமரனாகிய பெருமாளைக் காப்பாராக. (எ—று.)

முடிபு :— ஆய்ப்பாடிப் பெருங்குடியில் பால் திருடி கட்டுண்டு திரியா வண்ணம் தாதைக்கு அங்காப்படங்க பால் தயிர் நெய் தேன் கடலோடு இருந்து உண்ண அகிலம் படைத்து தனக்கு ஏற அன்னம் படைத்த பெருமாளாகிய (பிரம தேவன்) நறுங் குஞ்சிப் பெருமாளாகிய குமரப் பெருமாள் தனைக் காக்க.
I. அடி. பைங்காய்க்கமுகு. (பா—ம்.)

## தேவேந்திரன்
### (வேறு)

7. கானாறு கற்பகக் காவுமூ வுலகுமக்
காவென நிழற்றுமொற்றைக்
கவிகையுங் குணதிசைக் காவலும் பிறவுமுள
காணியுங் காணியாக

வானாறு கோட்டிமய மலைவயிறு வாய்த்ததலை
மகளுக்கு மணமகற்கும்
மருமகளை யுரியதன் றிருமக ளெனப்பெற்ற
மாமடிக ளைத்துதிப்பாம்

பானாறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென்
பைங்குவளை வாய்குதட்டும்
பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம்
பாலாறு பங்கயச்செந்

தேனாறு டன்கடவுள் வானா றெனப்பெருகு
சித்தாமிர் தஞ்சிவபிரான்
சீர்த்திப்ர தாபநிகர் தினகர புரித்தேவ
தேவனைக் காக்க வென்றே. (சு)

(இ–ள்.) பால் நாறு செம் நெல் பசு கதிர் கறித்து மெல் பை குவளை வாய் குதட்டும் பணை மருப்பு எருமை—பால் பிடித்த இளங் கதிர் விளங்கும் செந்நெல்லின் பச்சைக் கதிரைத் தின்று மென்மை யும் பசுமையும் வாய்ந்த குவளையை வாயிலே மெல்லுகின்ற பருத்த கொம்புகளையுடைய எருமையானது;

மடு மடி மடை திறந்த தீம் பால் ஆறு பங்கயம் செம் தேனு றுடன் கடவுள் வான் ஆறு என பெருகு சித்தாமிர்தம்—மடுவின் கண் மடியின் மடையைத் திறந்ததால் பெருகும் இனிய பாலாறுனது தாமரையினது சிவந்த தேனுறுடன் தெய்வத்தன்மை வாய்ந்த ஆகாய கங்கையைப்போல் பெருகிநிற்கும் சித்தாமிர்தம் என்னும் தீர்த்தமானது;

சிவபிரான் சீர்த்தி ப்ரதாபம் நிகர் தினகர புரி தேவ தேவனை காக்க என்று — (பாலினது வெண்ணிறத்தையும் தேனினது செந் நிறத்தையும் பெற்றிருப்பதால் சிவபெருமானது வெண்ணிறமான) மிகுபுகழையும் (செந்நிறமான) பிரதாபத்தையும் நிகர்வதற்கிடமான தினகரபுரியிலே எழுந்தருளியுள்ள தேவர்களுக்குத் தேவனுன முருகனைக் காக்கவேண்டும் என்று கருதி;

கான் நாறு கற்பகம் காவும் மூ உலகும் அ கா என நிழற்றும் ஒற்றை கவிகையும் குண திசை காவலும் பிறவும் உள காணியும் காணி ஆக—மணம் வீசும் கற்பகச் சோலையும் மூன்று உலகத்திலும் அச்சோலையென நிழலைச் செய்யும் ஒன்ருகிய வெண்கொற்றக் குடையும் கீழ்த்திசைக் காவலும் பிறவும் உளவாகிய உரிமைப் பொருள்களெல்லாம் (தனக்கே) உரிமையாகவேண்டி;

வான் நாறு கோட்டு இமயம் மலை வயிறு வாய்த்த தலை மக ளுக்கும் மணமகற்கும் மருமகளை உரிய தன் திருமகள் என பெற்ற மாமடிகளை துதிப்பாம்—ஆகாயத்தே விளங்கும் சிகரத்தையுடைய பனிமலையானது பெற்ற முதல் மகளாகிய உமாதேவிக்கும் (அத் தேவிக்கு) மணமகனுகிய சிவபெருமானுக்கும் மருமகளாயுள்ள தெய்வ யானையை உரிமையான தனது அழகிய மகளாகப்பெற்ற மாமனுகிய முதல்வனை யாம் புகழ்வாம். (எ–று.)

முடிபு:— நெல் கதிர் கறித்து குவளை வாய் குதட்டும் எருமையானது மடுவிலே மடைதிறந்த பாலாறுனது பங்கயத் தேனுறுடன் வானுறெனப் பெருகு சித்தாமிர்தம்; அச்சித்தா மிர்தமானது சிவபிரான் சீர்த்தியையும் பிரதாபத்தையும் நிகரும் தினகரபுரி; அப்புரியிலே உள்ள தேவதேவனைக் காக்க என்று கற்பகக் காவும் கவிகையும் காவலும் காணியும் காணியாக தலை மகளுக்கும் மணமகற்கும் மருமகளை தன் திருமகளெனப் பெற்ற மாமடிகளை (யாம்) துதிப்பாம்.

## திருமகள்.

௭. மானிறக் கடவுடிரு மறுமார்பி னறவிரி
வனத்துழாய்க் காடுமூடி
மாயிருள் வழங்குதன் றிருமாளி கைக்கந்தண்
மணிவிளக் கிட்டுமுட்டாட்

காணிறைக் குங்கபல வீட்டுக்கு நெட்டிதழ்க்
கதவந் திறந்தளித்தும்
காதன்மை காட்டுங் கவுத்துவத் துடன்வந்த
கன்னிகையை யஞ்சலிப்பாம்

மீனிறப் புணரியை விழுங்குங் கடற்றானை
வெள்ளமொடு கள்ளமனமும்
மெய்யுமிரு ளத்திரளு மவுணக் கருங்கங்குல்
விடியக் கடுங்குரல்விடும்

தீநிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்துவண்
சிறைமயிற் பரிநடாத்தும்
சேவகப் பெருமானை வேதபுரி வருமிளஞ்
சேயைப் புரக்கவென்றே. (எ)

(இ-ள்.) மீன் நிறம் புணரியை விழுங்கும் கடல் தானை வெள்ள மொடு கள்ளம் மனமும் மெய்யும் இருள திரளும் அவுணர் கரு கங்குல்—மீன்களுடன் கூடிய நிறம்பொருந்திய கடலினை விழுங்குகின்ற வேறொரு கடல் என்னும்படியான சேனைப் பெருக்குடன் வஞ்சகம் வாய்ந்த மனமும் உடலும் இருண்டு தோன்றத் திரண்ட அசுரராகிய கருத்த இராப்பொழுது;

விடிய கடு குரல் விடும் தீ நிறம் குடுமி வெண் சேவலை உயர்த்து வள் சிறை மயில் பரி நடாத்தும் சேவகன் பெருமானை—விடிவதற்கு அறிகுறியாக கடிய குரலை வெளிவிடுகின்ற நெருப்புப்போன்ற நிறம் வாய்ந்த உச்சிக்கொண்டையையுடைய வெண்மையான சேவலைக் (கொடியாக) உயரச்செய்து வளப்பமான சிறகினையுடைய மயிலாகிய ஊர்தியை நடத்துகின்ற வீரனாகிய பெருமானை;

வேதபுரி வரும் இள சேயை புரக்க என்றே—வேதபுரியிலே பண்டுதொட்டு எழுந்தருளிவரும் இளைய குழந்தையை காக்க வேண்டும் என்று;

மால் நிறம் கடவுள் திரு மறு மார்பில் நற விரி வனம் துழாய் காடு மூடி மா இருள் வழங்கும் தன் திரு மாளிகைக்கு — மேகம் போன்ற நிறம் வாய்ந்த கடவுளாகிய திருமாலது அழகிய ஸ்ரீவத்ஸம்

என்னும் மறுவையுடைய மார்பிலே மணம் விரியும் அழகிய துளப மாகிய காடானது மூடி கரிய இருளைத் தந்த தனது அழகிய மாளிகைக்கு;

அம் தண் மணி விளக்கு இட்டும் முள் தாள் கான் நிறைக்கும் கமலம் வீட்டுக்கு நெடு இதழ் கதவம் திறந்து அளித்தும் காதன்மை காட்டும் கவுத்துவம்—அழகும் குளிர்ச்சியும் உள்ள மாணிக்கமாகிய விளக்கை வைத்தும் முள்ளோடு கூடிய தண்டினையுடைய மணத்தை நிறைக்கும் செந்தாமரை மலராகிய வீட்டிற்கு நீண்ட இதழாகிய கதவினைத் திறந்து கொடுத்தும் (உடன் பிறந்தாருக்குரிய) அன்பினைக் காட்டுகிற கவுத்துவ மணி;

(கவுத்துவத்துடன்) வந்த கன்னிகையை அஞ்சலிப்பாம்—அத்தகைய கவுத்துவமணியுடன் பிறந்த அழிவற்ற திருமகளை கைகூப்பி வணங்குவாம். (எ—று.)

முடிபு :— அவுணராகிய கங்குல் விடிய குரல் விடும் சேவலை உயர்த்து மயிற்பரி நடாத்தும் பெருமாளை சேயை புரக்க என்றே, கடவுள் மார்பில் துழாய்க் காடு மூடி இருள் வழங்கும் தனது திருமாளிகைக்கு மணிவிளக்கிட்டும் கமல வீட்டுக்கு இதழ்க் கதவம் திறந்தும் காதன்மை காட்டும் கவுத்துவத்துடன் வந்த கன்னிகையை (யாம்) அஞ்சலிப்பாம்.

### கலைமகள்.

9. துறைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன்
சுவைநிறஞ் சிதைவுறுமே
தொன்மறை கனிந்தூறு மன்பனீ ரூறலிற்
றூத்துகி னனைப்புறுமே

நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டெமது
நன்னெஞ் செனக்குடிபுகும்
ஞானப் பிராட்டியைச் சொற்கடற் றெள்ளமுதை
நாத்தழும் பத்துதிப்பாம்

சிறைபட்ட தண்டுறைச் சித்தாமிர் தப்பெருந்
தீர்த்தந் திளைத்தாடிய
செஞ்சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளிற்
றெள்ளமுத மயமாகலான்

உறைபட்ட சுதைநிலவொ டிளவெயி லுமளவளாய்
உண்ணச் சகோரம்வெஃகும்
ஓங்கெயிற் பருதிபுரி முருகனைச் சண்முகத்
தொருவனைக் காக்கவென்றே (அ)

(இ-ள்) சிறை பட்ட தண் துறை சித்தாமிர்தம் பெருதீர்த்தம் திளைத்து ஆடிய செம் சுடர் கடவுளும்—கரை செய்யப்பெற்ற குளிர்ந்த துறையையுடைய சித்தாமிர்தம் என்னும் பெயர் வாய்ந்த தீர்த்தத்திலே நன்கு படிந்து நீராடிய சிவந்த ஒளியையுடைய ஞாயிறுகிய கடவுளும்;

வெள் சுடர் கடவுளில் தெள் அமுதம் மயம் ஆகலான்- -வெண்மையான ஒளியையுடைய திங்களாகிய கடவுளைப்போல (தீர்த்த விசேடத்தால் தன் வடிவு முற்றும்) அமிழ்த வடிவமாகவே ஆகி நின்றமையால்;

உறை பட்ட சுதை நிலவொடு இள வெயிலும் அளவளாய் உண்ண சகோரம் வெஃகும் ஓங்கு எயில் பருதி புரி—துளித்தலைப் பெற்ற அமிழ்த மயமான (திங்களின்) நிலவொடு (ஞாயிற்றின்) இளம் வெயிலையும் கலந்து உண்ணுவதற்குச் சகோரப் பறவை விரும்புதற்கிடமான ஓங்கிய மதிலையுடைய சூரியனுடைய நகரமாகிய வேளூர்;

(பருதிபுரி) முருகனை சண்முகத்து ஒருவனை காக்க என்றே—அத்தகைய பருதிபுரியிலுள்ள முருகக் கடவுளை ஆறு முகத்தையுடைய ஒன்றாகியவனைக் காக்க வேண்டுமென்று;

துறை பட்ட மறையவன் செம் நா படிந்து தன் சுதை நிறம் சிதைவு உருமே—பல்வகைப் பொருட்டுறைகளையுடைய மறையை யுடைய பிரம்ம தேவனது சிவந்த நாவிலே தங்கி (அதனால்) தனது வெண் நிறம் அழிதலைப் பெருமலும்;

தொல் மறை கனிந்து ஊறும் மன் பல் நீர் ஊறலில் தூ துகில் நனைப்பு உருமே — பழமையாகிய வேதங்கள் முதிர்ந்து சுரக்கும் பலவாகிய பல்லொடு கூடிய நீர் ஊற்றெடுப்பதால் (தனது) வெண்மையான ஆடை நனைதலை அடையாதபடியும்;

நறை பட்ட வெள் தோட்டு நளினம் பொகுட்டு எமது நல் நெஞ்சு என குடி புகும் ஞானம் பிராட்டியை சொல் கடல் தெள் அமுதை நா தழும்ப துதிப்பாம்—மணம் பொருந்திய வெள்ளிய இதழையுடைய தாமரைப் பொகுட்டில் எம்முடைய தூய மனத்தி லிருப்பதுபோல் குடி புகுகின்ற, அறிவைத் தரும் பெருமாட்டியை சொல்லாகிய கடலிடத்தே தோன்றிய தெளிவாகிய அமிழ்தத்தை நாவிலே தழும்பு ஏறும்படி (யாம்) புகழ்ந்து பரவுவாம். (எ-று.)

முடிபு :—*சித்தாமிர்தத் தீர்த்தத்தில் திளைத்து ஆடிய செஞ் சுடர்க் கடவுளும் வெண்சுடர்க் கடவுளைப்போல அமுதமயம் ஆகலான் நிலவொடு வெயிலும் அளவளாய் உண்ணச் சகோரம் வெஃகும் பருதிபுரி முருகனை, ஒருவனைக் காக்க என்று, மறை யவன் செந்நாப் படிந்து தனது சுதை நிறம் சிதைவுருமே, பல்*

நீர் ஊறலில் துகில் நனைப்புறுமே, வெண்டோட்டு நளினப் பொகுட்டில் எமது நெஞ்செனக் குடிபுகும் பிராட்டியை அமுதைநா தழும்ப (யாம்) துதிப்பாம்.

(கு—ரை) புள்ளிருக்கும் வேளூரிலுள்ள சித்தாமிர்தம் என்னும் தீர்த்தமானது சித்தர்கள் வைத்தியநாதப் பெருமானை ஆட்டிய தேவாமிர்தக் கலப்புடையதாதலின் அதில் நீராடிய சூரியனும் திங்களைப்போல் அமுதமயன் ஆவன் என்றார். 'அண்பல் நீர்' என்பதும் பாடம்.

ஏழு கன்னியர்.

(சந்த விருத்தம்.)

தன தன தனதன தானத் தனத்தன

10. பயிறரு முதுமறை நூலைத் தெரித்தவள்
பகைதொகு புரமெரி மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்விற் குனித்தவள்

எயிறுகொ டுழுதெழு பாரைப் பெயர்த்தவள்
எறிதரு குலிசம்வி டாமற் றரித்தவள்
இடுபலி கொளுமொர்க பாலக் கரத்தினள்
எனுமிவ ரெழுவர்க டாளைப் பழிச்சுதும்

கயறிரி சரவண வாவிக் கரைக்குரை
கழலொடு பரிபுர மோலிட் டிடக்கட
களிறொடு களிறெதிர் மோதத் திசைத்திசை
கடுநடை யுளதகர் ரேறச் சமர்த்தனை

முயறரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு
முழுமதி குறைமதி யாகத் துகிற்கொடி
முகிலொடு தடமதில் வேதப் பதித்தனி
முதல்வனை யறுமுக வேளைப் புரக்கவே. (௧௦)

(இ-ள்) கயல் திரி சரவணம் வாவி கரை—கயல் மீன்கள் திரியும் சரவணப் பொய்கையின் கரையிலே;

குரை கழலொடு பரிபுரம் ஒல் இட்டிட — இசைக்கும் வீரக் கழலுடன் சிலம்பு ஓலம் செய்ய;

கடம் களிறொடு களிறு எதிர் மோத திசை திசை கடு நடை உள தகர் ஏற சமர்த்தனை—மதத்தையுடைய ஆண் யானையோடு ஆண் யானையை எதிரே மோதவிட்டுத் திசைதோறும் செல்லும்படி விரைவான நடையுள்ள ஆட்டுக் கடாவினை ஏறிச் செலுத்துதற்கு வல்லமையுடையவனை;

முயல்தரு கறையொடு தேய்வு உற்று இளைத்து ஒரு முழு மதி குறை மதி ஆக துகில் கொடி முகில் தொடு தட மதில் வேதம் பதி தனி முதல்வனை அறுமுகம் வேளை புரக்க—முயல் தந்த மறுவுடனே தேய்தலைப் பொருந்தி மெலிந்து ஒரு முழுத்திங்கள் குறைத் திங்களாகும்படி துகிலையுடைய கொடிகள் முகிலுடன் கூடிய வானத்தைத் தொடுவதற்கிடமான பெரிய மதில் சூழ்ந்த வேதபுரியிலுள்ள ஒப்பற்ற முதன்மையானவனை ஆறு முகத்தையுடைய செவ்வேளைக் காக்கவேண்டி;

பயில் தரு முதுமறை நூலை தெரித்தவள் — உலகத்தில் வழங்கும் பழைய வேதமாகிய நூலினை உணர்த்தின அபிராமியும்;

பகை தொகு புரம் எரி மூள சிரித்தவள்—பகைவர் கூடியுள்ள முப்புரத்தில் நெருப்புப் பற்றும்படி நகைத்தருளிய மாகேசுவரியும்;

பனி வரை பக நெடு வேலை பணித்தவள்—குளிர்ந்த கிரௌஞ்ச மலை பிளக்க நீண்ட வேலைச் செலுத்திய கௌமாரியும்;

படு கடல் புகை எழ வார் வில் குனித்தவள்—ஒலிக்கின்ற கடலில் புகை தோன்றும்படி கட்டுதல் அமைந்த வில்லை வளைத்த நாராயணியும்;

எயிறு கொடு உழுது எழு பாரை பெயர்த்தவள்—தனது பல்லினால் தோண்டி ஏழு உலகங்களை (மேலே வரும்படி) பெயர்த்தெடுத்தவாராகியும்;

எறி தரு குலிசம் விடாமல் தரித்தவள்—வீசுதற்குரிய வச்சிரப் படையை விடாமல் தரித்த இந்திராணியும்;

இடு பலி கொளும் ஓர் கபாலம் கரத்தினள் — இடப்பெறும் பிச்சையைக்கொள்ளும் ஓர் மண்டையை யேந்திய கரத்தையுடைய காளியும்;

எனும் இவர் எழுவர்கள் தாளை பழிச்சுதும்—என்று சொல்லும் இவ் எழுவரது திருவடியை (யாம்) புகழ்ந்து பரவுவோம். (எ-று)

முடிபு :— சரவண வாவிக் கரையில் கழலொடு பரிபுரம் ஒலிட்டிட களிறொடு களிறு மோத தகர் ஏற சமர்த்தனை, முழு மதி முயல் கறையொடு தேய்வுற்று இளைத்து குறை மதி ஆக கொடியானது முகிலைத் தொடு மதில் வேதப்பதி முதல்வனை, வேளை புரக்க, மறை நூலைத் தெரித்தவள், புரம் எரிமூளச் சிரித்தவள், வரைபக வேலைப் பணித்தவள், கடல் புகையெழ வில் குனித்தவள், எயிறுகொடு உழுது பாரைப் பெயர்த்தவள், குலிசம் விடாமல் தரித்தவள், பலிகொளும் கபாலக் கரத்தினள், எனும் எழுவர் தாளைப் பழிச்சுதும்.

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்.

(வேறு)

தனத்தன தனத்தன தனத்தன தனத்தனன
தத்தத் தனத்தான தானதன தத்தன

11. முறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு
சொர்க்கத் தலத்தோடு சேடசய னத்தையும்
முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்தவர்த
மக்குக் கொடுத்தானை மாதிரமொ ரெட்டையும்
இறைப்பொழு தினிற்பொடி படுத்தருள் கொடுக்கவல
சத்திக் கரத்தானை யூதியமெ னத்தனை
இருப்பினு நடப்பினு நினைப்பவ ரிருக்கவெமர்
சித்தத் திருப்பானை யாறிருபு யத்தனை
வெறுப்பொடு விருப்பினை யறுத்தவ ருளத்துமலர்
பத்மப் பதத்தானை வேதபுரி யிற்சின
விடைக்கொடி வலத்தினு மடக்கொடி யிடத்துமுள
முக்கட் டிருத்தாதை யார்பணிகு ருக்களை
மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையும்
ஒக்கப் படைத்தானை மூவிருமு கத்தனை
மருத்துவர் வசுக்கதி ருருத்திர ரெனப்பொலியு
முப்பத் துமுக்கோடி தேவர்கள்பு ரக்கவே. (க0)

(இ-ள்.) முறுக்கு உடை நறை சதம் தளம் திரு மலர் தவிசு சொர்க்கம் தலத்தோடு சேஷன் சயநத்தையும் முடி தலை அடி தலை பதித்து எதிர் துதித்தவர் தமக்கு கொடுத்தானை—கட்டு அவிழ்ந்த மணத்தையும் நூறு இதழ்களையும் உடைய அழகிய செந்தாமரை மலராகிய பிரம்ம பீடமும் (இந்திரனது) சுவர்க்க உலகமும் ஆகிய இவற்றோடு திருமாலுக் குரிய ஆதி சேஷ சயநத்தையும் முடியாகிய இடத்தைத் (முருகனது) அடியாகிய இடத்தே பதியவைத்துத் திரு முன்பே புகழ்ந்தவராகிய அடியார்க்குக் கொடுத்தவனை;

மாதிரம் ஓர் எட்டையும் இறை பொழுதினில் பொடிபடுத்து அருள் கொடுக்க வல்ல சத்திக் கரத்தானை — திக்குகள் ஓர் எட்டினையும் சிறிது பொழுதினில் நீறு செய்து (பின் சிறிது நேரத்தில்) அவற்றிற்கு அருள்தர வல்ல வேலை ஏந்திய கையையுடையவனை;

ஊதியம் என தனை இருப்பினும் நடப்பினும் நினைப்பவர் இருக்க எமர் சித்தத்து இருப்பானை—இதுவே பயன் என்று தன்னை (முருகனை) உட்கார்ந்திருந்தாலும் நடந்தாலும் எண்ணுபவராகிய சிறந்த தொண்டரெல்லாம் இருக்கவும் (அங்ஙனம் சிறவாத) எம் போன்றவரது நெஞ்சத்திலே இருப்பவனை;

ஆறு இரு புயத்தனை—பன்னிரண்டாகிய தோள்களை உடையவனை;

வெறுப்பொடு விருப்பினை அறுத்தவர் உளத்து மலர் பத்மம் பதத்தானை—ஒரு பொருளை வெறுத்தலுடனே விரும்புதலை ஒழித்தவரது நெஞ்சிலே மலர்கின்ற தாமரை மலர்போன்ற திருவடியையுடையவனை;

வேதபுரியில் சினம் விடை கொடி வலத்தினும் மடம் கொடி இடத்தும் உள முகண் திரு தாதையார் பணி குருக்களை—வேதபுரியிலே வெகுளி தங்கிய இடபத்தையுடைய கொடி வலப்புறத்திலும் இளைய கொடிபோன்ற உமாதேவி இடப்புறத்திலும் உள்ள மூன்று விழிகளையுடைய அழகிய தந்தையாராகிய சிவபெருமானால் வணங்கப்பெறும் ஆசிரியனை;

மறை கிழவனை தலை புடைத்து உலகு அனைத்தினையும் ஒக்க படைத்தானை மூ இரு முகத்தனை—வேதத்திற்குரிய பிரமதேவனைத் தலையிலே குட்டி உலகமெல்லாவற்றையும் ஒருசேரத் தோற்றுவித்தவனை ஆறு முகத்தையுடையவனை;

மருத்துவர் வசு கதிர் உருத்திரர் என பொலியும் முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்க—தேவ மருத்துவராகிய அசுவினி தேவர் இருவரும், எட்டு வசுக்களும், பன்னிரண்டு சூரியரும் பதினொரு உருத்திரரும் என்று சொல்லப்பெறும் முப்பத்து மூன்று கோடி தேவர்கள் காப்பாராக. (எ-று)

முடிபு :— மலர்த்தவிசு சொர்க்கத் தலத்தோடு சேட சயனத்தையும் பதித்துத் துதித்தவர் தமக்குக் கொடுத்தானை, பொடி படுத்து கொடுக்கவல சத்திக் கரத்தானை, என நினைப்பவர் இருக்க எமர் சித்தத்திருப்பானை, ஆறிரு புயத்தனை, அறுத்தவர் உளத்து மலர் பத்மப் பதத்தானை, உள தாதையார் பணி குருக்களை, புடைத்துப் படைத்தானை, மூவிரு முகத்தனை என பொலியும் முப்பத்து முக்கோடி தேவர்கள் புரக்க.

---

## உ. செங்கீரைப் பருவம்.

(ஆசிரிய விருத்தம்)

12. இருக்கோ லிடும்பரி புரக்கோல முந்நுதலில்
இட்டபொட் டுஞ்சுட்டியும்
எரிமணிப் பட்டமுங் கட்டுபொன் னரைஞாணும்
இளஞாயி றுதயஞ்செயும்

உருக்கோல முஞ்சூழி யக்கொண்டை யும்முச்சி
உச்சியும் வாளிமுத்தும்
ஒள்ளொளி ததும்புங் குதம்பையுங் கண்டுகண்
டோடரிக் கண்களிக்கும்
பருக்கோல நீலக் குழற்றுறைய லாட்கரு
மருந்தா யிருந்ததெய்வ
மகக்கோல மேமுதிர் கிழக்கோல மாய்க்குற
மடந்தைமு னடந்துமற்றத்
திருகோல முடனொரு மணக்கோல மானவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (க)

முருகனுடைய மகக்கோலம் கிழக்கோலமும் மணக்கோலமும் ஆனசெய்தி கூறப்பெறுகின்றது.

(இ-ள்.) இருக்கு ஒலிடும் பரிபுரம் கோலமும் — வேதங்கள் ஒலித்தலைச் செய்யும் கால் அணிகளின் அழகினையும்;

நுதலில் இட்ட பொட்டும்—நெற்றியில் வைத்த பொட்டினையும்;

சுட்டியும்—(நெற்றியருகே அணியப்பெறும் முத்தினுற் செய்த) சுட்டியென்னும் அணியினையும்;

எரி மணி பட்டமும்—ஒளி வீசும் மாணிக்கம் பதித்த நெற்றிப் பட்டத்தினையும்;

கட்டு பொன் அரை ஞாணும் — கட்டப்பெறும் பொன்னுற் செய்த இடைக்கயிற்றினையும்,

இள ஞாயிறு உதயம் செயும் உரு கோலமும்—தோன்றுதலைச் செய்யும் இளைய சூரியன் போன்ற திருவுருவத்தின் அழகினையும்;

சூழியம் கொண்டையும் — (சூழ்ந்துள்ள) சூழியம் என்னும் கொண்டையினையும்;

முச்சி உச்சியும்—உச்சிக்கொண்டையினையுடைய உச்சியையும்;

வாளி முத்தும்—முத்தினுற் செய்த வாளி என்று பெயர் கூறப் பட்ட மேற் காதணியினையும்;

ஒள்ளொளி ததும்பும் குதம்பையும்—மிக்க வொளி துளும்புகின்ற குதம்பை என்னும் காதணியினையும்;

கண்டு கண்டு ஓடு அரி கண் களிக்கும் மரு கோலம் நீலம் குழல் தையலாட்கு—நோக்கி நோக்கிப், படர்ந்த செவ்வரியினையுடைய கண்கள் மகிழப்பெறும், மணமும் அழகும் நீல நிறமும் பொருந்திய கூந்தலையுடைய தையல் நாயகியார்க்கு:

அரு மருந்து ஆய் இருந்த தெய்வம் மக கோலம் ஏ — அரிய அமுதமாய் இருந்த தெய்வத் தன்மை வாய்ந்த குழந்தை வடிவந் தானே;

முதிர் கிழம் கோலம் ஆய் குறம் மடந்தை முன் நடந்து—மூத்த கிழ வடிவம் ஆகிக் குறச்சாதியில் வளர்ந்த பெண்ணாகிய வள்ளி நாயகியாரின் முன் சென்று;

மற்று அ திருக்கோலமுடன் ஒரு மணம் கோலம் ஆனவன் செங்கீரை ஆடி அருள் ஏ — பின் அந்தக் கிழக்கோலத்துடனே (வள்ளியை மணக்கும்) மண வடிவத்தைப் பெற்றவனே! செங்கீரை ஆடி அருள்க;

செத்து பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள செங்கீரை ஆடி அருள் ஏ—இறந்துப் பின் தோன்றுகின்ற தெய்வங்களுக்கெல்லாம் தலைவனே! செங்கீரை ஆடி அருள்க. (எ—று)

முடிபு:— பரிபுரக் கோலம் முதலானவற்றைக் கண்டு கண்டு கண் களிக்கும் தையலாட்கு அருமருந்தாயிருந்த மகக் கோலமே கிழக்கோலமாய் மடந்தை முன் நடந்து அக்கோல முடன் மணக்கோலம் ஆனவனே செங்கீரை ஆடுக.

(கு—ரை.) இறந்து இறந்து பிறக்கின்ற அமங்கலமான கடவுளர்கட்கு அவ் அமங்கல மில்லாத முருகக் கடவுளே தெய்வமாதலின் 'செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள' என்றார்.

13. கும்பாதி காரிய மௌனத்தமை நிமித்தமாக்
கொண்டவகி லாண்டங்களின்
குழுவுக்கு மற்றுத்த மிருவர்குறி யுந்தலைக்
கூடினுந் தான்றனக்கச்

சொம்பாதி யன்மைக் கனைத்துந்தன் மயமெனும்
சுருதிகரி யாவைத்துமச்
சுருதிக்கு மெரிசுடர்ப் பருதிக்கு மிரவிகுல
தோன்றற்கு மிளவலுக்கும்

சம்பாதி யொடுநற் சடாயுவுக் கும்பெருந்
தவமுனிவ ரெழுவருக்கும்
தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த
தம்பிரான் றிருமேனியிற்

செம்பாதி யுங்கொண்ட தையனு யகிகுமர
செங்கீரை யாடி யருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (உ)

எ.தயல் நாயகி அம்மையின் வல்லபங் கூறப்பெறுகின்றது.

(இ-ள்.) கும்பம் ஆதி காரியம் என—குடம் முதலான காரியப் பொருள்கள் (தமக்கு நிமித்த காரணத்தைப் பெற்றிருப்பது) போல;

தமை நிமித்தம் ஆ கொண்ட அகிலம் அண்டங்களின் குழுவுக்கு—(சிவம் சத்தியாகிய) தங்களை நிமித்த காரணமாகக்கொண்ட எல்லா உலகங்களின் கூட்டத்திற்கு;

தம் இருவர் குறியும் தலைக்கூடினும் — (சிவம், சத்தி என்னும்) இருவர்தம் அடையாளங்களும் (அப்பொருள்களிடத்தே) சேர்ந்திருந்தாலும்;

தான் தனக்கு அ சொம் பாதி அன்மைக்கு — (சத்தியாகிய) தான் தனக்கு அப்பொருள்கள் (முற்றிலும் உரியதாகுமே அல்லாமல்) பாதி அளவே உண்டு என்று சொல்லாமைக்கு;

அனைத்தும் தன் மயம் எனும் சுருதி கரி ஆ வைத்தும் — 'சர்வம் சத்திமயம்' என்னும் மறை மொழியைச் சான்ருக வைத்தும் (அதற்கு மேலும்);

அ சுருதிக்கும் எரிசுடர் பருதிக்கும் இரவி குலம் தோன்றற்கும் இளவலுக்கும் சம்பாதியொடு நல் சடாயுவுக்கும் பெரு தவம் முனிவர் எழுவருக்கும் தண் அளி சுரந்திட்ட தீராத வினை தீர்த்த தம்பிரான் திரு மேனியில் செம்பாதியும் கொண்ட தையல் நாயகி குமர — அம்மறைக்கும், எரியும் வெயிலையுடைய சூரியனுக்கும், சூரிய குலத்திலே தோன்றிய இராமனுக்கும், அவன் தம்பியாகிய இலக்குவனுக்கும், சம்பாதி சடாயு என்னும் (பறவையரசர்கட்கும்), பெரிய தவத்தையுடைய ஏழு முனிவர்கட்கும் குளிர்ந்த அருளைப் பெருக்கியவரும் தீராத வினைகளைத் தீர்த்தவரும் ஆகிய சிவபெருமானது அழகிய உடம்பிலே சரிபாதியையும் தனதாக்கிக்கொண்ட தையல் நாயகியினது குமாரனே ! செங்கீரை ஆடி அருள். (எ-று)

முடிபு:— 'காரியம் என, தமை நிமித்தமாகக் கொண்டது அண்டங்களின் குழு, அக்குழுவுக்கு இருவர் குறியும் தலைக் கூடினும் தான், தனக்கு அச்சொம் பாதி அன்மைக்கு, எனும் சுருதி கரியா வைத்தும், தம்பிரான் மேனியில் செம்பாதியும் கொண்ட தையல் நாயகி, அந்நாயகியின் குமாரனே செங்கீரை ஆடியருள்.

(கு-ரை.) "குடம் முதலிய காரியங்கள் ஒரு கர்த்தாவை நிமித்த காரணமாகக் கொண்டிருப்பது போலச் சிவம், சத்தி என்னும் தம்மை நிமித்த காரணமாகக்கொண்ட சகல அண்டங்களுக்கும் தம் இருவருடைய அம்சங்களும் கூடியிருக்கவும், சத்தியாகிய தனக்கு அப்பொருள்களிடத்துள்ள உரிமை பாதியன்று, முற்றுமே என்பதைக் காட்டுவதற்கு ஒரு சான்றாக 'சர்வமும் சத்திமயம்' என்னும் சுருதியை நிறுவியும் அமையாது, அத்தம்பிரான் திருமேனியிலும் நேர் பாதி கொண்ட தையல் நாயகி அம்மையின் குமாரரே! செங்கீரை ஆடியருள் என்றவாறு. உலகம் முற்றும் தன்மயம் எனக்கொண்டது மன்றிச் சுருதியாதிகட்குத் திருவருள் பாலித்த அத்தம்பிரான் திருமேனியிலும் பாதியைக்கொண்ட தையல் நாயகி என்று தேவி வல்லபம் கூறியது." என்பது சிதம்பரம் ஈசான்ய மடம் இராமலிங்க சுவாமிகள் குறிப்புரை.

14. கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக்
களிற்ருேடு முட்டவிட்டுக்
ககனவட் டத்திெனுடு பருதிவட் டத்தைவளை
திகிரிவட் டத்திலிட்டு

மூக்கட் டிருத்தாதை கோதண்ட மெனவைத்த
வேதண்ட மாதண்டமா
மூதண்ட கூடந்த்ரி கூடத் தொடுஞ்சாடி
மூரிக் கடாசலமவன்

மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட
மேகபட லத்துமொண்டு
மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப்பெய்து
விளையாட்டு வீரர்களொடும்

இக்கெட்டும் விளையாடு சேனுபதிக்கடவுள்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (ரு)

முருகப்பெருமான் திருவிளையாடல் கூறப்பெறுகின்றது.

(இ—ள்.) கைக்கு எட்டும் எட்டு களிற்றை பிடித்து அ களிற்றோடு முட்ட விட்டு — (தனது) கைக்கு எட்டுகிற எட்டுத் திசை யானைகளைப் பிடித்து அவ் யானைகளுடன் மோதவிட்டும்;

ககனம் வட்டத்திஞெடு பரிதி வட்டத்தை வளை திகிரி வட்டத்தில் இட்டு—ஆகாய வட்டத்தோடு கூடியியங்கும் சூரியஞகிய வட்டத்தை எடுத்து வளைந்த சக்கரவாள வட்டத்திலே இயங்கச் செய்தும்;

முக்கண் திரு தாதை கோதண்டம் என வைத்த வேதண்டம் மா தலைடம் ஆ — மூன்று கண்களை யுடைய உயர்ந்த தந்தையார் வில்லென்று வைத்துள்ள மேருமலையைப் பெரிய தண்டாயுதமாகக் கொண்டு;

மூது அண்டம் கூடம் திரிகூடத்தொடும் சாடி—பழைய அண்டத்தின் உச்சியைத் திரிகூட மலையுடன் அடித்து;

மூரி கடம் அசலம் அவன் மெய்க்கு இட்ட சட்டைக்கு நேர் இட்டிடப்பட்ட — வலிமையும் மதத்தையும் உடைய மலை போன்ற யானையால் அம்முக்கண் திருத்தாதை தன் உடலுக்கு இட்ட சட்டைக்கு ஒத்த;

மேகம் படலத்து மொண்டு மேல் கடலினை பெரு கீழ் கடல் புக பெய்து—மேகக் கூட்டத்தால் மேற்குக் கடல் நீரை மொண்டு கீழைக் கடலிலே புகச் சொரிந்து;

விளையாட்டு வீரர்களொடும் திக்கு எட்டும் விளையாடு சேஞபதிக் கடவுள் செங்கீரை ஆடியருள்—விளையாட்டு வீரர்களாகிய ஒன்பது வீரர்களுடனே எட்டுத் திசையிலும் சென்று விளையாடும் தெய்வப் படைக்குத் தலைவஞகிய கடவுளே செங்கீரையாடியருள். (எ—று)

முடிபு :— களிற்றைப் பிடித்து முட்ட விட்டு, பரிதி வட்டத்தைத் திகிரி வட்டத்திலிட்டு, வேதண்டத்தை மாதண்டமாகக்கொண்டு அண்ட கூடத்தைத் திரிகூடத்தொடும் சாடி, மேக படலத்தால் மேல் கடலை மொண்டு கீழ்க் கடல் புகப்பெய்து விளையாடும் சேஞபதிக் கடவுள்! செங்கீரை ஆடுக.

15. மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான்
மணிமார்பு வாணிக்குநான்
மறைமுதலி செந்நாத் தடந்தைய லாளொடும்
வயித்தியக் கடவுளார்க்கு

மெய்விரிக் குந்தொண்ட ருள்ளத் தடத்திஞெடு
வேதச் சிரங்கடுப்ப
வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும்
வேளூர திசைதிசைதொறும்

ங்கைவகுத் தரமகளிர் குரவையாட் டயர்பெருங்
கயிலைத் தடஞ்சாரலும்
கனகாசலத்தும்வள ரிமயா சலத்துமுயர்
கந்தமா தனவெற்பெனத்

தெய்வதப் பிடியொடும் விளையாடு மழகளிறு
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்சண் மணவாள
செங்கீரை யாடியருளே. (௬)

## முருகனுக்கு வேளூர் உரிய ஊரென்றும் கயிலை முதலியன விளையாடும் இடமென்றும் கூறப்பெறுகின்றன.

(இ-ள்.) மை விழி செம் கமலம் வல்லிக்கு நேமியான் மணி மார்பு—மையெழுதிய கண்களையுடையவளும் சிவந்த தாமரை மலரில் வீற்றிருப்பவளும் கொடிபோன்றவளும் (ஆகிய இலக்குமிக்குச்) சக்கரத்தை ஏந்திய திருமாலின் கௌஸ்த்துபம் என்னும் மணி அணிந்த மார்பினைப்போல் சிறந்திருப்பதும்;

வாணிக்கு நால் மறை முதலி செம் நா தடம்—கலைமகளுக்கு நான்கு வேதத்தை உணர்ந்த முதல்வனாகிய பிரமனது சிவந்த நாவினிடத்தைப்போல் சிறந்திருப்பதும்;

தையலாளொடும் வயித்தியன் கடவுளார்க்கு மெய் விரிக்கும் தொண்டர் உள்ளம் தடத்தினொடு வேதம் சிரம் கடுப்ப — தையல் நாயகியொடு வயித்தியன் என்று பெயர் கொண்ட சிவபெருமானுக்கு உண்மைப் பொருளை விரித்துணரும் அடியார் உள்ளத்தோடு வேதத்தின் தலையான உபநிடதத்தைப்போல் சிறந்துள்ளதும் ஆகிய;

வேதம் புரி கந்தன் புரி புள் ஊர் என பொலியும் வேளூர — வேதம் பூசித்த நகரமென்றும், கந்தனுக்குரிய நகரமென்றும், பறவை பூசித்த நகரமென்றும் பெயர் விளங்கும் வேளூரில் வாழ்கின்ற முருகனே;

திசை திசை தொறும் கை வகுத்து அர மகளிர் குரவை ஆட்டு அயர் பெரு கயிலை தட சாரலும் — ஒவ்வொரு இடங்கள் தோறும் பிரிவு செய்துகொண்டு தெய்வப் பெண்கள் குரவை என்னும் கூத்தைச் செய்வதற்கிடமான கயிலை மலையின் அகன்ற பக்கங்களிலும்;

கனகம் அசலத்தும்—பொன்னாகிய மேரு மலையிடத்திலும்;

வளர் இமயம் அசலத்தும்—ஓங்கும் பனிமலையிடத்திலும்;

கந்தமாதனம் வெற்பு என தெய்வதம் பிடியொடும் விளையாடும் மழ களிறு—கந்தமாதனம் என்னும் மலையைப்போல் (தாம் விளையாடுவதற்குச் சிறந்த மலையாகக் கருதி) தெய்வப் பிடி என்னும் தெய்வயானை அம்மையாருடன் விளையாடுகின்ற இளைய ஆண் யானை போன்ற முருகனே! செங்கீரை ஆடியருள். (எ-று.)

முடிபு:— வல்லிக்கு சேமியான் மார்பு வாணிக்கு மறை முதலி நாத்தடம் தையலாளொடு கடவுளார்க்கு தொண்டர் உள்ளத் தடத்திறெடு வேதச் சிரம் கடுப்பப் (பொலியும்) வேளூர, வேதபுரி கந்தபுரி புள்ளூர் எனப் பொலியும் வேளூர, அரமகளிர் வகுத்து விளையாட்டயர் கயிலைச் சாரலும் கனகாசலத்தும் இமயாசலத்தும் கந்தமாதன வெற்பு என பிடியொடும் விளையாடு களிறே! செங்கீரை ஆடியருள் என முடிக்க.

(கு-ரை.) திருமாலின் மார்பு முதலியன இலக்குமி முதலியோர்க்குச் சிறந்த இடமாயிருப்பதைப்போல முருகனுக்கு வேளூர் சிறந்த இடமாயுள்ளதென்றும், கயிலைமலை முதலானவை இதனைப் போல் சிறவாமல் கந்தமாதன மலையைப்போல் விளையாடுதற் குரிய இடமாயுள்ளன என்றுங் கருத்து.

16. மீனேறு குண்டகழி தீவாய் மடுத்ததனி
வில்லியா ரிளவலோடும்
விதிமுறை வணங்கச் சடாயுபுரி யிற்கருணை
வெள்ளமென வீற்றிருக்கும்

ஆனே றுயர்த்திட்ட வையற்கு மம்மைக்கும்
அருமருந் தாகிநின்ற
ஆதிப் பிரானென்று மும்முதற் கடவுளும்
அடித்தொழும் பாற்றமற்றக்

கூனேறு மதிநுதற் றெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந் தவடொண்டைவாய்த்

தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள
செங்கீரை யாடியருளே. (ரு)

முருகக்கடவுளின் பெருமையும் எளிமையும் கூறப்பெறுகின்றன.

(இ-ள்.) மீன் ஏறு குண்டு அகழி தீவாய் மடுத்த தனி வில்லியார் இளவலோடும் விதி முறை வணங்க—மீன்கள் மிகுதியான ஆழமாகிய (கடல் என்னும்) அகழியை நெருப்பினிடத்தே சேர்த்த ஒப்பற்ற வில்லையுடைய இராமபிரான் தனது தம்பியுடன் நூல்கள் விதித்த முறைப்படி வழிபட;

சடாயு புரியில் கருணை வெள்ளம் என வீற்றிருக்கும் ஆன் ஏறு உயர்த்திட்ட ஐயற்கும் அம்மைக்கும் அருமருந்து ஆகி நின்ற ஆதி பிரான் என்று மும்முதல் கடவுளும் அடி தொழும்பு ஆற்ற—சடாயு நகரத்திலே அருள் வெள்ளம் என்று சொல்லும்படி எழுந்தருளியிருக்கும் ஆன் ஏருகிய விடை எழுதிய கொடியை உயர்த்தியுள்ள (சிவபெருமானுகிய) தந்தைக்கும் (உமாதேவியாகிய) தாய்க்கும் அமிழ்தமாகி நின்ற முதற் பெருமான் என்று கூறி (பிரமன் முதலான) மூன்று முதற்கடவுளரும் உனது திருவடித் தொண்டு செய்யவும்;

அ கூன் ஏறு மதி நுதல் தெய்வம் குறம் பெண் குறிப்பு அறிந்து-(தான்) அவ்வளவு மிகுந்த பிறை போன்ற நெற்றியினை உடைய தெய்வத்தன்மை வாய்ந்த குறச்சாதிப் பெண்ணுகிய வள்ளி நாயகியாரின் கருத்தைத் தெரிந்து கொண்டு;

அருகு அணைந்து உன் குறு ஏவல் செய்ய கடைக்கண் பணிக்க என குறை இரந்து—பக்கத்திலே சேர்ந்து உனது சிறு ஏவற்பணிகளை (யான்) செய்ய உன் கடைக்கண்ணுலே கட்டளையிட வேண்டும் என்று தன்குறையைக் கூறி இரந்து;

அவள் தொண்டை வாய் தேன் ஊறு கிளவிக்கு வாய் ஊறி நின்றவன் — அவளது கொவ்வைக்கனி போன்ற வாயிலிருந்து தோன்றும் தேன் சுரக்கும் சொற்களைக் கேட்பதற்கு வாயில் நீர் சுரக்கும்படி (மிக விருப்பம் கொண்டு) நின்ற முருகப்பெருமானே! செங்கீரை ஆடியருள். (எ-று)

முடிபு :—வில்லியார் இளவலோடும் வணங்க சடாயு புரியில் கருணை வெள்ளம் என வீற்றிருக்கும் ஐயற்கும் அம்மைக்கும் அருமருந்தாகி நின்ற பிரானே! என்று (கூறி) முக்கடவுளரும் தொழும்பாற்றவும், குறப்பெண் குறிப்பறிந்து அருகணைந்து உன் ஏவல் செய்ய கடைக்கண் பணிக்க என குறையிரந்து அவள் கிளவிக்கு வாய் ஊறி நின்றவனே! செங்கீரை ஆடி அருள்.

(வேறு)

17. செம்பொன டிச்சிறு கிண்கிணி யோடு
சிலப்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடுமொளி
திகழரை வடமாடப்

பைம்பொ னசும்பிய தொந்தியொ டுஞ்சிறு
பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச்
சுட்டி பதிந்தாடக்

கம்பி விதம்பொதி குண்டல முங்குழை
காது மசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியு முச்சிக்
கதிர்முத் தொடுமாட

அம்பவ ழத்திரு மேனியு மாடிட
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாதபுரிக்குகன்
ஆடுக செங்கீரை. (சு)

செங்கீரை ஆடலே இவ்வாறு ஆடுக என்றது.

(இ-ள்) செம் பொன் அடி சிறு கிண்கிணியோடு சிலம்பு கலந்து ஆட—சிவந்த பொன் போன்ற திருவடியிலே சிறிய கிண்கிணிகளுடன் சிலம்பும் கலந்து ஆடவும்;

திரு அரை அரை ஞாண் அரை மணியொடும் ஒளி திகழ் அரை வடம் ஆட—அழகிய இடையிலே இடைக் கயிறுடனும், இடைமணியுடனும், ஒளிவிளங்கும் (முத்தாற் செய்த) அரை வடம் ஆடவும்;

பை பொன் அசும்பிய தொந்தியொடும் சிறு பண்டி சரிந்து ஆட—பக்குவமான பொன்னைப் போல் (ஒளி) ஊறும் பெருவயிற்றுடன் சிறிய வயிறு சாய்ந்து ஆடவும்;

பட்டம் நுதல் பொலி பொட்டொடு வட்டம் சுட்டி பதிந்து ஆட—பட்டம் என்னும் அணியைப் பூண்ட நெற்றியிலே விளங்குகின்ற பொட்டுடனே தாழ்ந்த சுட்டி யென்னும் அணி பதிந்து ஆடவும்;

கம்பி விதம் பொதி குண்டலமும் குழை காதும் அசைந்து ஆட-கம்பியின் வகைகள் சேர்ந்துள்ள குண்டலம் என்னும் காதணியும் குழைந்து தோன்றும் காதும் அசைந்து ஆடவும்;

கட்டிய சூழியும் முச்சியும் முச்சி கதிர் முத்தொடும் ஆட—கட்டப்பெற்ற சூழி என்னும் கொண்டையும் முச்சி யென்னும் கொண்டையும் அம் முச்சியிலணிந்த ஒளி பெற்ற முத்துக்களுடன் ஆடவும்;

அம் பவழம் திரு மேனியும் ஆடிட ஆடுக செங்கீரை—அழகிய பவழம் போன்ற திருவுடம்பும் ஆட செங்கீரை ஆடுக;

ஆதி வயித்திய நாதன் புரி குகன் ஆடுக செங்கீரை—முதன்மையாகிய வயித்திய நாதனது நகரத்திலே வாழும் முருகனே ! செங்கீரை ஆடுக. (எ-று)

முடிபு :— வயித்திய நாதபுரிக் குகன் ! அடியில் கிண்கிணியோடு சிலம்பு கலந்தாட, அரையில் அரைஞாணொடும் அரைமணியொடும் அரைவடம் ஆட, தொந்தியொடும் பண்டி சரிந்தாட, நுதலில் பொட்டொடு சுட்டி பதிந்தாட, குண்டலமும் காதும் அசைந்தாட, சூழியும் முச்சியும் முத்தொடும் ஆட, திருமேனியும் ஆடிட செங்கீரை ஆடுக.

18. குழையொடு குழையெதிர் மோதிக் காதணி
குண்டலம் வெயில்வீசக்
குமுத விதழ்க்கனி வாயமு தூறிய
குறுநகை நிலவூர
முழுவயி ரப்புய வலயமு முன்கை
முதாரியு மொளிகால
முத்த மரும்பி யெனக்குறு வேர்வு
முகத்தி லரும்பியிடப்
புழுதி யளைந்த பசுந்திரு மேனிப்
பொங்கொளி பொங்கியெழப்
புண்டரி கங்கண் மலர்ந்த விழிக்கடை
பொழியருள் கரைபுரள
அழகு கனிந்து முதிர்ந்த விளங்கனி
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (எ)

செங்கீரை ஆடும் முருகன் வடிவழகு கூறப்பெறுகிறது.

(இ-ள்) குழையொடு குழை எதிர் மோதி காது அணிகுண்டலம் வெயில் வீச — குழை என்னும் அணியுடன் குழை என்னும் அணி எதிர்சென்று மோதிச் செவியிலே அணிந்துள்ள குண்டலம் என்னும் அணி ஒளி வீசவும் ;

குமுதம் இதழ் கனி வாய் அமுது ஊறிய குறு நகை நிலவு ஊர — செவ்வாம்பல் போன்ற உதடுகளுடன் கூடிய கனிபோன்ற வாயினிடத்து வாய் நீராகிய அமிழ்தம் சுரந்த சிறிய பல்லின் ஒளி பரக்கவும் ;

முழு வயிரம் புயம் வலயமும் முன்கை முதாரியும் ஒளி கால— முழுமையும் வயிரத்தாற் செய்த தோள் வலயம் என்னும் அணியும் முன்கையிற் பூண்ட கங்கணமும் ஒளியை வெளிப்படுத்தவும்;

முத்தம் அரும்பி என குறு வேர்வு முகத்தில் அரும்பியிட — (இது) முத்தினைத் தோற்றுவிப்பது என்று சொல்லும்படி சிறிய வியர்வை முகத்தில் தோன்றவும்;

புழுதி அளைந்த பசு திரு மேனி பொங்கு ஒளி பொங்கி எழ— புழுதி படிந்த செழுமையான திருவுடம்பில் புழுதிக்குமேல் மிக்க வொளி மிகுந்தெழவும்;

புண்டரிகங்கள் மலர்ந்த விழி கடை பொழி அருள் கரை புரள— செந்தாமரை மலர்போல் மலர்ந்த விழிகளினுடைய கடைப்பக்க மிருந்து பெய்யும் அருள் எல்லைகடந்து ஓடவும்;

அழகு கனிந்து முதிர்ந்த இள கனி ஆடுக செங்கீரை—எழில் மிகவும் முதிர்ந்த இளமைக் கோலம் கொண்ட (இனிய) கனிபோன்ற வனே செங்கீரை ஆடுக. (எ-று)

முடிபு :— குண்டலம் வெயில் வீச, குறுநகை நிலவு ஊர, புயவலயமும் முதாரியும் ஒளிகால, முகத்தில் குறு வேர்வு அரும்பியிட, திருமேனி ஒளி பொங்கி எழ, விழிக்கடை பொழி அருள் கரைபுரள, இளங்கனியே! குகனே! செங்கீரை ஆடுக.

19. விரல்சுவை யுண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்தழு தலறியுன்
மென்குரல் கம்மாமே

கரைவுறு மஞ்சன நுண்டுளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புன லருவி படிந்துடல்
கருவடி வுண்ணுமே

உருவ மணிச்சிறு தொட்டி லுதைந்துநி
ஞெண்பத நோவாமே
ஒருதா ளுந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்

தருள்பொழி திருமுக மசைய வசைந்தினி
தாடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை. (அ)

## செங்கீரை ஆடலின் இலக்கணம் கூறப்பெறுகின்றது.

(இ-ள்) விரல் சுவை உண்டு கனிந்து அமுது ஊறிய மெல் இதழ் புலராமே — பெருவிரலின் சுவையை உண்டு, (கொவ்வைக்) கனியின் தன்மையைப் பெற்று அமிழ்தம் சுரந்த மெல்லிய வாய் இதழ்கள் உலராமலும்;

விம்மி பொருமி விழுந்து அழுது அலறி உன் மென குரல் கம்மாமே — விம்மியும் பொருமியும் கீழ்விழுந்தும் அழுது பேரொலி செய்ததனுல் உனது மெல்லிய குரல் அடைக்காமலும்;

கரைவு உறு அஞ்சனம் நுண் துளி சிந்தி கண்மலர் சிவவாமே — கரைதலைப் பெறும் மையுடன் கூடிய நுண்ணிய நீர்த்துளியைச் சொரிந்து கண்ணுகிய மலர் சிவந்த நிறம் அடையாமலும்;

கலுழ் கலுழி புனல் அருவி படிந்து உடல் கரு வடிவு உண்ணுமே — அழுகின்றதனுல் தோன்றும் (மையைக் கரைத்து வரும்) கலங்கற் கண்ணீர் ஆகிய அருவியிலே முழுகி உன் திருமேனியானது கரியதாகிய வடிவத்தைப் பெருமலும்;

உருவம் மணி சிறு தொட்டில் உதைந்து நின் ஒள் பதம் நோவாமே—நிறமுடைய மணிகள் பதித்த சிறியதாகிய தொட்டிலைக் (காலால்) உந்தி உனது ஒளிபெற்ற கால்கள் வருந்தாமலும்;

ஒரு தாள் உந்தி எழுந்து இரு கையும் ஒருங்கு பதித்து நிமிர்ந்து அருள் பொழி திரு முகம் அசைய அசைந்து இனிது ஆடுக செங்கீரை—ஒற்றைக் காலை ஊன்றி எழுந்து இரண்டு கைகளையும் ஒருங்கே நிலத்தின்கண் பதித்து (த்தலை) நிமிர்ந்து அருளைப் பொழி கின்ற அழகிய முகம் அசையும்படி (உன் திருமேனி) அசைந்து நன்ருக செங்கீரை ஆடி அருள்க. (எ—று)

முடிபு :-- இதழ் புலராமே, குரல் கம்மாமே, கண்மலர் சிவவாமே, உடல் கருவடிவு உண்ணுமே, பதம் நோவாமே, ஒரு தாள் உந்தி எழுந்து இருகையும் பதித்து நிமிர்ந்து முகம் அசைய அசைந்து ஆடுக.

(கு-ரை.) செங்கீரை யாடலைப்பற்றி, "இருகைமலரும்புவி பதித் தொரு முழந்தாள் இருத்தியொரு தாள்மேல் நிமிர்த், திந்திரதிரு விற்கிடை தொடுத்தவெண் டரளநிரை யேய்ப்பநுதல் வேர்பொடிப் பத், திருமுக நிமிர்த்தொரு குளந்தை அமுதாம்பிகை செங்கீரை ஆடியருளே" என்று, (அமு - செங் - 1.) கூறுவதைக் காண்க.

### சந்த விருத்தம்.

தந்தன தத்தன தானன தந்தா தந்தான

20. கும்பம தக்களி யானையி ரண்டே யொன்றேமைக்
கொண்டல்வி ழிக்கயன் மீனுமி ரண்டே கொண்டேகிச்
சம்பர னைப்பொரு சேவகன் வந்தான் வந்தான்முற்
சண்டைகொ ளற்கென நேர்வரு பெண்பா லன்பாயே

அம்பவ ளக்கொடி யேவளர் கொம்பே யென்றேநீ
அன்றுபு னத்துயிர் சோர்வது கண்டே முன்போதும்
கம்பம தத்தர்ச கோதர செங்கோ செங்கீரை
கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. (கூ)

**முருகன் வள்ளி நாயகியிடம் கொண்ட காதல் கூறப்படுகிறது.**

(இ–ள்.) கும்பம் மதம் களி யானை இரண்டு ஏ — கும்பம் போன்ற மத்தகத்தையும் மதக்களிப்பையும் உடைய நகிலாகிய யானைகள் இரண்டையே;

ஒன்று ஏ மை கொண்டல் — கூந்தலாகிய கரிய மேகம் ஒன்றையே;

விழி கயல் மீனும் இரண்டே — கண்களாகிய கயல் மீன்கள் இரண்டனையே;

கொண்டு — படையாகக்கொண்டு;

ஏகி சம்பரனை பொரு சேவகன் வந்தான் வந்தான் முன் சண்டை கொளற்கு என — முன் ஒரு காலத்தில் சென்று சம்பரன் எனும் அசுரனைப் பொருத வீரனாகிய மன்மதன் தன் முன்னே சண்டை செய்வதற்கு இப்பொழுது (பெண்ணுருவத்துடன்) வந்தான் வந்தான் என்று சொல்லும்படி;

நேர் வரு பெண்பால் — தன்னெதிர் வந்த வள்ளியம்மையாரிடத்து;

அன்பு ஆய் — காதலுடையவனாய்;

அம் பவளம் கொடியே வளர் கொம்பே என்று ஏ நீ அன்று புனத்து உயிர் சோர்வது கண்டு ஏ — அழகிய பவளக்கொடி போன்றவளே வளர்கின்ற மலர்க் கொம்பு போன்றவளே என்று இவற்றையே கூறி நீ அப்பொழுது உயிர் தளர்வதைக் கண்டே;

முன் போதும் கம்ப மதத்தர் சகோதர செங்கோ செங்கீரை — (வள்ளி நாயகியைக் கூட்டுவிக்க) முன் வரும் கம்பத்தில் கட்டப்பட்ட மதயானை வடிவமான விநாயகப் பெருமானின் சகோதரனே! செங்கீரை ஆடுக. —

கந்தன்புரி கருணை நிதி — கந்தன் நகரத்துள் வாழும் கருணையாகிய செல்வமே. (எ-று.)

முடிபு:— நகிலாகிய யானை இரண்டே, கூந்தலாகிய கொண்டல் ஒன்றே, விழியாகிய மீனும் இரண்டே கொண்டு, ஏகிச் சம்பரனைப் பொரு சேவகன் வந்தான் வந்தான் சண்டை கொளற்கு என, வரும் பெண்பால், அன்பாய், கொம்பே,

கொடியே என்றே நீ உயிர் சோர்வது கண்டு, போதும் கம்ப மதத்தர்; அவரது சகோதரனே செங்கீரை ஆடுக.

(கு-ரை.) ஏகிப் பொரு சேவகன் யானை இரண்டு முதலான வற்றைக்கொண்டு வந்தான் என்று கூட்டுக.

21. திங்கணு தற்றிரு மாதொடு நின்றே மன்றுடும்
செங்கண்வி டைக்கொடி யோனருள் கன்றே
யொன்றேயாய்
எங்களு ளத்தமு தூறுக ரும்பே யன்பாளர்க்
கின்பம ளிக்குமெய்ஞ் ஞானம ருந்தே யெந்தாயின்

கொங்கலர் மைக்குழல் வாழ்பொறி வண்டே வண்டூதும்
கொந்தள கக்குற மான்வளர் குன்றே யென்றூதும்
கங்கைம கட்கொரு கான்முளை செங்கோ செங்கீரை
கந்தபு ரிக்கரு ணாநிதி செங்கோ செங்கீரை. (க0)

### முருகனைப் பலவகையாகப் பாராட்டியது

(இ-ன்) திங்கள் நுதல் திரு மாதொடு நின்று ஏ மன்று ஆடும் செம் கண் விடை கொடியோன் அருள் கன்றே — பிறை போன்ற நெற்றியை யுடைய அழகிய உமாதேவியாரோடு நின்றே அம்பலத்தில் நடிக்கும் சிவந்த கண்களையுடைய இடபம் எழுதிய கொடியை யுடையவனுகிய சிவபெருமான் அருளிச்செய்த குழந்தையே ;

ஒன்று ஏ ஆய் எங்கள் உளத்து அமுது ஊறு கரும்பே — ஒரே பொருளாய் எங்களது மனத்திலே (விளங்கி) அமிழ்தச்சுவை சுரக்கும் கரும்பு போன்றவனே;

அன்பு ஆளர்க்கு இன்பம் அளிக்கும் மெய் ஞானம் மருந்தே — அன்பினை ஆளும் தொண்டர்க்கு இன்பத்தைக் கொடுக்கும் உண்மை அறிவாகிய மருந்தாய் உள்ளவனே;

எம் தாயின் கொங்கு அலர் மை குழல் வாழ் பொறி வண்டே — எம் தாயாகிய உமாதேவியாரது மணம் பரந்த கரிய கூந்தலில் (சிவபெருமான் அத்தேவியார்க்கு உபதேசித்த மறைப் பொருளை அறிவதற்கு) புள்ளிகளையுடைய வண்டாயிருந்தவனே;

வண்டு ஊதும் கொந்து அளகம் குறம் மான் வளர் குன்றே — வண்டு ஒலிக்கப் பெறும் பூங்கொத்தை யுடைய கூந்தலைப் பெற்றிருக்கும் குறச்சாதியில் வளர்ந்த வள்ளியாகிய மான் வளர்வதற்கிடமாகிய குன்றம் போன்றவனே;

என்று ஓதும் — என்று அடியார்களால் ஓதப்பெறும்; கங்கை மகட்கு ஒரு கால் முளை செங்கோ செங்கீரை — கங்கையாகிய மகளுக்குக் குமாரனுய்த் தோன்றியவனே செங்கீரை ஆடுக (எ—று)

முடிபு:—' கன்றே, கரும்பே, மருந்தே, வண்டே, குன்றே என்றோதும் கான்முளை! செங்கோ செங்கீரை என்று முடிக்க.

(கு—ரை) "எந்தாயின் கொங்கலர் மைக்குழல் வாழ் பொறி வண்டே" என்றது, திருவுத்தரகோச மங்கையிலே சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தபொழுது முருகக்கடவுள் வண்டுருக் கொண்டு கூந்தலிலிருந்து கேட்டனர் என்னும் அத்தல புராணச் சரித்திரம் நோக்கிக் கூறியது.

---

## ௩. தாலப்பருவம்

(ஆசிரிய விருத்தம்)

22. பில்கும் பசுந்தே னசும்பிருந்த
பின்றா ழளகத் தரமகளிர்
பேதைக் குறும்பு விளையாடும்
பேரா யத்துச் சிறுமருங்குற்
கொல்குங் கொடிபோய் நுடங்கியிட
ஓங்கும் பளிக்கு நிலாமுற்றத்
துயர்சூ ளிகையின் மரகதத்தின்
ஒளிகால் வீசத் தெளிவிசும்பிற்
பல்குஞ் சுரபி தரங்கநெடும்
பாகீ ரதியின் கரைக்கிளைத்த
பசும்புல் லெனச்செந் நாவளைக்கும்
பைம்பொற் றலங்கள் பலகோடி
மல்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (க)

இப்பாட்டில் கந்தபுரியின் பைம் பொற்றலங்கள் புனைந்து கூறப்பெறுகின்றன.

(இ-ன்) பில்கும் பசு தேன் அசும்பு இருந்த பின் தாழ் அளகத்து அர மகளிர் பேதை குறும்பு விளையாடும் பேர் ஆயத்து —

துளிக்கும் பசிய தேன் கசிந்து கொண்டிருந்த பின்னே தாழ்கின்ற கூந்தலையுடைய தெய்வ மகளிரது அறியாமையால், குறும்பு செய்து விளையாடும் பெரிய கூட்டத்திலே;

சிறு மருங்குற்கு ஒல்கும் கொடி போய் நுடங்கியிட ஓங்கும் பளிக்கு நிலா முற்றத்து — (மண்ணக மகளிரின்) சிறிய இடைக்குத் தோற்கின்ற பூங்கொடிகளானவை (விண்ணகம்) போய், (ஆயத்திலே) அசையும்படி, உயர்கின்ற பளிங்குக்கல்லால் ஆன நிலா முற்றத்தினுடைய;

உயர் சூளிகையின் மரகதத்தின் ஒளி கால் வீச — உயர்ந்த உச்சியறையிற் பதித்த மரகதமணியின் பச்சொளி இடங்களெல்லாம் சென்று வீச (அவ்வொளியை);

தெளி விசும்பில் பல்கும் சுரபி தரங்கம் நெடு பாகீரதியின் கரை கிளைத்த பசு புல்லென செம் நாவளைக்கும் பை பொன் தலங்கள் — தெளிந்த வானுலகத்திலே பெருகிய காமதேனுவாகிய பசுக்களானவை, அலையையுடைய பெரிய ஆகாய கங்கையின் கரையிலே தோன்றிய பச்சைப் புல்லென்று கருதி, (அதைப்பற்றித் தின்பதற்காகத் தம்முடைய) சிவந்த நாவை வளைப்பதற்கு இடமான, பசிய பொன்னாற் செய்த மேன் மாடங்கள்;

பல கோடி மல்கும் செல்வம் கந்தபுரி வாழ்வே மலையாள் வயிறு வாய்த்த முழு மணியே — (அத்தகைய பைம்பொற்றலம்) பலகோடியாய்ப் பெருகும் செல்வம் நிறைந்த கந்தபுரிக்கு வாழ்வாயுள்ளவனே! மலையில் தோன்றிய உமாதேவியார் வயிற்றிற் பிறந்த எல்லா இலக்கணங்களும் பொருந்திய மாணிக்கமே!. (எ—று)

முடிபு :— (விண்ணகத்திலே உள்ள) அரமகளிர் பேராயத்திலே (மண்ணக மகளிர்) சிறு மருங்கிற்கு ஒல்குங் கொடியானது போய், நுடங்கியிட, ஓங்கும் நிலா முற்றத்துச் சூளிகையின் மரகதத்தின் ஒளி கால் வீச, (அவ்வொளியை) விசும்பின் சுரபியானது, பாகீரதியின் கரையில் கிளைத்த பசும் புல்லென நாவளைப்பதற்கிடமான பொற்றலங்கள் பலகோடி மல்கும் கந்தபுரி வாழ்வே! முழுமணியே! தாலோ தாலேலோ.

(கு—ரை) ‘அரமகளிர் பேராயத்துச் சிறு மருங்குற்கு (ஒப்ப) ஒல்கும் கொடிபோய் நுடங்கியிட ஓங்கும் நிலாமுற்றம் என்று கூட்டியும் பொருளுரைக்கலாம்’.

‘பேதைக்குறும்பு — பேதைப்பருவத்து விளையாட்டு. மருங்குற்கு ஒல்கும் கொடி — மென்மையிலும் துவட்சியிலும் இடைக்குத் தோற்று அசையும் பூங்கொடி’ என்பது உ. வே – சா-குறிப்புரை. கால் வீச — பரவ என்றுமாம்.

23. தொடுக்குந் தொடைவெண் டுகிற்கொடிகள்
தொடுநீர்ப் பரவை முகம்புழுங்கத்
தோன் றும் பருதி மணித்திண்டேர்
தூண்டுங் கலின வாம்பரியை

முடுக்குஞ் சுடர்ப்பொற் றலத்திழைத்த
முழுநீ லத்தி னொழுகொளியின்
முழுகுங் கடவுண் மால்யானை
முகிலிற் றோன் ற வகலிடநின்

றடுக்குங் களிறென் றரமகளிர்
ஐயுற் றிடத்தன் வெளிறுமுடம்
பளறு படிந்த தெனக்கங்கை
யாற்றுப் பசும்பொ னசும்புபுனல்

மடுக்குஞ் செல்வக் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (உ)

நீலரத்தினம்

**கந்தபுரியின் நீலம் இழைத்த பொற்றலப்புனைவு இப்பாட்டுள் கூறப்பெறுகின்றது.**

(இ–ள்.) தொடுக்கும் தொடை வெண் துகில் கொடிகள் — கட்டப்பெற்ற மாலையையுடைய வெண்மையாகிய ஆடையால் அமைந்த கொடிகளானவை;

தொடு நீர் பரவை முகம் புழுங்க தோன்றும் பருதி மணி திண் தேர் தூண்டும் கலினம் வாம் பரியை முடுக்கும் சுடர் பொன் தலம்— (சகரரால்) தோண்டப்பெற்ற நீரையுடைய கடலினது மேலிடமெல்லாம் வெதும்ப உதிக்கும் ஞாயிற்றினது, அழகிய வலிய தேரினைச் செலுத்தும், கடிவாளம் பூட்டிய தாவிச் செல்லும் குதிரையை விரைய ஓட்டுதற்கிடமான பொன் மாளிகைகளில்; (வான் முட்ட உயர்ந்த பொன் மாளிகை என்க)

இழைத்த முழு நீலத்தின் ஒழுகு ஒளியின் முழுகும் கடவுள் மால் யானை முகிலின் தோன்ற—பதிக்கப்பட்டுள்ள குற்றமற்ற நீலமணியிலிருந்து வெளிப்படும் ஒளியிலே குளித்த இந்திரனது பெரிய யானையானது 'கருமேகம்போல்' தோன்ற; (அக் கருமையால்)

அகல் இடம் நின்று அடுக்கும் களிறு என்று அரமகளிர் ஐ உற்றிட—அகன்ற மண்ணுலகிலிருந்து தெய்வ வுலகம் வந்த யானையென்று, தெய்வ மகளிர் ஐயத்தை அடைய;

தன் வெளிறும் உடம்பு அளறு படிந்தது என — தனது வெள்ளையாகிய உடலில் கரிய சேறு படிந்தது என்று தான் (ஐராவதம்) கருதி;

கங்கை யாற்று பசு பொன் அசும்பு புனல் மடுக்கும் செல்வம் கந்தபுரி — (பொன்னுலகத்திலுள்ள) கங்கையாற்றிலே பசும் பொன் நிறத்தைத் தோற்றுகிற நீரிலே, குளிப்பதற்கு ஏதுவான செல்வம் நிறைந்த கந்தபுரி;

(கந்தபுரி) வாழ்வே மலையாள் வயிறு வாய்த்த முழு மணியே தாலோ தாலேலோ—அக்கந்தபுரிக்கு வாழ்வாய் உள்ளவனே! உமாதேவியின் வயிற்றுக்கு வாய்த்த முழு மாணிக்கமே! உனக்குத் தாலாட்டு. (எ-று).

முடிபு :— துகிற் கொடிகள் பருதித் தேரை முடுக்குவதற் கிடமான பொற்றலத்து இழைத்த நீலத்தின் ஒளியில் முழுகும் கடவுள் யானை (ஐராவதம்) யானது, 'முகிலில் தோன்ற' அரமகளிர் (அவ் யானையை) அகலிடம் நின்று அடுக்கும் களிறென்று ஐயுற்றிட, (அவ் யானை) தன் வெளிறும் உடம்பு அளறு படிந்தது எனக் கங்கையாற்றுப் புனலில் மடுப்பதற்குக் காரணமான கந்தபுரி; அக்கந்தபுரிக்கு வாழ்வாயுள்ளவனே! முழு மணியே! தாலேலோ.

24. திற்றுஞ் சுதைவெண் ணிலவெறிப்பத்
திரண்மா மணிகள் வெயில்விரிக்கும்
செம்பொற் றலத்துப் பேரமர்க்கட்
சிறியார் நறிய வகிற்புகையிட்

டாற்றுங் குழற்காட் டினைப்புயலென்
றூட மயில்கண் டம்பவளத்
தரும்பு நகையைச் சகோரப்புள்
அருந்த விரிந்த முழுநகைவிண்

டேற்று நிலவுக் கிந்துசிலை
ஒளிர்மா ளிகையுஞ் சூளிகையும்
உருகிப் பெருகுங் கலுழிவெள்ளம்
உவரோ டுவரிக் கடற்புலவு

மாற்றுங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (௩)

## இப்பாட்டுள்

**கந்தபுரியின் செம்பொற்றலமும், அதிலே உள்ள இந்துசிலை மாளிகையும், புனைந்துரைக்கப்பெற்றுள்ளன.**

(இ-ள்) தீற்றும் சுதை வெள் நிலவு எறிப்ப திரள் மா மணிகள் வெயில் விரிக்கும் செம்பொன் தலத்து — பூசப்பெற்ற சுண்ணாம்புக் குழம்பு (திங்களைப்போல்) வெண்மையாகிய நிலாவை வீச, கூட்டமாகிய பெரிய மாணிக்கங்கள் (ஞாயிறைப்போல்) வெயிலை விரிப்பதற்கு இடமான, செம்பொன்னாற் செய்த (மனைகளின்) மேற்றலத்திலே ;

பேர் அமர் கண் சிறியார் நறிய அகில் புகை இட்டு ஆற்றும் குழல் காட்டினை — பெரிய போரைச் செய்யும் கண்களையுடைய சிறு பெண்கள், நறுமணமுடைய அகிற் புகையினுள் வைத்து, ஈரம் புலர்த்தும் கூந்தலாகிய காட்டினை;

புயல் என்று ஆட மயில் — (கண்ட) மயில் மேகம் என்று கருதி, ஆடா நிற்க;

கண்டு அம் பவளத்து அரும்பும் நகையை — (அதனைச் சிறுமியர்) பார்த்து, (மயிலின் பேதைமையை எண்ணி), அழகிய பவளம் போன்ற இதழிலே சிறிது தோற்றுவித்த நகைப்பின் நிலவை;

சகோரம் புள் அருந்த — சகோரமாகிய பறவை (கண்டு உதிக்கும் திங்களின் புது நிலவென்று கருதி) உண்ண ;

விரிந்த முழுநகை விண்டு ஊற்றும் நிலவுக்கு — (சிறுமியர் அதனையுங் கண்டு, சகோரத்தினது பேதைமையையும் எண்ணியதால் அவரிடம்) பரந்த முழுச்சிரிப்பு வெளிப்பட்டு, ஊற்றுகின்ற நிலவினுக்கு;

இந்து சிலை ஒளிர் மாளிகையும் சூளிகையும் உருகி — சந்திர காந்தக்கல்லால் செய்யப்பெற்று விளங்கும் மாளிகைகளும், அதனுடைய உச்சியறைகளும், உருக;

பெருகும் கலுழி வெள்ளம் உவரோடு உவரி கடல் புலவு மாற்றும் கடவுள் கந்தபுரி வாழ்வே — அதனால் பெருகுகின்ற கலங்கல் வெள்ளமானது, உவரிக்கடலின் உப்போடு புலால் நாற்றத்தையும், மாற்றுவதற்கிடமான தெய்வத்தன்மை வாய்ந்த கந்தபுரிக்கு வாழ்வாயுள்ளவனே ! (எ-று)

முடிபு :— செம்பொற்றலத்துச் சிறியார் புகையிட்டு ஆற்றும் குழற் காட்டினைப் புயல் என்று கருதி, ஆடுமயிலை(ச்சிறியார்) கண்டு, பவளத்து அரும்பு நகையைச் சகோரப்புள் அருந்த, (அதைக் கண்டு அச்சிறுமியரிடம்) விரிந்த முழு நிலவு விண்டு

ஊற்றும் நிலவுக்கு, இந்து சிலை மாளிகையும், சூளிகையும், உருக, (அதனால்) பெருகும் வெள்ளம் கடலின் உவரோடு புலவை மாற்றும் கந்தபுரி; அக் கந்தபுரிக்கு வாழ்வே தாலோ தாலேலோ.

(கு-ரை) உருகி என்பதை உருக என்று திரிக்க.

25. கிளைக்குஞ் சகரர் தொட்டபெருங்
கிடங்கென் றிடங்கர் மாவியங்கும்
கீழ்நீ ரமுவக் குண்டகழிக்
கெழுமு புனற்றெண் டிரைமேய்ந்து

திளைக்குங் கமஞ்சூ னெடும்புயலைச்
சிறுகட் பெருங்கைப் பகடென்றோர்
செங்கட் களிறு பிளிறநிமிர்
திகிரி கிரியென் றிவர்ந்துடலம்

இளைக்கும் படிவிண் டொடநிவந்த
எழிற்பொற் புரிசை விண்டுபதத்
தேறு மேணி பொற்றருவுக்
கிடுவே லியுமா யேழுலகும்

வளைக்குங் கடவுட் கந்தபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (ச)

கந்தபுரியின் எழில் பொன் புரிசை இப்பாட்டில்
புனைந்துரைக்கப்படுகிறது

(இ-ள்) கிளைக்கும் சகரர் தொட்ட பெரு கிடங்கு என்று — கிளைஞராயுள்ள சகரர் தோண்டிய, பெரிய கடலென்று எண்ணி;

இடங்கர் மா இயங்கும் கீழ்நீர் அழுவம் குண்டு அகழி கெழுமு புனல் தெண் திரை — முதலையாகிய விலங்கு திரியும், ஊற்றுநீர்ப் பரப்பையுடைய ஆழமான அகழியில், பொருந்திய நீரின் தெளிவாகிய அலைகளை;

மேய்ந்து திளைக்கும் கமம் சூல் நெடு புயலை சிறு கண் பெரு கை பகடு என்று ஓர் செம் கண் களிறு பிளிற — உண்டு (அவ்வலை களிலேயே) திளைத்திருக்கும் நிறைவாகிய கருவினையுடைய நீண்ட மேகத்தைச், சிறிய விழியையுடைய பெரிய தும்பிக்கையையுடைய யானையென்று கருதி, ஒரு சிவந்த விழிகளையுடைய ஆண் யானை முழங்க;

நிமிர் திகிரி கிரி என்று இவர்ந்து உடலம் இளைக்கும்படி — (அம்மேகம்) உயர்ந்த சக்கரவாள மலை என்று மயங்கக் கருதி, ஏறித், தனது உடம்பு வருந்தும்படி;

விண் தொட நிவந்த எழில் பொன் புரிசை விண்டு பதத்து ஏறும் ஏணி பொன் தருவுக்கு இடு வேலியும் ஆய் ஏழ் உலகும் வளைக்கும் கடவுள் கந்தபுரி — ஆகாயத்தைத் தீண்டும்படி ஓங்கிய அழகாகிய பொன்மதிலானது, "வானத்திலேயுள்ள சுவர்க்க உலகத்திற்கு ஏறுதற்குரிய ஏணியைப் போலவும்" "பொன்நிற மாகிய கற்பக மரத்திற்கு இடப்பெற்ற வேலியைப் போலவும்" ஆகி, மேலே உள்ள ஏழு உலகங்களையும் வளைத்துக் கொள்ளுவதற் கிடமாகிய தெய்வத்தன்மை வாய்ந்த கந்தபுரி; (எ—று)

முடிபு:— சகரர் தொட்ட கிடங்கென்று, இடங்கர்மா இயங்கும் அகழியினது திரையை மேய்ந்து, திளைக்கும் புயலை யூர்களிறுனது, பகடென்று (கருதி) பிளிற; (அப்புயலானது) திகிரி கிரி என்று (கருதி), இவர்ந்து, இளைக்கும்படி நிவந்த பொற் புரிசையானது, ஏணியும் வேலியும் ஆய், ஏழுலகும் வளைக்கும் கந்தபுரி; அக்கந்தபுரி வாழ்வே! முழுமணியே! தாலேலோ.

26\. சோலைப் புறமுப் புடைக்கனிகள்
தூக்கு முடத்தெங் கிமையவர்தம்
தோன்ற றிருவோ லக்கத்துத்
தோகை மயிலி னடங்குயிற்றும்

ஏலக் கருங்கொந் தளவளகத்
திளமா தருக்கு முதிர்வேனில்
இளைப்பாற் றுதற்குத் தாற்றெருடுஞ்செவ்
விளநீர் கொடுப்ப வீற்றுளைந்த

காலப் புயலின் முகந்துடைக்கும்
கமுகு பழுக்காய்ப் பவழமுடன்
கதிர்முத் திட்டுச் செழும்பாளைக்
கற்றைக் கவரி புடையிரட்டும்

மாலைப் பழனப் பருதிபுரி
வாழ்வே தாலோ தாலேலோ
மலையாள் வயிறு வாய்த்தமுழு
மணியே தாலோ தாலேலோ. (ரு)

வயல்வெளி

பரிதிபுரியின் தெங்கு கமுகுகளுடன் கூடிய பழனச் சிறப்பு இப்பாட்டுள் கூறப்பெறுகின்றது.

(இ-ள்) சோலை புறம் மு புடை கனிகள் தூக்கும் முடம் தெங்கு — சோலைகளின் புறத்தேயுள்ள மூன்று புடைப்பினையுடைய கனிகள் (தேங்காய்கள்) தொங்கப்பெறும் வளைவாகிய தென்னை மரங்களானவை;

இமையவர் தம் தோன்றல் திரு ஓலக்கத்து தோகை மயிலின் நடம் குயிற்றும் ஏலம் கரு கொந்தளம் அளகத்து இள மாதருக்கு — தேவர் தமது அரசனாகிய இந்திரனது அழகிய அரசிருக்கை மண்டபத்தே, (தோகையையுடைய மயில்போல) நாட்டியத்தைச் செய்யும், ஏலம் முதலானவற்றாற்செய்த மயிர்ச்சாந்தணிந்த கரிய கொத்தாகிய கூந்தலையுடைய இளைய பெண்களுக்கு;

முதிர் வேனில் இளைப்பு ஆற்றுதற்கு தாற்றொடும் செ இள நீர் கொடுப்ப—முதிர்ந்த வெய்யிற் காலத்திலே இளைப்பினைத் தணிப்பதற்குத், தாறொடுகூடிய சிவந்த இளநீரினைக் கொடுப்ப;

ஈற்று உளைந்த காலம் புயலின் முகம் துடைக்கும் கமுகு — மழைத்துளிகளை ஈன்று, அதனால் வருந்திய, காலத்தில் பெய்யும் மேகத்தினது, முகத்தைத் துடைக்கின்ற பாக்குமரங்களானவை;

பழுக்காய் பவளம் உடன் கதிர் முத்து இட்டு செழு பாளை கற்றை கவரி புடை இரட்டும் மாலை பழனம் — பழுத்த காயாகிய பவளத்தோடு (அரும்பாகிய) ஒளிமுத்தை அணிந்துகொண்டு, செழிய பாளையாகிய திரண்ட வெண்சாமரையை இரண்டு பக்கத்தும் வீசுவதற்கு இடமாகிய வரிசையான வயல் நிலங்கள்;

(பழனம்) பரிதி புரி வாழ்வே — அத்தகைய பழனங்கள் சூழ்ந்த பரிதிபுரிக்கு வாழ்வாயுள்ளவனே; (எ-று)

முடிபு :— தெங்கு தோன்றல் திருவோலக்கத்து நடம் குயிற்றும் இள மாதருக்கு வேனில் இளைப்பாற்றுதற்குத் தாற்றொடும் இளநீர் கொடுப்ப, கமுகு பவழமுடன் முத்திட்டுப் பாளையாகிய கவரி புடையிரட்டும் பழனம்; அப்பழனத்தையுடைய பரிதிபுரி, அப்புரிக்கு வாழ்வே! முழு மணியே! தாலேலோ.

27. மாலி மயத்து மடப்பிடி பெற்று
வளர்த்த விளங்களிறே
மழவிடை யேதிரு மாமடி கட்கெண
வைத்த கவுத்துவமே

மூல மெனக்குல நான்மறை யோலிடு
முழுமுத லேமூவா
முக்கட் கனிகனி யுஞ்சுவை யேதனி
முத்திக் கொருவித்தே

சாலை யிளங்கதி ருக்கெதிர் முதிரும்
கதிர்செம் பவளமுடன்
கதிர்முத் திட்டுவ ணங்கக் கன்னல்கொல்
கமுகுகொ லெனவளரும்

சாலி வயற்றமிழ் வேளூ ரடிகேள்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (சூ)

## முருகப் பெருமானைப் பல பொருள்களாகக் கூறியது

(இ—ள்) மால் இமயத்து மடம் பிடி பெற்று வளர்த்த இள களிறே — பெரிய பனிமலையிற் பிறந்த இளைய பெண்யானை போன்ற உமாதேவியார் பெற்று வளர்த்த இளைய ஆண்யானையே!;

மழ விடையே — இளைய காளையே!;

திரு மாமடிகட்கு என வைத்த கவுத்துவமே — உயர்ந்த மாமனாகிய முதல்வனுக்கு (திருமாலுக்கு) என்று (கருதி) வைத்த கவுத்துவ மணியே!;

மூலம் என குலம் நான் மறை ஓலிடு முழு முதலே — எல்லாப் பொருட்கும் அடி என்று, சிறந்த நான்கு மறைகளும் முறையிடுகின்ற முழுமுதற் பொருளே!;

மூவா முக்கண் கனி கனியும் சுவையே — இறவாத மூன்று விழிகளையுடைய (சிவபெருமானாகிய) பழத்திடத்தே பழுத்த சுவையே!;

தனி முத்திக்கு ஒரு வித்தே — ஒப்பற்ற வீடுபேற்றை யடைவதற்கு ஒப்பற்ற விதையாயுள்ளவனே!

காலை இள கதிருக்கு எதிர் முதிரும் கதிர் செம் பவளமுடன் கதிர் முத்து இட்டு வணங்க கன்னல் கொல் கமுகு கொல் என வளரும் சாலி—காலைப் பொழுதிலே (தோன்றும்) இளஞ்சூரியனுக்கு எதிரிலே முதிரும் (நெற்) கதிர் சிவந்த பவளத்துடன் ஒளி தங்கிய முத்தைக் கொடுத்து வணங்கவேண்டி, கரும்போ கமுகோ என்று சொல்லும்படி, வளருகின்ற நெற் பயிர்;

(சாலி) வயல் தமிழ் வேளூர் அடிகேள் சங்கம் தமிழின் தலைமை புலவா தாலோ தாலேலோ—(அத்தகைய நெற்) பயிரையுடைய வயல்கள் சூழ்ந்த தமிழ் வழங்கும் வேளூர் அடிகளே! தலைச் சங்கத் தமிழின் தலைமைப் புலவனே! உனக்குத் தாலாட்டு (எ...று)

முடிபு:— இமயத்துப் பிடிபெற்று வளர்த்த களிறே, விடையே, மாமடிகட்கு என வைத்த கவுத்துவமே, மறைமூலம் என ஓல் இடு முழுமுதலே, மூவாத முக்கட்கனி கனியும் சுவையே, முத்திக்கு வித்தே, காலை இளங்கதிருக் கெதிர் முதிரும் கதிர் செம்பவளமுடன் கதிர் முத்திட்டு வணங்க கன்னல்கொல் கமுகுகொல் என வளரும் சாலி, அச்சாலியையுடைய வயல்; அவ்வயல் சூழ்ந்த வேளூர், அவ்வேளூர் அடிகளே புலவா தாலேலோ.

(கு--ரை) முருகப் பெருமான் செந்நிறம் உடையவராகையால் செந்நிறம் வாய்ந்த கவுத்துவமணியாகக் கூறப்பெற்றூர்; திருமாலாகிய மாமன் முருகனுகிய குழந்தையைத் தன் மார்பில் வைத்து விளையாடும் பொழுதில், அம்முருகப்பெருமான் அவர் மார்பில் 'கவுத்துவமணிபோல்' காட்சி அளிப்பதால், "திருமாமடி கட்கென வைத்த கவுத்துவமே" என்றூர். இங்ஙனமே ஒட்டக்கூத்தரும் "விக்ரம சோழன் வரைத்திரு மார்பில் விளங்கு கவுத்துவமே" (குலோ—பிள்—49) என்று குலோத்துங்கனைப் பாராட்டுதல் காண்க. இளைய கதிருக்கெதிர் முதிரும் கதிர் செம்பவளம் என்றதில் முரண் தொடை அமைந்துள்ளமை காண்க.

28\. கருமுகி லுக்கரி தாமடி வாரம்
கண்டிரு பறவைகடம்
கண்களி பொங்கவொர் பறவை முடித்தலை
காணு துட்குவரப்

பொருபுன லருவித் தலையின் மிசைத்தவழ்
புதுமதி நிலவொழுகப்
புள்ளூ ரிற்பொலி வெள்ளி மலைக்கட்
பொன்மலை யைக்குவவு

குருமணி வயிரப் புயமெனு மெட்டுக்
குவடுஞ் சுவடுபடக்
குத்திப் பொருமிரு கோடு படைத்ததொர்
கூந்தற் பிடிபெற்றுத்

தருமொரு தொந்தித் தந்திக் கிளையாய்
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (எ)

**சிவபெருமானைப் பொன்மலையாகவும் உமாதேவியைப் பிடியாகவும் கூறி, அம்மலையிற் பயின்றபிடி பெற்றுத்தந்த யானைமுகக் கடவுட்கு இளையவனே என்று முருகனைக் கூறிப் புகழ்ந்தது.**

(இ-ள்.) கரு முகிலுக்கு அரிது ஆம் அடிவாரம் கண்டு இரு பறவைகள் தம் கண் களி பொங்க—திருமாலாகிய கரிய மேகத்திற்கு அறிதற்கு அரிதாகும் அடிப்பகுதியைப் பார்த்து, சம்பாதி சடாயு என்னும் இரண்டு பறவைகள் தம்முடைய விழிகள் களிப்பு மிக;

ஓர் பறவை முடி தலை காணாது உட்குவர — பிரமனாகிய ஓர் அன்னப் பறவை முடியோடு கூடிய தலையைக் காணப்பெறாமல் அஞ்ச;

பொருபுனல் அருவி தலையின்மிசை தவழ் புது மதி நிலவு ஒழுக—தாக்கும் நீரையுடைய (கங்கையாகிய) அருவியையுடைய தலையின் மேல் தவழ்கின்ற புதிய பிறையின் நிலா எறிக்க;

புள்ளூரில் பொலி வெள்ளி மலைக்கண் பொன் மலையை—புள்ளூரிலே விளங்குகின்ற வெள்ளி மலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானாகிய பொன் நிறம்பெற்ற மலையை;

குவவு குரு மணி வயிரம் புயம் எனும் எட்டு குவடும் சுவடு படகுத்தி பொரும் இரு கோடு படைத்தது ஓர் கூந்தல் பிடி—திரட்சியாகிய நிறமுள்ள வயிர மணியை (அணிந்த) தோள் என்னும் எட்டுக் குவட்டையும் தழும்பு தோன்றக் குத்தித், தாக்கும், இரண்டு (நகிலாகிய) தந்தத்தைப் பெற்றதாகிய (உமாதேவியென்னும்) ஓர் கூந்தலையுடைய பெண் யானையானது;

பெற்று தரும் ஒரு தொந்தி தந்திக்கு இளையாய் — பெற்றுத் தந்த ஒப்பற்ற வயிற்றையுடைய யானைமுகக்கடவுட்கு இளையவனே! (எ-று)

முடிபு:— முகிலுக்கு அரிதாம் அடிவாரத்தை இரு பறவைகள் கண்டு, கண் களி பொங்க, ஓர் பறவை தலை காணாது உட்குவர, அருவித் தலையின் மிசை தவழ் மதி நிலவு ஒழுக, புள்ளூரில் பொலி பொன் மலையைப் புயம் எனும் எட்டுக்குவடும் சுவடுபடக் குத்திப் பொரும் கோடு படைத்ததாகிய பிடி பெற்றுத் தரும் தந்திக்கு இளையாய்! புலவா! தாலேலோ,

(கு—ரை.) சிவபெருமானைப் பொன்மலை என்று உருவகித்தற்கு ஏற்ப அதன் அடிவாரம் முகிலால் அறிதற் கரியது எனவும் அவ் அடிவாரத்தை இரண்டு பறவைகள் கண்டு கண் களி பொங்குவதெனவும், ஒரு பறவையினால் காணுதற்கரிய முடியை உடையதெனவும், அருவியையுடைய சிகரத்தில் நிலவு ஒழுகுவதெனவும், எட்டுக் குவடுகளைக் கொண்டதெனவும், அக்குவடுகள் ஓர் யானையின் கொம்பால் குத்தப்படுவதெனவும் கூறப்பட்டன.

29. உண்ணெகிழ் தொண்ட ருளத்திருள் சிந்திட
ஒளிவிடு முழுமணியே
உயர்மறை நூல்கலை முடிவின் முடிந்திடும்
ஒழுகொளி மரகதமே
விண்ணொடு மண்ணை விழுங்கி யருட்கதிர்
விரியு மிளஞ்சுடரே
மெய்ப்புலன் வேய்ந்து சமைந்ததொர் வீட்டை
விளக்கும் விளக்கொளியே
புண்ணிய நாறுமொர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே
புள்ளூ ரெனவெம துள்ளத் தடநிறை
புத்தமு தக்கடலே
தண்ணொளி பொங்கிய கருணை நிதியே
தாலோ தாலேலோ
சங்கத் தமிழின் றலைமைப் புலவா
தாலோ தாலேலோ. (அ)

முருகக் கடவுளைப் பல பொருளாகக் கூறிப் புகழ்ந்தது.

(இ-ள்) உள் நெகிழ் தொண்டர் உளத்து இருள் சிந்திட ஒளி விடும் முழு மணியே—மனம் உருகும் அடியாரது உள்ளத்திலேயுள்ள அறியாமையாகிய இருள் நீங்க, ஒளியை வெளிவிடும் முழு மாணிக்கமாகிய விளக்கே!

உயர் மறை நூல் கலை முடிவில் முடிந்திடும் ஒழுகு ஒளி மரகதமே — உயர்ந்த மறையும் நூலும் கலையும் ஆகிய இவற்றின் முடிந்த பகுதியில் முடிந்துநிற்கும் ஒழுகும் ஒளியையுடைய மரகத மணியே! (நூற்கலை என்பது நூலாலாகிய ஆடை என்றும் பொருள்பட்டு அவ்வாடையின் தலைப்பில் முடிந்துவைக்கப்பெறும் மரகத மணியே என்று வேறொரு பொருளையும் தந்தது.)

விண்ணொடு மண்ணை விழுங்கி அருள் கதிர் விரியும் இள் சுடரே—வான் இடத்தையும் மண்ணிடத்தையும் உட்கொண்டு அருளாகிய வெயில் விரியப்பெற்ற (தினமணியாகிய) இள ஞாயிறே!

மெய் புலன் வேய்ந்து சமைந்தது ஓர் வீட்டை விளக்கும் விளக்கு ஒளியே—உண்மையாகிய அறிவினால் வேயப்பெற்று, (மேல் மூடப்பெற்று) அமைந்ததாகிய ஒப்பற்ற மோட்சமாகிய வீட்டினை, விளங்கச் செய்யும் விளக்கின் ஒளியே!

புண்ணியம் நாறும் ஓர் பெண்கனி கனியும் புனிதம் நறு கனியே—அறம் தோன்றுவதற்கிடமான ஒப்பற்ற பெண்கனியாகிய உமாதேவியால் விரும்பப்பெறும் தூய நன்மணமுள்ள பழமே!

புள்ளூர் என எமது உள்ளம் தடம் நிறை புது அமுதம் கடலே—புள்ளூரில் (விரும்பி எழுந்தருளியிருப்பதைப்) போல, எம்முடைய மனமாகிய இடத்திலே நிறைந்துள்ள புதிய அமிழ்தக் கடலே!

தண் ஒளி பொங்கிய கருணை நிதியே—குளிரும் ஒளி மிகுந்த அருட் செல்வமே! (எ—று)

முடிபு:— முழு மணியே, மரகதமே, இளஞ்சுடரே, விளக்கொளியே, நறுங்கனியே, அமுதக்கடலே, கருணைநிதியே, தலைமைப் புலவா, தாலோ தாலேலோ.

'மெய்ப்புலன் மேய்ந்து' என்றும் பாடம்.

(சந்த விருத்தம்)

தான தனத்தன தான தான தானன

30. தோலா தமுத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தொடு வேலா நூலா நூலோதும்
சீலா மலைக்கொடி பாலா கீலா மேலாகும்
தேவா திபற்கொரு தேவா வேர்வா தேகூவும்
காலா யுதக்கொடி வீரு வேரு வேறேறும்
காபா லிபெற்றகு மாரா வீரா பேராளா
சேலார் வயற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனு பதிப்பெரு மாளே தாலோ தாலேலோ. (சா)

முருகனைப் பலவகையாகப் பாராட்டியது.

(இ—ள்) தோலாத மு தமிழ் நாவா—தோல்வியடையாத மூன்று தமிழ் பயிலும் நாவை உடையவனே;

மூவா மா ஆம் அ சூர் வேர் அற தொடு வேலா—அழியாதவனும் மாமரம் ஆனவனும், ஆகிய அந்தச் சூர பதுமனது குலமாகிய வேர் அற்றுப்போகும்படிச் செலுத்திய வேலையுடையவனே;

நூலா நூல் ஓதும் சீலா—(ஒரு புலவனால்) நூற்கப்படாத நூலாகிய மறையினால் ஓதப்பெறும் தூய்மையானவனே;

மலை கொடி பாலா—இமயமலையிற் றோன்றிய கொடிபோன்ற உமாதேவியாரின் குழந்தையே!

கீலா—அச்சாணிபோன்றவனே, அல்லது அக்னியின் சுவாலை வடிவாயுள்ளவனே, என்றுமாம்;

மேல் ஆகும் தேவாதிபற்கு ஒரு தேவா — மேன்மையாகும் தேவர் தலைவனாகிய சிவபெருமானுக்கு ஒப்பற்ற தெய்வமா யுள்ளவனே;

ஓவாதே கூவும் கால் ஆயுதம் கொடி வீரு — இடையருமல் கூவுகின்ற காலை ஆயுதமாகவுடைய சேவலைக் கொடியாகக் கொண்ட பெருமையுள்ளவனே;

ஏரு ஏறு ஏறும் காபாலி பெற்ற குமாரா-ஒருவரால் ஏறப்பெருத திருமாலாகிய காளையை ஊர்தியாகக்கொண்டு ஏறும், பிரம்ம கபாலத்தையுடைய சிவபெருமான் பெற்ற குமாரனே;

வீரா பேர் ஆளா சேல் ஆர் வயல் குருகூரா சேனுபதிப் பெருமாளே—வீரனே! சிறந்த பெயரை ஆள்கின்றவனே! சேல் மீன்கள் பொருந்திய வயல் சூழ்ந்த புள்ளூரனே! தேவசேனைக்கு அதிபதியாகிய பெருமாளே; (எ—று)

முடிபு:— நாவா, வேலா, சீலா, பாலா, கீலா, தேவா, வீரு, குமாரா, வீரா, பேராளா, குருகூரா, பெருமாளே தாலோ தாலேலோ.

(கு—ரை) நூலா நூல்—மறை. நூற்றல்—நூல் செய்தல் கீலா என்பதற்கு ஒளியுருவனே என்பர். ரா. எல்லாவற்றிற்கும் மூலமாக உள்ளவனே; கீலம்—முளை என்பர் உ. வே. சா.

'கீல:' என்னுஞ்சொல் ஸ்திரீலிங்கம், புல்லிங்கம் என்னும் இரண்டு லிங்கத்தையுணர்த்தி, ஆணிக்கும், அக்னி ஜ்வாலைக்கும், உரியதாய் வரும் என்பதை அமரகோசத்தால் அறிக.

31. ஊனுயு யிர்க்குயி ராயை் தாலோ தாலேலோ
ஓதாது ணர்த்திடு போதா தாலோ தாலேலோ
ஆனுவ ருட்கனு பானு தாலோ தாலேலோ
ஆயாத சொற்சொ லுபாயா தாலோ தாலேலோ
நானுமெ னக்கரி தாயை் தாலோ தாலேலோ
நாதாதி கட்கனு பூதா தாலோ தாலேலோ
தேனுர்பொ ழிற்குரு கூரா தாலோ தாலேலோ
சேனுப திப்பெரு மாளே தாலோ தாலேலோ. (௧௦)

முருகப் பெருமானின் பலவகைப் பெருமைகள் கூறப்படுகின்றன.

(இ-ள்.) ஊன் ஆய் உயிர்க்கு உயிர் ஆனுய் — (உயிர்கள் வாழ்வதற்கு) உடம்பாகி, அவ்வுயிர்கட்கு உயிராயிருந்து (அவற்றை இயக்குகின்றவனே);

ஓதாது உணர்த்திடும் போதா — வாயினுற் சொல்லாமல், குறிப்பால் உணர்த்திடும் ஞானத்தையுடையவனே; ‘உணர்ந்திடும்’ என்ற பாடத்திற்கு ‘ஒரு நூலையும் ஓதாமலேயே எல்லாவற்றையும் உணர்ந்துகொள்ளும் முற்றறிஞனே’ என்று பொருள் கூறுக.

ஆனு அருட்கு அனுபானு — குறையாத அருளைப் பெறுதற்குத் துணையாயுள்ளவனே;

ஆயாத சொல் சொல் உபாயா — (பிறரால்) ஆராய்ச்சி செய்வதற்கியலாத மறையாகிய சொல்லை (த்தெளிவாக)ச் சொல்லும் உபாயமாயிருப்பவனே;

நான் ஆய் எனக்கு அரிது ஆனுய் — உயிராகிய நானும் ஆகி எனக்கு உணர்தற்கரிய பொருளும் ஆனவனே;

நாதம் ஆதிகட்கு அனுபூதா — நாதம் முதலான தத்துவங்கட்கு நிமித்த காரணமாயுள்ளவனே;

தேன் ஆர் பொழில் குருகூரா சேனுபதி பெருமாளே — தேன் பொருந்திய சோலை சூழ்ந்த புள்ளூரனே தெய்வ சேனைக்குத் தலைவனுகிய பெருமாளே. (எ-று)

முடிபு :— ஊன் ஆய் உயிர் ஆனுய், போதா, அனுபானு, உபாயா, நான் ஆய் அரிதானுய், அனுபூதா, குருகூரா, பெருமாளே தாலோ தாலேலோ.

---

## ௬. சப்பாணிப்பருவம்

32. முடங்குந் திரைப்பரவை வயிறுளைந் தீன்றநறு
முளரிப் பிராட்டிவைத்து
முத்தாடு பச்சைப் பசுங்கிள்ளை யெனமழலை
முதிருமென் குதலைகற்பத்

தொடங்குங் குறப்பாவை கற்றைக் குழற்கிற்
றாமமொடு தாமமிட்டுச்
சுடிகைநுதல் வெயர்வுந் துடைத்தொழுகு கத்தூரி
தூரியங் கொண்டு தீட்டிக்

குடங்கைக் கடங்கா நெடுங்கட் கடைக்கழகு
கூரவஞ் சனமெழுதிமென்
கொங்கைத் தடத்துப் பசுங்களப மப்பியவள்
குற்றேவன் முற்றுமாற்றித்

தடங்குங் குமப்புயங் கொட்டிநட மிட்டவன்
சப்பாணி கொட்டியருளே
தையனு யகிமருவு தெய்வநா யகன் மதலை
சப்பாணி கொட்டியருளே. (க)

முருகக்கடவுள் வள்ளிநாயகியை அணிந்து குற்றேவல் ஆற்றிய செய்தி இதனுள் கூறப்படும்.

(இ—ள்) முடங்கும் திரை பரவை வயிறு உளைந்து ஈன்ற நறு முளரி பிராட்டி வைத்து முத்து ஆடு பச்சை பசு கிள்ளை என மழலை முதிரும் மெல் குதலை கற்ப தொடங்கும் குறம் பாவை—மடங்கும் அலைகளையுடைய திருப்பாற்கடலானது (தன்) வயிறு வருந்திப் பெற்ற, நறுமணம் உள்ள செந்தாமரையில் வீற்றிருக்கும் (திருமகளாகிய) பெருமாட்டி (தன் மடியில்) வைத்து முத்தமிடப் பெற்ற மிகவும் பச்சை நிறமுடைய கிளியைப்போல, இளமைத் தன்மைமிகும் மென்மையான குதலைச் சொற்களைப் பயிலத் தொடங்கும் குறக்குலத்தில் வளர்ந்த பாவை போன்ற (வள்ளி நாயகியினது);

கற்றை குழற்கு அகில் தூமமொடு தாமம் இட்டு—திரண்ட கூந்தலுக்கு அகிற்புகையொடு மலர்மாலையை அணிந்து;

சுடிகை நுதல் வெயர்வும் துடைத்து—சுட்டி (என்னும் அணிகலன் அணிந்த) நெற்றியில் உள்ள வேர்வையையும் துடைத்து;

ஒழுகு கத்தூரி தூரியம் கொண்டு தீட்டி—நெகிழும் கத்தூரிக் குழம்பை எழுதுகோலில் தோய்த்துக்கொண்டு (திலகம்) எழுதி;

குடம் கைக்கு அடங்கா நெடு கண் கடைக்கு அழகு கூர அஞ்சனம் எழுதி—வளைந்த கைக்கு அடங்காத நீண்ட விழிகளின் ஓரத்திற்கு அழகு மிக மைதீட்டி;

மெல் கொங்கை தடத்து பசு களபம் அப்பி—மெல்லிய நகிலின் பேரிடத்தே குளிரும் கலவைச் சாந்தை அப்பி;

அவள் குறு ஏவல் முற்றும் ஆற்றி—அவள் (பணித்த) சிறு பணிகளையெல்லாம் குறைவறச் செய்து;

தட குங்குமம் புயம் கொட்டி நடம் இட்டவன் சப்பாணி கொட்டி அருள்—(குற்றேவல் செய்து முடித்த களிப்பின் மிகுதியால்) அகன்ற குங்குமம் அணிந்த தோள்களைத் தட்டிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடியவனே! சப்பாணி கொட்டியருள்க;

தையல் நாயகி மருவு தெய்வம் நாயகன் மதலை சப்பாணி கொட்டி அருள்—; (எ—று)

முடிபு:— இட்டு, துடைத்து, தீட்டி, எழுதி, அப்பி, ஆற்றி, கொட்டி, நடமிட்டவன்! சப்பாணி கொட்டியருள்.

33. மழைக்கொந் தளக்கலப மயிலிளஞ் சாயனெடு
மதரரிக் கெண்டையுண்கண்
மான்கன்றை யமருலகு வாழப் பிறந்திடு
மடப்பிடியை வானவில்லைக்
குழைக்குந் தடக்கைத் திருத்தாதை நீரொடு
கொடுப்பக் குடங்கையேற்றுக்
கொழுமலர் மணங்கமழ் மணப்பந்தர் நிற்பவக்
கொம்புமின் கொடியினொல்கி
இழைக்கும் பசும்பொற் றசும்பென வசும்புபொன்
னிளமுலை முகங்கோட்டிநின்
றெய்யாமை நோக்கும் படைக்கட் கடைக்கணோக்
கின்னமுத மூற்றவின்பம்
தழைக்கும் பெருங்காதல் வெள்ளந் திளைத்தவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன் மதலை
சப்பாணி கொட்டியருளே. (உ)

**முருகப் பெருமான் தெய்வயானை அம்மையாரை மணந்து காதல் வெள்ளத்தில் திளைத்த செய்தி இதனுள் கூறப்படுகின்றது.**

(இ—ள்) மழை கொந்தளம் கலபம் மயில் இள சாயல் நெடு மதர் அரி கெண்டை உண் கண் மான் கன்றை—கருமுகில் போன்ற கூந்தலையும், தோகையையுடைய மயில்போன்ற இளைய சாயலையும், கெண்டை மீன்போன்ற நீண்ட களித்த செவ்வரி பரந்த மையுண்ட விழிகளையும் உடைய மான் கன்று போன்றவளாகிய;

அமர் உலகு வாழ பிறந்திடு மடம் பிடியை—தேவர் உலகம் வாழ்வதற்காக (இந்திரனிடத்தே மகவாய்த்) தோன்றிய இளைய பெண்யானை போன்ற தெய்வயானை அம்மையை;

வானம் வில்லை குழைக்கும் தட கை திரு தாதை நீரொடு கொடுப்ப—வானத்திடத்தே தோன்றும் (இந்திரவில்) வில்லினை வளைக்கும் பெரிய கையையுடைய அழகிய இந்திரனாகிய தந்தை தாரை நீரொடு கொடுக்க;

குடம் கை ஏற்று கொழு மலர் மணம் கமழ் மணம் பந்தர் நிற்ப—(முருகனாகிய நீ) குழிந்த உள்ளங்கையில் ஏற்றுக்கொண்டு செழித்த பூக்களின் மணம் மணக்கும் மணப்பந்தரிலே நின்றருள;

அ கொம்பு மின் கொடியின் ஒல்கி இழைக்கும் பசு பொன் தசும்பு என அசும்பு பொன் இள முலை முகம் கோட்டி நின்று எய்யாமை நோக்கும் படை கண் கடைக்கண் நோக்கு இன் அமுதம்

ஊற்ற—அப் பூங்கொம்பு போன்ற அம்மையார் மின்னற் கொடிபோல் துவண்டு, செய்யப்பெற்ற சிறந்த பொற்குடம்போலத் துளிக்கும் பொன்னிறமுடைய இளைய நகில்வரை (நாணத்தால்) முகம் வளைத்து நின்று, பிறர் அறியாமல் பார்க்கும் வேற்படை போன்ற விழியினது கடைக்கண் பார்வை இனிய அமிழ்தத்தைச் சொரிய;

இன்பம் தழைக்கும் பெரு காதல் வெள்ளம் திளைத்தவன் தையல் நாயகி மருவு தெய்வநாயகன் மதலை சப்பாணி கொட்டி அருள்—(அதனால்) இன்பம் ஓங்கும் பெரிய அன்பு வெள்ளத்திலே மூழ்கியவனே! தையல் நாயகி மருவு தெய்வநாயகன் மதலையே! சப்பாணி கொட்டியருள்வாயாக (எ—று)

முடிபு:— மான் கன்றாகிய மடப்பிடியைத் தாதை நீரொடு கொடுப்ப, கையேற்று, பந்தர் நிற்க, அக்கொம்பு ஒல்கி, முகம் கோட்டி நின்று, எய்யாமை நோக்கும் கண்ணினது கடைக்கண் நோக்கு அமுதம் ஊற்ற, (அதனால்) காதல் வெள்ளம் திளைத் தவனே! சப்பாணி கொட்டியருள்.

(கு—ரை) அமரர் உலகு அமருலகு என்றாயிற்று, "படைக்கட் கடைக்கணோக்கு இன்னமுதம் ஊற்ற" என்பதற்கு 'வேற்படை போன்ற கண்கள் கடைக்கண் நோக்காகிய இனிய அமிர்தத்தை வார்க்க' என்று உரை காண்பர் இராமசாமி நாயுடு அவர்கள்.

34. உண்ணிலா வுவகைத் தடங்கடல் படிந்திட்ட
உம்பருஞ் செங்களம்பட்
டொண்பருதி யுடல்கிழித் தோடுங் கடற்றானை
ஒளிறுவா ளவுணர்குழுவும்
தெண்ணிலா மதிநுதற் றெய்வப் பிணாக்கள்வாய்த்
தேனமுது மமுதவாரித்
தெள்ளமுது முடனிருந் துண்ணப் பணித்திட்ட
செங்கைவேல் பைம்புனத்துப்
பண்ணுலா மழலைப் பசுங்கிளவி யெயினர்பொற்
பாவைவிழி வேலொடொப்பப்
பார்க்குந் தொறுந்தலை கவிழ்த்துநின் றவடிருப்
பவளத்து முத்தரும்பும்
தண்ணிலா வுக்கொண் சகோரமென நின்றவன்
சப்பாணி கொட்டியருளே
தையனா யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (ந)

**முருகப்பெருமான் தனது சிறந்த வேலை வள்ளியம்மையின் விழிவேலுக்கு ஒப்பிட்டுப்பார்த்துத் தலைகவிழ்த்து நின்று அவள் முறுவற் குறிப்பை எதிர்நோக்கி நின்ற செய்தி இப்பாட்டுள் கூறப்படுகின்றது.**

உள் நிலா உவகை தட கடல் படிந்திட்ட உம்பரும்—(முருகன் தங்கள் பகைவராகிய அவுணருடன் போர் செய்வதைக்கண்டு) மனத்துள் நில்லாத மகிழ்ச்சியென்னும் பெருங்கடலில் மூழ்கியிட்ட தேவர்களும்;

செம் களம் பட்டு ஒள் பரிதி உடல் கிழித்து ஓடும் கடல் தானை ஒளிறு வாள் அவுணர் குழுவும்—சிவந்த போர்க்களத்திலே இறந்து ஒளியையுடைய சூரிய வட்டத்தின் (நடுவிடமாகிய) மெய்யைக் கிழித்துக்கொண்டு (வீரசுவர்க்கத்தை நோக்கி) ஓடுகின்ற கடல் போன்ற சேனையையும் ஒளிசெய்யும் வாளையும் உடைய அசுரருடைய கூட்டமும்;

தெள் நிலா மதி நுதல் தெய்வம் பிணுக்கள் வாய் தேன் அமுதும் அமுதம் வாரி தெள் அமுதும் உடன் இருந்து உண்ண பணித்திட்ட செம் கை வேல்—தெளிவாகிய நிலாவை வீசும் பிறைபோன்ற நெற்றியையுடைய தெய்வப் பெண்களது வாயிற் சுரக்கும் தேன் போன்ற அமிழ்தத்தையும் பாற்கடலிற் றோன்றிய சிறந்த அமிழ்தத்தையும் ஒருங்கிருந்துண்ணும்படி இயற்றிய சிவந்த கையிலுள்ள வேலினை;

பை புனத்து பண் உலா மழலை பசு கிளவி எயினர் பொன் பாவை விழி வேலொடு ஒப்பு பார்க்குந்தொறும்—பசிய தினைப்புனத்திலே இசை பொருந்திய மழலையாகிய ஈரச்சொல்லையுடைய வேடர் குலத்தில் தோன்றிய அழகிய பாவையின் (வள்ளியம்மையின்) விழியாகிய வேற்படையோடு ஒப்பிட்டுப் பார்க்குந்தொறும்;

தலை கவிழ்த்து நின்று—(நோய் நோக்காகிய நஞ்சையும் அந்நோய் தீர்க்கும் நோக்காகிய அமுதத்தையும் தான் ஒருங்குண்ணும்படி அவள் விழிவேல் உதவுவதால்) தலைகுனிந்து நின்று;

அவள் திரு பவளத்து முத்து அரும்பும் தண் நிலாவுக்கு ஒண் சகோரம் என நின்றவன் —அவ்வள்ளியம்மையாரது அழகிய இதழாகிய பவளத்துப் பல்வரிசையாகிய முத்துக்கள் தோற்றும் குளிர்ந்த ஒளியாகிய நிலவினுக்குச் சிறந்த சகோரப் பறவைபோல் நின்றவனே! (எ—று)

முடிபு :— உம்பரும், அவுணர் குழுவும், தெய்வப்பிணுக்கள் வாய் அமுதும், வாரி அமுதும் உடனிருந்து உண்ணப் பணித்திட்ட வேல் (வேலை), பாவை விழிவேலொடு ஒப்புப்பார்க்குந்தொறும் தலைகவிழ்த்து நின்று, அவள் பவளத்து முத்து அரும்பும் நிலாவுக்குச் சகோரம் என நின்றவனே! சப்பாணி கொட்டுக.

35. மடநடைத் தெய்வக் குறப்பாவை திருவுருவின்
மயிலிளஞ் சாயலுநிலா
மணிவட மறப்புடைத் திருமாந்த கனதன
வனப்புங் குறித்துநோக்கி

இடுகிடைப் பாவிக் கினிப்பிழைப் பில்லைகொல்
எனத்திரு வுளங்குழைந்தாங்
கேந்திளங் கொங்கையை யிணைப்புயத் தேந்திநின்
றெல்லா வுறுப்புநிற்கக்

குடமுலைக் கேயிவள் குடிப்பிறப் புக்கியை
குணங்கிடைத் ததுகொலென்றக்
கோதைநெடு நாணெய்த வவயவங் கட்குள
குணுகுணந் தனிதெரிக்கும்

தடமலர்க் கைத்தலஞ் சேந்தொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தையனு யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (ரு)

**முருகப்பெருமான் வள்ளிநாயகியின் உறுப்புக்களைப் புகழ்ந்து கூறிய செய்தி இப்பாட்டுள் கூறப்பெறும். இது புகழ்தலென்னும் துறை.**

(இ—ள்) மடம் நடை தெய்வம் குறப்பாவை திரு உருவின் மயில் இளம் சாயலும்—இளைய நடையழகு வாய்ந்த தெய்வத்தன்மை யுடைய குறப்பெண்ணாகிய வள்ளியம்மையாரின் அழகிய வடிவத்தி லுள்ள மயிற்சாயல்போன்ற இளைய மென்மைக் குணமாகிய சாயலினையும்;

நிலா மணி வடம் அற புடைத்து இறுமாந்த கனம் தனம் வனப்பும் குறித்து நோக்கி—(அம்மென்மைக் குணத்திற்கு மாறாய்) நிலவைச் செய்யும் முத்துமணியால் அமைந்த வடம் அற்றுப்போகும் படி பருத்து நிமிர்ந்துள்ள வட்டமாகிய நகில்களின் அழகையும் கருதிப்பார்த்து;

இடுகு இடை பாவிக்கு இனி பிழைப்பு இல்லை கொல் என திரு உளம் குழைந்து—சுருங்கிய இடையாகிய பாவிக்கு இனிமேல் வாழ்வு இல்லையோ எனக் கருதி அழகிய மனம் குழையப்பெற்று;

ஆங்கு ஏந்து இள கொங்கையை இணை புயத்து ஏந்தி நின்று—அப்பொழுது நிமிர்ந்த இளைய நகில்களை இரண்டு தோள்களில் தாங்கி நின்று;

எல்லாம் உறுப்பும் நிற்க குடம் மூலக்கே இவள் குடி பிறப்புக்கு இயை குணம் கிடைத்தது என்று—(இவளுடைய) எல்லா உறுப்புகளுமிருக்கக் குடம்போன்ற நகிலுக்கே இவளது வேடர்குடிப் பிறப்புக்கேற்ற (இடையைக் கொலை செய்யும்) பண்பு கிடைக்கப்பெற்றது என்று கூறி;

அ கோதை நெடு நாண் எய்த அவயவங்கட்கு உள குணு குணம் தனி தெரிக்கும் தட மலர் கை தலம் சேந்து ஒளி துளும்ப ஒரு சப்பாணி கொட்டி அருள்—அவ்வள்ளியம்மை மிக்க நாணத்தையடைய (அவளது) உறுப்புகளுக்குள்ள குணங்களையும் குணமின்மையையும் தனித்தனிச் சுட்டித் தெரிவிக்கின்ற பெரிய மலர்போன்ற கைத்தலமானது சிவந்து ஒளி ததும்ப சப்பாணி கொட்டுக. (எ—று)

முடிபு:— குறப்பாவை உருவின் சாயலும், தனவனப்பும் குறித்து, நோக்கி, இடையாகிய பாவிக்கு இனிப் பிழைப்பு இல்லைகொல்! என குழைந்து, கொங்கையைப் புயத்து ஏந்தி நின்று, எல்லா வுறுப்பும் நிற்க, மூலக்கே குணம் கிடைத்தது என்று, அக்கோதை நாண் எய்தத் தெரிக்கும் கைத்தலம் சேந்து துளும்ப, சப்பாணி கொட்டியருள்.

36. விண்ணென் கடற்புவன முடவுப் படத்தேந்து
வேந்துபொலி பாந்தள் வைப்பும்
விரிநீர் வரைப்புமெழில் விஞ்சைய ரிருப்புமுகை
விண்டுநறை விரிமுண்டகக்
கண்ணன் றிருப்பதமு நான்முகக் கடவுள்பூங்
கஞ்சமுங் குலிசப்பிரான்
கற்பகக் காவுநின் றொண்டர்க டொழும்புக்கொர்
காணியா வைத்துமற்றத்
திண்ணென் றடக்கைவெஞ் சிலைவேடர் குடிகொண்ட
சீறூரு மூரூர்தொறும்
செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம்
சீதனக் காணிபெற்றத்
தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன்
சப்பாணி கொட்டியருளே.
தையலு யகிமருவு தெய்வநா யகன்மதலை
சப்பாணி கொட்டியருளே. (ரு)

முருகப்பெருமான் பாந்தள் வைப்பு முதலான சிறந்த உலகங்களைத்
தம் தொண்டர்கள் தொழும்புக்குக் காணியாக வைத்துத், தான்
குறிஞ்சி நிலத்தை உரிமையாகக்கொண்டு தலையளித்த
செய்தி இதனுள் கூறப்படும்.

(இ—ள்.) விண் என் கடல் புவனம் முடவு படத்து ஏந்து வேந்து பொலி பாந்தள் வைப்பும்—விண்ணென்றிசைக்கும் கடல்

சூழ்ந்த உலகத்தை வளைதலையுடைய (தன்) படத்தில் ஏந்தும் ஆதி சேடனாகிய வேந்தன் விளங்கும் நாகலோகமும்;

விரிநீர் வரைப்பும் — விரிந்த நீரையுடைய கடல் சூழ்ந்த நில வுலகமும்;

விஞ்சையர் இருப்பும்—வித்தியாதரர் உலகமும்;

முகை விண்டு நறை விரி முண்டகம் கண்ணன் திருப்பதமும்— அரும்பு விரிந்து மணம் விரியும் தாமரை மலர் போன்ற கண்ணை யுடைய திருமாலின் பதவியாகிய வைகுண்டமும்;

நான்முகக் கடவுள் பூ கஞ்சமும் — பிரமதேவனது அழகிய தாமரை யுலகம் என்னும் பிரமலோகமும்;

குலிசம் பிரான் கற்பகம் காவும்—வச்சிரம் என்னும் படையை யுடைய இந்திரனது கற்பகச் சோலையும்;

நின் தொண்டர்கள் தொழும்புக்கு ஓர் காணி ஆ வைத்து — உன் தொண்டர்கள் செய்த தொண்டிற்கு ஓர் உரிமைப் பொருளாக வைத்துவிட்டு; (மற்று—அசை);

அ திண் என் தட கை வெம் சிலை வேடர் குடிகொண்ட சிறு ஊரும்—அந்தத் திண்ணென்ற பெரிய கையின்கண் கொடிய வில்லை யுடைய வேடர் குடியிருத்தலைக்கொண்ட சிற்றூர்களும்;

ஊர் ஊர் தொறும் செம் தினை புனம் மூடு தண் சாரல் பிறவும் ஆம் சீதனம் காணி பெற்று — அந்த ஒவ்வொரு ஊர் தொறும் உள்ள சிவந்த தினைப்புனம் நிறைந்த குளிர்ந்த மலைச்சாரல் பிறவும் ஆகும் (இவற்றை) வள்ளியம்மையின் சீதனக் காணியாகப் பெற்று;

அ தண் என் குறிஞ்சி தலம் தலையளிப்பவன் சப்பாணி கொட்டி அருள் — (சீதனக் காணியாகப்பெற்ற) அந்தக் குளிர்ந்த குறிஞ்சி நிலத்தைக் காப்பவனே ! சப்பாணி கொட்டியருள்க. (எ-று)

முடிபு :— பாந்தள் வைப்பும், வரைப்பும், விஞ்சைய ரிருப்பும், திருப்பதமும், கஞ்சமும், காவும் காணியா வைத்துச் சீறூரும் பிறவும் ஆம் சீதனக் காணிபெற்று, அக்குறிஞ்சித்தலம் தலையளிப்பவன் ! சப்பாணி கொட்டியருள்.

(வேறு)

37. கடலைச் சுவற வடித்து மிடித்துக்
கனவரை துகள்கண்டும்
கடிதிற் றிரிய வகுப்பதை யொப்பக்
காரவு ணக்கடலின்
உடலிற் பெருகிய குருதிக் கடல்பிண
வோங்கலொ டோங்கவமைத்

தொட்டிய வொட்டல ரிற்பிற கிட்டவர்
ஒழியப் பிறரையெலாம்
தடவுத் தாழியின் மத்தெறி தயிரிற்
றத்துதி ரப்புனலிற்
றசைகுடர் நிணமொடு மூளை குழம்பச்
சமர்விளை யாடல்செயும்
குடுமிச் சுடர்வடி வேலைத் தொட்டவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்குமரேசன்
கொட்டுக சப்பாணி. (கூ)

முருகப்பெருமான் வேற்படையை யேந்திச் சமர் விளையாடல் செய்த செய்தி இதனுள் கூறப்படும்.

(இ-ள்.) கடலை சுவற வடித்தும் — கடலினை நீர் வற்றும்படி வடியச்செய்தும்;

இடித்து கனம் வரை துகள் கண்டும் — பெரிய மலையை இடித்துத் தூள் செய்தும்;

கடிதில் திரிய வகுப்பதை ஒப்ப — (அழித்த கடலினையும் மலையினையும்) விரைவில் மீட்டும் உண்டாக்குவதை ஒப்ப;

கார் அவுணர் கடலின் உடலில் பெருகிய குருதி கடல் பிண ஓங்கலொடு ஓங்க அமைத்து — கரிய அவுணராகிய கடலின் உடம்பினின்றும் பெருகி நின்ற இரத்தக் கடலானது பிணமலையோடு ஓங்கும்படி அமையச் செய்து;

ஒட்டிய ஒட்டலரில் பிறகிட்டவர் ஒழிய பிறரை எலாம் — வஞ்சினம் கூறிய பகைவரில் புறங்கொடுத்தவர் தவிர (எதிர்த்த) பிறரையெல்லாம்.

தடவு தாழியில் மத்து எறி தயிரில்—பெரிய மண் பானையில் மத்தினால் கடையப்படும் தயிர்போல;

தத்து உதிரம் புனலில் தசை குடர் நிணமொடு மூளை குழம்ப— தாவும் இரத்தமாகிய நீரிலே தசையொடு குடரொடு நிணமொடு மூளையானது குழம்பும்படி;

சமர் விளையாடல் செயும் குடுமி சுடர் வடி வேலை தொட்டவ கொட்டுக சப்பாணி—போர்விளையாட்டைச் செய்யும் நுனியில் ஒளி வீசும் கூர்மையையுடைய வேற்படையைத் தொடுத்தவனே! சப்பாணி கொட்டுக;

கொழி தமிழ் வேதபுரி குமரேசன்—(குற்றம் நீங்கப் புலவரால்) கொழிக்கப்பெற்ற தமிழையுடைய வேதபுரிக் குமரேசனே! சப்பாணி கொட்டுக. (எ—று)

முடிபு:— கடலை வடித்து, வரையைத் துகள் கண்டு, (அவற்றைத்) திரிய வகுப்பதை யொப்ப, குருதிக்கடல் பிணஓங்கலொடு ஓங்க அமைத்து, ஒட்டலரில் பிறகிட்டவர் ஒழிய பிறரையெலாம், 'தயிரைப்போல' உதிரப்புனலில் தசையொடு குடரொடு நிணமொடு மூளை குழம்ப, சமர்விளையாடல் செயும் வேலைத்தொட்டவ! சப்பாணி கொட்டுக.

38. சமரிற் பட்டவர் வெட்டிய பூதத்
தலைவர்க ணிற்பமுதற்
றமரை நாயகன் வயிறு கிழித்துத்
தந்தொழி றலைநின்றுங்
கமரிற் குரிய மடக்கொடி யாரை
அலைத்தனர் பற்றியெயிற்
றவுண ரெனத்தமை புணரார் கணவர்கள்
ஆர்ப்பில் வெடித்தபெருங்
கமரிற் குருதி பிலத்தை நிரப்பிடு
களமெதிர் கண்டினியக்
காரவு ணக்கடல் சூரொடு மாளக்
கடிதிற் றடிதியடற்
குமரக் கடவு ளெனப்பணி வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி. (எ)

**போரில் இறந்த அசுரவீரர்கள் தேவவடிவத்துடன் வீர சுவர்க்கத்தை அடைந்து, தாம் அசுரராயிருந்ததை மறந்து, முருகன் அசுரருடன் போரிடும் போர்க்களத்தைக் கண்டு, 'அவுணரைச் சூரனொடு மாளக் கடிதில் அழிப்பாயாக' என்று வேண்டினர் என்பது இப்பாட்டுள் கூறப்படும்.**

(இ—ள்) சமரில் பட்டவர் —(முருகன் சூரனுடன் செய்த) போரில் இறந்த அசுரரானவர்;

வெட்டிய பூதத் தலைவர்கள் நிற்க—தம்மை வெட்டிய பூதகணத் தலைவர்கள் பார்த்துக்கொண்டு நிற்க (அவர்களுக்கு எதிரிலேயே);

தம் தொழில் தலைநின்று — அவுணராகிய தமது கொடுந் தொழிலை மேற்கொண்டு நின்று;

முதல் தாமரை நாயகன் வயிறு கிழித்து — முதன்மையான சூரியனது வயிற்றைக் கிழித்துக்கொண்டு (வீர சுவர்க்கத்தை அடைந்து);

ஆங்கு அமரிற்கு உரிய மடம் கொடியாரை அலைத்தனர் பற்றி – அவ்வீர சுவர்க்கத்தே வீரப்போர் செய்தார் அடைதற்குரிய இளங் கொடி போன்ற தேவப் பெண்களை வருத்திப் பற்றிக்கொண்டு;

எயிற்று அவுணர் என தமை உணரார்—வளைந்த பல்லையுடைய அசுரச் சாதியினர் எனத் தம்மைக் கருதாராய்;

கணவர்கள் ஆர்ப்பில் வெடித்த பெரு கமரில் குருதி பிலத்தை நிரப்பிடு களம் எதிர் கண்டு — (முருகப்பெருமான் படையிலுள்ள) பூத கணத்தினர் (ஆரவாரித்த) ஆர்ப்பினால் (வீரசுவர்க்கத்தின் கீழ்ப்பகுதி) வெடித்ததால் உண்டாகிய கமரின் வழியாய், இரத்தம் பாதலத்தை நிரப்பிடும் (தாம் முன் போர் செய்த) போர்க்களத்தைக் கண்ணெதிரே கண்டு;

இனி அ கார் அவுணர் கடல் சூரொடு மாள கடிதில் தடிதி அடல் குமரக் கடவுள் என பணி வேலவ கொட்டுக சப்பாணி — (அங்கு போர் செய்யும் முருகனைப் பார்த்து) இப்பொழுது அந்தக் கருத்த அசுரராகிய கடலானது சூரனொடு இறக்க விரைவில் அழிப் பாயாக வெற்றியையுடைய குமாரக் கடவுளே! என அவர்களால் வணங்கப்பெறும் வேலவனே! சப்பாணி கொட்டுக. (எ–று)

முடிபு:— பட்டவர், பூதத்தலைவர் நிற்ப, நாயகன் வயிறு கிழித்துத் தம்தொழில் தலைநின்று, ஆங்கு கொடியாரை அலைத் தனர்பற்றி, தமை அவுணரென உணரார், களம் எதிர்கண்டு, இனி குமரக் கடவுளே! அவுணக்கடல் சூரொடு மாளத் தடிதி எனப் பணி வேலவ! சப்பாணி கொட்டுக.

39. அற்ற வுடற்குறை யிற்ற முடித்தலை
அங்கைத் தலம்வைத்திட்
டாடு பறந்தலை யோடுதி ரப்புனல்
ஆறு கடத்துகெனும்
சிற்றல கைக்கொரு பேரல கைப்பெண்
தேரழி யக்கழியும்
திகிரிப் பரிசில் விடப்படு சுழியிற்
றெருமரல் மட்பகைஞன்
பற்றிய திரிகை திரித்து விடத்திரி
பரிசென வுஞ்சுழலும்
பம்பர மெனவும் வரும்படி யவுணர்
படக்கள வேள்விசெயாக்

கொற்ற மகட்புண ருஞ்சுடர் வேலவ
கொட்டுக சப்பாணி
கொழிதமிழ் வேத புரிக்கும ரேசன்
கொட்டுக சப்பாணி (அ)

## முருகன் அவுணருடன் போர் செய்த போர்க்களப் புனைவு

(இ-ள்) அற்ற உடல் குறை இற்ற முடி தலை அம் கை தலம் வைத்திட்டு ஆடு பறந்தலை — தலை வெட்டுண்ட குறையுடல்கள் (கவந்தங்கள்) வெட்டப்பெற்ற மயிர் முடியோடு கூடிய தம் தலையை உள்ளங்கையாகிய இடத்திலே வைத்துக்கொண்டு ஆடுகின்ற போர்க்களத்திலே;

ஓடு உதிரம் புனல் ஆறு கடத்துக எனும் சிறு அலகைக்கு — ஓடுகின்ற இரத்தமாகிய நீர் (நிறைந்த) ஆற்றைக் கடக்கும்படி செய்க என்று சொல்லும் சிறிய பேயின் பொருட்டு;

ஒரு பேர் அலகை பெண் தேர் அழிய கழியும் திகிரி பரிசில் விட — ஒரு பெரிய பெண் பேயானது தேர் அழிந்து போக (அதனிலிருந்து) நீங்கும் சக்கரத்தை எடுத்து அதனைத் தோணியாகக்கொண்டு (அதன்மேல் அச்சிறு பேயை வைத்து அவ்வாற்றிலே) விட;

படு சுழியில் தெருமரல் — (அத்தோணி) மிக்க சுழியிடத்தே சென்று சுழலுவது;

மண் பகைஞன் பற்றிய திரிகை திரித்து விட திரி பரிசு எனவும் சுழலும் பம்பரம் எனவும் வரும்படி — குயவன் தான் பிடித்த சக்கரத்தைச் சுழற்றிவிட (அச்சக்கரம்) சுழலுகின்ற தன்மை எனவும், சுழலுகின்ற பம்பரத்தின் தன்மை எனவும், சொல்ல வரும் வகை;

அவுணர் பட களம் வேள்வி செயா கொற்றம் மகள் புணரும் சுடர் வேலவ கொட்டுக சப்பாணி—அசுரர் இறக்க (ப் போர் புரிந்து) போர்க்கள வேள்வியைச் செய்து வெற்றித்திருவைக் கூடும் ஒளியைச் செய்யும் வேலை ஏந்தியவனே! சப்பாணி கொட்டுக. (எ-று)

முடிபு:— உடற் குறையானது தனது இற்ற தலையைக் கைத்தலம் வைத்திட்டு ஆடுபறந்தலையில், உதிர ஆற்றைக் கடத்துக எனும் சிற்றலகைக்கு, ஒரு பேரலகையானது திகிரியைப் பரிசிலாக விட, (அது) சுழியில் தெருமரல், "திரிகை திரித்து விடத் திரி பரிசெனவும்" "சுழலும் பம்பரமெனவும்" வரும்படி, களவேள்வி செயா, கொற்ற மகளைப் புணரும் வேலவ! சப்பாணி கொட்டுக.

(கு-ரை.) முடித்தலை முடியணிந்த தலை என்றுமாம். 'கடத்துக் எனும்' என்பது 'கடத்துகெனும்' என்று தொகுக்கப்பட்டது. படு சுழியில் — அகப்படு சுழியில் என்றுமாம்.

(சந்த விருத்தம்)

தனதன தனதன தனதன தத்த தனத்தான

40. வளரிள வனமுலை மலைமக ளுக்கொர் தவப்பேறே
மறிதிரை பொரநிமிர் கருணைகொ ழித்த பெருக்காறே
அளியுமி னமுதெழு வெளியினில் வைத்த சுவைத்தேனே
அறமுது தவமொடு வளரவ ளர்த்திடு நற்றூயே
களிமயில் கடவிவி ணடையமு டுக்கிய புத்தேளே
கலைமறை யெனுமுரல் வரியளி மொய்த்த மலர்க்காவே
தெளிதமிழ் பழகிய மதவலி கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. (௯)

## முருகப்பெருமானின் பல்புகழமைந்த பெயர்கள் இதனுள் கூறப்பெறுகின்றன.

(இ-ள்) வளர் இள வனம் முலை மலைமகளுக்கு ஓர் தவம் பேறே- வளர்கின்ற இளமையாகிய அழகிய நகிலையுடைய மலையரையன் மகளுக்கு ஒப்பற்ற தவத்தின் பயனாயுள்ளவனே;

மறி திரை பொர நிமிர் கருணை கொழித்த பெருக்கு ஆறே — மடங்கும் அலை மோத மேலோங்கும் அருளைக் கொழித்த வெள்ளப் பெருக்கையுடைய ஆற்றின் வடி வாயுள்ளவனே;

அளியும் இன் அமுது எழு வெளியினில் வைத்த சுவை தேனே- முற்றிய இனிமையாகிய அமுதம் தோன்றும், ஞான வெளியின்கண் வைக்கப்பெற்ற சுவையையுடைய தேன் வடிவாயுள்ளவனே;

அறம் முது தவமொடு வளர வளர்த்திடு நற்றூயே—அறமானது பெரிய தவத்துடன் வளரும்படி அவற்றை (த்தோற்றுவித்து) வளர்த் திடுகின்ற நற்றூயே!

களி மயில் கடவி விண் அடைய முடுக்கிய புத்தேளே — மகிழ்ச் சியையுடைய மயிலைச் செலுத்தி விண்ணுலகம் முற்ற முடுக்கின புதிய தேவனே;

கலை மறை எனும் முரல் வரி அளி மொய்த்த மலர் காவே — கலைகள், வேதங்கள், என்று சொல்லப்பெறும் ஒலிக்கும் வரியை யுடைய வண்டுகள் மொய்க்கப்பெற்ற மலரையுடைய சோலை வடிவா யுள்ளவனே;

தெளி தமிழ் பழகிய மதவலி கொட்டு சப்பாணி — தெளிந்த தமிழைப் பழகிய மதவலி என்னும் பெயருடையவனே சப்பாணி கொட்டுக;

தினகரன் புரி வரு தனி முதல் கொட்டுக சப்பாணி—சூரியனது நகரமாகிய வைத்திய நாதபுரியில் வருகின்ற ஒப்பற்ற முதல்வனே! சப்பாணி கொட்டுக

முடிபு :— தவப்பேறே, பெருக்காறே, சுவைத்தேனே, நற்றூயே, புத்தேளே, மலர்க்காவே, மதவலி, தனிமுதல் சப்பாணி கொட்டுக.

(கு–ரை.) 'சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி' (275 திருமுரு) என்னும் அடிக்கு 'சூர பன்மாவின் குலத்தை இல்லையாக்கின மதவலி என்னும் பெயரையுடையாய்' என்று உரை காண்பர் நச்சினூர்க்கினியர். 'மத' என்றுலே வலி என்று பொருளிருத்தலின் மிக்க வலியையுடையாய் என்று பொருள் கூறல் பொருந்தும்.

41. கனியொடு சுவையமு தொழுகிய சொற்பயி றத்தாய்வேள்
கணையொடு பிணையென வுலவு கடைக்கண்
மடப்பாவாய்
நனைமலர் பொதுளிய வெழிலி தழைத்த குழற்கோதாய்
நளிர்புன மிசைவளர் கலபம் விரித்த மயிற்பேடே
எனவொரு குறமக ளடிமுடி வைத்தனை முத்தேவாம்
இறைவரு முறைமுறை பணிய விருக்கு முதற்றேவே
சினவிடை யவரருண் மழவிடை கொட்டுக சப்பாணி
தினகர புரிவரு தனிமுதல் கொட்டுக சப்பாணி. (௪0)

முருகனது எளிமையும் பெருமையும் இப்பாட்டுள் கூறப்பெறுகின்றன.

(இ–ள்.) கனியொடு சுவை அமுது ஒழுகிய சொல் பயில் தத்தாய்—கனியின் தன்மையுடன் சுவையுடைய அமிழ்தத்தின் தன்மையும் வரப்பெற்ற சொற்களையே பழகிய கிளியே!;

வேள் கணையொடு பிணை என உலவு கடைக்கண் மடம் பாவாய்—காமனுடைய அம்பினெடு பெண்மான் என்று சொல்லும்படி உலாவுகின்ற கண்ணின் கடையையுடைய இளமை வாய்ந்த பாவை போன்றவளே!;

நனை மலர் பொதுளிய எழிலி தழைத்த குழல் கோதாய்—தேனையுடைய பூக்கள் நெருங்கின மேகம்போல் செழித்த கூந்தலையுடைய கோதையே!;

நளிர் புனம் மிசை வளர் கலபம் விரித்த மயில் பேடே என ஒரு குறமகள் அடி முடி வைத்தனை—குளிர்ந்த புனத்தின்கண் வளரும் தோகையை விரித்த மயில் போன்ற பெண்ணே! என்று, (நின் எளிவருந்தன்மையால்) ஒரு குறப் பெண்ணின் (வள்ளி நாயகியின்) அடியை (உனது) முடியின்கண் வைத்துக்கொண்டு;

முதேவு ஆம் இறைவரும் முறை முறை பணிய இருக்கும் முதல் தேவே— (உனது பெருமையால்) மூன்று தேவர்கள் ஆகும் அயன் அரி உருத்திரன் என்னும் இறைவர்களும் முறை முறையாய் உன்னை வணங்க வீற்றிருக்கும் முதன்மையாகிய தெய்வமே!

சினம் விடையவர் அருள் மழ விடை கொட்டுக சப்பாணி — கோபத்தையுடைய காளையை ஊர்தியாகப் பெற்ற சிவபெருமான் அருளிய இளைய காளையை ஒப்பவனே! சப்பாணி கொட்டுக (எ-று.)

முடிபு:— *தத்தாய், பாவாய், கோதாய், மயிற்பேடே, என குறமகள் அடி முடி வைத்தனை (வைத்து), இறைவரும் பணிய, இருக்கும் முதற்றேவே! மழவிடை! தனிமுதல்! சப்பாணி கொட்டுக.*

(கு—ரை) வைத்தனை முற்றெச்சம், அது 'இருக்கும்' என்னும் பெயரெச்சத்தொடு முடிந்தது. 'வைத்தனை' என்பதை முற்றாகவும் கொள்ளலாம்.

---

## ரு. முத்தப்பருவம்.

42. குருகு நாறு செந்தளிர்க்கைக்
கொடிநுண் ணுசுப்பிற் கோட்டிமயக்
குலப்பூங் கொம்பு நறவூழ்த்த
கொழுந்தா மரையோ டவிழ்ந்ததுழாய்ச்
சருகு நாறு முடைத்தலையின்
தாம நாறு திரடிண்டோட்
டாதை யாருங் கண்டுகண்டு
தடங்கண் களிப்பக் குரவுவிரிந்
தருகு நாறு திருமேனி
அந்தீங் குதலை மழலைகனிந்
தமுத மூறு பசுந்தேறல்
அசும்பு நாறத் தெய்வமண
முருகு நாறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. (க)

**உமாதேவியும் சிவபெருமானும் கண் களிப்ப முருகனை முத்தம் தருக என்றது.**

(இ—ள்) குருகு நாறு செம் தளிர் கை கொடி நுண் நுசுப்பின் கோடு இமயம் குலம் பூ கொம்பும்—வளையல் விளங்குகின்ற செம்மை

யாகிய தளிர் போன்ற கைகளையும் கொடி போன்ற சிறிய இடையினையும் உடைய, சிகரத்தையுடைய இமய மலையிற் றோன்றிய சிறந்த மலர்க் கொம்பு போன்ற உமாதேவியும்;

நறவு ஊழ்த்த கொழு தாமரையோடு அவிழ்ந்த துழாய் சருகு நாறும் முடை தலையின் தாமம் நாறு திரள் திண் தோள் தாதையாரும்—தேனைச் சிந்திய செழிய தாமரை மலருடன் துளபச் சருகின் மணம் நாறும் (பிரமன் திருமாலது) முடை நாற்றத்தையுடைய தலைமாலை விளங்கும் திரண்ட திண்ணிய தோள்களையுடைய தந்தையாகிய சிவபெருமானும்;

கண்டு கண்டு தட கண் களிப்ப—பார்த்துப் பார்த்து அகன்ற விழி மகிழ்ச்சியடைய;

குரவு விரிந்து அருகு நாறு திருமேனி அம் தீம் குதலை மழலை கனிந்து அமுதம் ஊறு பசு தேறல் அசும்பு நாற—(தான் அணிந்த) குராமலர் மலர்ந்து பக்கத்திடமெல்லாம் மணம் வீசுகின்ற அழகிய (தனது) உடம்பிலே அழகிய இனிய குழறும் மழலைச் சொல் கனிந்து வரச்செய்து (தோன்றும் வாய் நீராகிய) அமிழ்தச் சுவை சுரக்கும் பசிய தேன் துளி விளங்க;

தெய்வம் மணம் முருகு நாறும் செம் கனிவாய் முத்தம் தருக — தெய்வ மணமாகிய மணம் வீசும், சிவந்த கனிபோன்ற வாயினுல் முத்தம் கொடுக்க;

முத்தமே மும்மை தமிழ் தேர் கந்தபுரி முருகா முத்தம் தருக— முத்துப் போன்றவனே மூன்று தமிழை ஆராய்தற்கிடமான கந்த புரியில் வாழும் முருகனே முத்தம் தருக. (எ—று)

முடிபு :— கையும் நுசுப்பும் உடைய பூங்கொம்பும், தாமரையோடு துழாய்ச் சருகு நாறும் தலையின் தாமம் நாறும் தோள் தந்தையாரும் கண்டு கண்டு கண் களிப்ப, திருமேனியிலே தேறல் அசும்பு நாற, முருகு நாறும் வாய் முத்தம் தருக முத்தமே! முருகா! முத்தம் தருக.

43. நறவு விரிந்த விரைத்தோட்டு
நளினத் தொட்டிற் றடமுலைப்பால்
நல்கி வளர்த்த கைத்தாயர்
நகைவாண் முகத்து மார்பகத்தும்

குறுமெ னடைய சிறுபசுங்காற்
குருதி ததும்ப வுதைந்துசில
குறும்பு செயத்தா ணேமெனமென்
கோல்கொண் டோச்சப் பெரும்புவனம்

நிறுவு மொருநின் பெருந்தன்மை
நினைந்தாய் போலக் கனிந்தமுது
நெக்குப் பசுந்தே னசும்பூற
நெடுவெண் ணிலவு விரிந்தகுறு
முறுவ லரும்புஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. (உ)

**இப்பாட்டுள் முருகன் சில குறும்பு செய்ததும் அதனைக்கண்டு கைத்தாயர் அச்சுறுத்தியதும் அதனைக்கண்டு அவன் நகைத்ததும் கூறப்படுகின்றன.**

(இ-ள்) நறவு விரிந்த விரை தோட்டு நளினம் தொட்டில் தட முலை பால் நல்கி வளர்த்த கைத்தாயர் நகைவாள் முகத்தும் மார்பு அகத்தும் குறு மெல் நடைய சிறு பசு கால் குருதி ததும்ப உதைந்து சில குறும்பு செய—தேன் விரிந்த மணமுள்ள இதழ் களையுடைய தாமரை மலராகிய தொட்டிலின்கண் பெரிய நகிற் பாலைக்கொடுத்து வளர்த்த செவிலித்தாயரின் சிரிப்பையுடைய ஒளி தங்கிய முகத்திலும் மார்பின் நடுவிடத்திலும் குறிய மென்மையான நடையையுடைய சிறிய இளங்காலிலே இரத்தம் பரந்து தோன்ற உதைத்துச் சில குறும்பாகிய விளையாட்டினைச் செய்ய;

தாள் நோம் என மென் கோல் கொண்டு ஓச்ச—(அக்குறும்பால்) கால் வருந்தும் என்று கருதி மென்மையான கோலைக் கையிற் கொண்டு (அடிப்பதுபோல்) ஓங்க;

பெரு புவனம் நிறுவும் ஒரு நின் பெரு தன்மை நினைந்தாய் போல—(அதனைக்கண்டு அஞ்சாமல்) பெரிய உலகங்களை யெல்லாம் நிலைபெறச்செய்யும் ஒப்பற்ற உனது பேரியல்பை எண்ணினய் போல;

கனிந்து அமுது நெக்கு பசு தேன் அசும்பு ஊற நெடு வெள் நிலவு விரிந்த குறு முறுவல் அரும்பும் செம் கனிவாய் முத்தம் தருக—கனிவுடைத்தாய் அமிழ்தச் சுவைதோன்ற நெகிழ்ந்து (எச்சி லாகிய) பசுந்தேன் துளி சுரக்க பெரிய வெண்ணிலவொளி விரிந்த புன்சிரிப்பு தோன்றப்பெறும் சிவந்த கனிவாயால் முத்தம் தருக. (எ-று.)

முடிபு:— நளினத் தொட்டிலில் பால் நல்கி வளர்த்த கைத் தாயருடைய முகத்தும் மார்பகத்தும் கால் குருதி ததும்ப உதைந்து (நீ) குறும்புசெய (அவர்) கால் நோம் என கோல் கொண்டு ஓச்ச (நீ அதற்கு அஞ்சாமல்) நின் பெருந்தன்மை

நினைந்தாய் போல, தேன் அசும்பு ஊற நிலவு விரிந்த முறுவலரும்பும் வாய் முத்தம் தருக. முத்தமே! முருகா! முத்தம் தருக.

44. பொழியுங் கருணைப் பெருவெள்ளப்
புணரி பெருகி யலையெறியப்
பொங்கி யெழுந்த பெருங்காதற்
புளகம் போர்ப்பப் போதுசெயும்

விழியு மனமுங் குளிர் தூங்க
விரிநீர்ச் சடிலத் தொருவனிரு
வீணைக் குதவுந் திருச்செவிகள்
விருந்தாட் டயர விரைகொழித்து

வழியுங் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர வமுது குழைத்தூற்றும்
மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தையொன்று

மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. (ரு)

முருகப்பெருமான் சிவபெருமானுக்கு உவகை தோன்ற பிரணவத்தை அருளிய செய்தி இதனுள் கூறப்படுகின்றது.

(இ-ள்) பொழியும் கருணை பெரு வெள்ளம் புணரி பெருகி அலை எறிய—(சிவபெருமானுக்கு) சொரியும் அருளாகிய பெரு வெள்ளக்கடல் பெருகி அலை வீச;

பொங்கி எழுந்த பெரு காதல் புளகம் போர்ப்ப — (மனத்தே) மிகுந்தெழுந்த பெரிய அன்பினால் (உடம்பில்) மயிர்ச்சிலிர்ப்பு எழுந்து மூட;

போது செயும் விழியும் மனமும் குளிர் தூங்க—பகற் பொழுதையும் இரவுப் பொழுதையும் செய்யும் ஞாயிறு திங்களாகிய கண்களும் நெஞ்சமும் குளிர்ச்சியடைய;

விரி நீர் சடிலத்து ஒருவன் இரு வீணைக்கு உதவும் இரு செவிகள் விருந்து ஆட்டு அயர—பெருகும் நீராகிய கங்கை தங்கிய சடையையுடைய ஒப்பற்ற சிவபெருமானுடைய, (கம்பளர் அசுவதரரது) இரண்டாகிய வீணை இசைக்கு உதவுகின்ற அழகிய காதுகள் புதுமையில் திளைத்தலைச் செய்ய;

விரை கொழித்து வழியும் கொழு தேன் பிழிந்திட்டு மதுரம் அமுது குழைத்து ஊற்றும் மழலை ததும்ப—மணம் கொழித்து வழிகின்ற செழுந்தேனைக் (கோது நீங்கப்) பிழிந்தெடுத்து (அதனுடன்) இனிய அமிழ்தத்தைக் கலந்து ஊற்றினாற்போன்ற இளஞ்சொல் நிரம்ப ;

பழ மறையை வடித்து தெளித்த வார்த்தை ஒன்று மொழியும் பவளம் செம் கனி வாய் முத்தம் தருக—தொன்மையாகிய வேதத்தை வடித்தெடுத்துத் தெளிவுறுத்திய ஒரு வார்த்தையாகிய பிரணவத்தை மொழிந்த பவளம்போன்ற செம்மையாகிய கனிந்த வாயால் முத்தம் தருக. (எ-று.)

முடிபு :— கருணையாகிய புணரி பெருகி அலை எறிய, காதல் புளகம் போர்ப்ப, விழியும் மனமும் குளிர் தூங்க, சடிலத்து ஒருவன் திருச்செவிகள் விருந்தாட்டு அயர, தேன் பிழிந்திட்டு அமுது குழைத்து ஊற்றும் மழலை ததும்ப, மறையை வடித்துத் தெளித்த வார்த்தை யொன்று மொழியும் செங்கனி வாய் முத்தம் தருக. முத்தமே! முருகா! முத்தம் தருகவே.

45. கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலம்
கனியக் கனிய வமுதூறும்
கடவுண் மறையு முதற்சங்கத்

தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்டே னறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற் றிருந்தபசுந்
தமிழு நாறத் தடங்கரைகொல்

அலைப்பாய் புனற்றெண் கடல்வைப்பும்
அகிலாண் டமும்பன் முறையீன்றும்
அழகு முதிர முதிராவென்
அம்மை யமுது கூற்கொண்ட

முலைப்பா லுறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முத்தந் தருகவே. (ச)

## மறையும் தமிழும் மணக்க முலைப்பாலும் மணக்கும் முருகனது வாய்ச்சிறப்பு கூறப்பெறுகிறது.

(இ–ள்) கலை பால் நிறைந்த முதுக்கு உறைவின் கல்வி செல்வர் கேள்வி நலம் கனிய கனிய அமுது ஊறும் கடவுள் மறையும் — கலையின் பகுதி நிறைந்த, பேரறிவுக்கு இருப்பிடமான, கல்வியாகிய செல்வமுடையவருக்குக் கேட்டலாகிய நன்மை முதிர முதிர அமிழ் தத்தின் சுவை சுரத்தற்குரிய தேவர் தம் வேதமும்:

முதல் சங்கத்து தலை பாவலர் தீம் சுவை கனியும் தண் தேன் நறையும் வடித்து எடுத்த சாரம் கனிந்து ஊற்று இருந்த பசு தமிழும் நாற — தலைச் சங்கத்திலிருந்த சிறந்த பாக்களில்வல்ல புல வருடைய, இனிய சுவையுள்ள பழமும், குளிர்ந்த நறைத்தேனும், (ஆகிய இவற்றைக் கோது நீங்க) வடித்து எடுத்துக்கொண்ட பயன் பழுத்துச் சுரந்திருந்த செழிய தமிழ் நூல்களும் மணக்க;

தட கரை கொல் அலை பாய் புனல் தெண் கடல் வைப்பும் அகில அண்டமும் பல் முறை ஈன்றும் அழகு முதிர முதிரா என் அம்மை அமுது சூல் கொண்ட முலை — பெரிய கரையை அழிக்கும் திரை பாயப்பெற்ற நீரையுடைய தெளிந்த கடலால் சூழப்பெற்ற நில உலகும் (ஏனைய) அகில உலகங்களையும் பலமுறை பெற்றும் (அதனால்) அழகு கனிய (தான்) முதுமையடையாத என் தாயான (உமாதேவியின்) பாலைக்கருக் கொண்ட நகில்;

(முலை) பால் நாறும் செம் கனிவாய் முத்தம் தருக — அத்தகைய நகிலின் பாலும் மணக்கும் செங்கனி போன்ற வாயால் முத்தம் தருக. (எ–று)

முடிபு :— கல்விச் செல்வர் கேள்வி நலம் கனிய கனிய அமுது ஊறும் மறையும் தலைப் பாவலருடைய தமிழும் நாற, வைப்பும் அண்டமும் ஈன்றும் அழகு முதிரத் (தான்) முதிராத அம்மை முலைப்பால் நாறும் வாயினால் முத்தம் தருக.

46. புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையு மின்னகையும்
புளகம் பொதிந்த விளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கட்

கயலுங் கலப மயிலியலும்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணுன் முகந்துண் டின்னமுதின்

இயலுஞ் சுவைநல் லவியொடுநீத்
தேக்கற் றிருந்தத் தாக்கணங்கின்
இழுமென் குதலை கனிந்தூறும்
இதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்

முயலுங் குமுதக் கனிவாயால்
முத்தந் தருக முத்தமே
மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா முந்தந் தருகவே. (ரு)

முருகப்பெருமான் வள்ளி நாயகியின்
இன்பம் விரும்பிய செய்தி இதனுள் கூறப்பெறுகிறது.

(இ-ள்) புயல் உண்டு இருண்ட கொந்தளமும் பொன்னம் குழையும் இன் நகையும் புளகம் பொதிந்த இளமுலையும் புருவம் சிலையும் போர் தட கண் கயலும் கலபம் மயில் இயலும் கன்னி புனத்து ஓர் பெண் அமுதின் காமர் நலனும் பன்னிரண்டு கண்ணால் முகந்து உண்டு—முகிலைத் தனக்குள் அடக்கி இருண்ட கூந்தலையும் பொன்னாற் செய்த அழகிய காதணியையும் இனிய சிரிப்பையும் புளகம் போர்த்த இளைய நகிலையும் புருவமாகிய வில்லையும் போர்செய்யும் பெரிய கண்ணாகிய கயல் மீனையும் தோகையையுடைய மயிற் சாயலையும் அழிவற்ற தினைப்புனத்திலுள்ள (வள்ளி நாயகியாகிய) ஒப்பற்ற பெண் அமுதத்தின் விரும்பும் அழகையும் தனது பன்னிரண்டு விழிகளாலும் அள்ளியுண்டு;

இன் அமுதின் இயலும் சுவை நல் அவியொடு நீத்து ஏக்கற்று இருந்து—இனிய அமிழ்தத்தில் பொருந்திய சுவையை (தேவருணவாகிய) அவிசொடு நீக்கி ஆசையால் தாழ்ந்திருந்து;

அ தாக்கு அணங்கின் இழும் என் குதலை கனிந்து ஊறும் இதழ் தேன் சுவை கண்டு—அந்தத் தாக்கணங்கு போன்றவளின் இழும் என்னும் மெல்லோசையையுடைய இளஞ்சொல் கனிந்து சுரக்கும் உதட்டிலே உள்ள (வாய் நீராகிய) தேனின் சுவையைக் கருதி;

ஏமாப்பான் முயலும் குமுதம் கனிவாயால் முத்தம் தருக—இன்பமடைய முயலுகின்ற குமுதமலர் போன்ற உனது கனிந்த வாயினால் முத்தம் தருக. (எ-று.)

முடிபு: -கொந்தளமும், குழையும், நகையும், முலையும், புருவச் சிலையும், கண்கயலும், மயில்இயலும், நலனும் (ஆகிய இவற்றை)ப் பன்னிரண்டு கண்ணால் முகந்து உண்டு, அமுதின் சுவையை அவியொடு நீத்து ஏக்கற்றிருந்து, அத்தாக்கணங்கின் குதலை கனிந்து ஊறும் இதழிலுள்ள தேன் சுவையைக் கண்டு, ஏமாப்பான் முயலும் கனிவாய்; அக்கனிவாயால் முத்தம் தருக.

(கு–ரை.) பன்னிரண்டு விழிகளுக்கு ஏற்ப கூந்தல் ஒன்று, குழைகள் இரண்டு, நகை ஒன்று, நகில் இரண்டு, புருவம் இரண்டு, கண்கள் இரண்டு, இயல் ஒன்று, நலன் ஒன்று ஆகப் பன்னிரண்டு பொருள்கள் கூறப்பட்டன.

### வேறு

47. கோடுபடு கொங்கைக் குவட்டுக் கிளைத்திட்ட
கொடியிடைக் கடைசியர்குழாம்
குரவையிடு துழனியிற் கொண்டறிரை யத்தாவு
குழவுப் பகட்டுவாளை

சேடுபடு புத்தே ணிலத்துப் புனிற்றிளஞ்
சேதா வயிற்றுமுட்டச்
சேங்கன் றெனத்தடவு மடிமடை திறந்தூற்று
தீம்பால் சினைக்கற்பகத்

தேடுபடு தடமலர்த் தேனருவி யொடுசொரிந்
தேரியொடு கானிரம்ப
இழுதுபடு கழனியுந் தெய்வமண நாறவேன்
றின்சுவை முதிர்ந்துவிளையும்

காடுபடு செந்நெல்பைங் கன்னனிகர் புள்ளூர
கனிவாயின் முத்த மருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (கூ)

**புள்ளூரின் கழனியெல்லாம் தெய்வமணம் நாற இன்சுவை முதிர்ந்து விளைகின்றன என்று அவற்றைப் புனைந்துரைத்தது.**

(இ-ள்) கோடு படு கொங்கை குவட்டுக்கு இளைத்திட்ட கொடி இடை கடைசியர் குழாம் குரவை இடு துழனியில்—யானைக் கொம்பை ஒக்கும் நகிலாகிய மலையைச் சுமந்திருத்தலுக்கு மெலிந்த கொடி போன்ற இடையையுடைய மருதநிலப் பெண்களின் கூட்டமானது குரவைப் பாட்டைப் பாடுகின்ற பேரோசையினால்;

கொண்டல் திரைய தாவு குழவு பகட்டு வாளை சேடு படு புத்தேள் நிலத்து புனிறு இள சேதா வயிற்று முட்ட — முகில்களெல்லாம் (ஓரிடத்தில் சென்று) திரைந்தாற்போல் குவியும்படி தாவுகின்ற இளைய பெரிய வாளைமீனானது பெருமை தோன்றுகிற தெய்வ வுலகத்திலே உள்ள ஈன்ற அணிமையையுடைய இளைய சிவந்த பசுவின் வயிற்றிலே (சென்று) மோத;

சே கன்று என தடவு மடி மடை திறந்து ஊற்று தீ பால் —(முட்டும் அவ்வாளையை)த் தனது ஆண் கன்று என்று கருதி பெரிய மடி மடை திறந்து சுரக்கின்ற இனிய பாலானது;

சினை கற்பகத்து ஏடு படு தட மலர் தேன் அருவியொடு சொரிந்து—கிளைகளையுடைய கற்பக மரத்திலுள்ள இதழ்களோடு கூடிய பெரிய மலரிலிருந்து பாயும் தேன் அருவியொடு கூடி மழைபோற் சொரிந்து நிற்றலால்;

ஏரியொடு கால் நிரம்ப—(புள்ளூரிலுள்ள) ஏரிகளோடு வாய்க்கால்களெல்லாம் (அப்பாலும் தேனுமாகிய) நீரால் நிரம்பிட;

இழுது படு கழனியும் தெய்வம் மணம் நாற ஏன்று இன் சுவை முதிர்ந்து விளையும் காடு படு செம் நெல் பை கன்னல் நிகர் புள்ளூர்—(அந்நீர் பாய்வதால்) சேறுபட்ட வயல்களெல்லாம் தெய்வ மணம் கமழ, பொருந்தி இனிய சுவை மிகுந்து விளைகின்ற காட்டைப்போல் தோன்றுகின்ற செந்நெல்களெல்லாம் பசிய கரும்பினை ஒவ்வும் புள்ளூர்;

புள்ளூர கனி வாயின் முத்தம் அருள் கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒரு மகன் கனி வாயின் முத்தம் அருள்—அங்ஙனம் சிறந்த புள்ளூரையுடையவனே! உனது கனி போன்ற வாயினல் முத்தம் அருள்வாயாக கங்கைக்கும் திருமால் தங்கையாகிய உமா தேவிக்கும் ஒப்பற்ற புதல்வனுயுள்ளவனே! (உனது) கனி போன்ற வாயால் முத்தம் அருள்க. (எ—று)

முடிபு:— கடைசியர் குழாம் குரவையிடு கழனியினல் திரையத் தாவும் வாளை புத்தேள் நிலத்துச் சேதா வயிற்று முட்ட, சேங்கன்று என மடை திறந்து ஊற்றும் பால் கற்பக மலர்த் தேனருவியொடு சொரிந்து ஏரியொடு கால் நிரம்ப, (அதனல்) கழனியும் தெய்வமணம் நாற, ஏன்று முதிர்ந்து விளையும் செந்நெல் கன்னல் நிகர் புள்ளூர! ஒருமகன்! முத்தம் அருள்.

48. துளிதூங்கு மழைமுகிற் படலங் கிழிக்குந்
துகிற்கொடிகள் சோலைசெய்யத்
தோரண முகப்பிற் றவழ்ந்தேறு கலைமதித்
தோற்றத்தை யறுகான்மடுத்

தளிதூங்கு தேனிரு லிதுதம்மின் வம்மினென்
றழிநரு வார்ந்துநிற்கும்
அந்நலார் கைகூப்ப வாடவர் பிழிந்தூற்று
மளவிலப ராதமிதென

ஒளிதூங்கு முகமதிக் கொப்பென்கி லேன்விடுதிர்
உயிரொன்று மெனவிடலுமவ்
வுடுபதிக் கடவுணற வுண்டமற் றவரினும்
உய்ந்தோ மொழிந்தோமெனக்

களிதூங்கு மாடமலி கந்தபுரி வருமுருக
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (எ)

## கள்ளுண்டு களிப்படையும் மாடமலி கந்தபுரியின் சிறப்பு கூறப்பெறுகின்றது.

(இ-ள்) துளிதூங்கு மழை முகில் படலம் கிழிக்கும் துகில் கொடிகள் சோலை செய்ய—துளி பொருந்திய மழையைப் பெய்யும் மேகத்தின் தொகுதியைக் கிழிக்கின்ற ஆடையோடு கூடிய கொடிகள் சோலையைப்போல் விளங்குதலைச் செய்ய;

தோரணம் முகப்பில் தவழ்ந்து ஏறு கலை மதி தோற்றத்தை அழி நறா ஆர்ந்து நிற்கும். அம் நல்லார் அறு கால் மடுத்து அளி தூங்கு தேன் இறால் இது வம்மின் தம்மின் என்று கை கூப்ப — தோரணம் கட்டின (மாடத்தின்) எதிரில் ஊர்ந்து மேலேறுகின்ற கலைத் திங்களின் தோற்றத்தை அறிவை அழிக்கும் கள்ளினை உண்டு நிற்கின்ற அழகிய நலத்தையுடைய பெண்கள் (கண்டு) ஆறு கால்களையும் பதித்து வண்டுகள் உறங்குகிற தேன் கூடு இது, வாருங்கள்! அதனைத் தாருங்கள்! என்று (தம் தலைவரை நோக்கிக்) கூறி கை குவித்து வணங்க;

ஆடவர் பிழிந்து ஊற்றும் அளவில் — (அதைக்கேட்ட கள் மயக்கத்தையுடைய) ஆடவர் (தாமும் திங்களைத் தேன் கூடென்றே கருதி அதனை எடுத்துப்) பிழிந்து ஊற்றுகின்ற பொழுதில்;

அபராதம் இது என ஒளி தூங்கு முகம் மதிக்கு ஒப்பு என்கிலேன் விடுதிர் உயிர் ஒன்றும் என விடலும்—(அந்நலார் முகத்திற்கு ஒப்பென்று திங்களாகிய யான் கருதியதற்கு) இது அபராதம் போலும் என்று கருதி (இனி) ஒளி பொருந்திய முகத்திங்களுக்கு ஒப்பு என்று சொல்லேன் உயிர் ஒன்றையும் விடுவீராக என்று வேண்ட அவர்கள் விட்டவுடன்;

அ உடுபதி கடவுள் நறவு உண்ட அவரினும் உய்ந்தோம் ஒழிந்தோம் என களி தூங்கு மாடம்—அந்த நட்சத்திரங்களின் நாயகனான திங்கட் கடவுள் கள்ளுண்ட அவர்களைக்காட்டிலும் பிழைத்தோம் (அவரிடமிருந்து) நீங்கினோம் என்று களிப்படைதற்கு இடமான மாடம்; (மற்று அசை)

(மாடம்) மலி கந்தபுரி வரும் முருக கனி வாயில் முத்தம் அருள்— அத்தகைய மாடங்கள் மலிந்த கந்தபுரியிலே வரும் முருகனே! கனி போன்ற வாயினால் முத்தம் அருள்க. (எ-று)

முடிபு:— கொடிகள் சோலை செய்ய தோரண முகப்பில் தவழ்ந்து ஏறு மதி தோற்றத்தை நறா ஆர்ந்து நிற்கும் அந்நலார் (கண்டு) இது தேன் இறால் வம்மின் தம்மின் என்று கைகூப்ப, ஆடவர் பிழிந்து ஊற்றும் அளவில், இது அபாரதம் என (இனி) முகமதிக்கு ஒப்பு என்கிலேன் உயிர் ஒன்றும் விடுதிர் என, (அவர்) விடலும், அவ்வுடுபதிக் கடவுள் ஒழிந்தோம் உய்ந்தோம் என அவரினும் களிதூங்கும் மாடம் மலி கந்தபுரி வரும் முருக! முத்தம் அருள்.

(கு-ரை.) துகிற் கொடிகளைச் சார்ந்த கலைமதித் தோற்றம் சோலையைச் சார்ந்த இறால் தோற்றம் போன்றிருந்தது. களியரிடத்திலிருந்து தப்பிய மதியின் களிப்பு கள்ளுண்டு களித்தவரின் களிப்பைக் காட்டிலும் மிகுதியாயிருந்தது.

49. பூமரு வுயிர்க்குங் கருங்கொந் தளத்துவிரி
பூந்துகட் படலமுமணம்
பொங்கிய நறும்புகைப் படலமுங் காலமழை
பொழிமுகிற் படலஞ்செயத்

தாமரை முகச்சோதி யெழவெழுஞ் சிறுமுறுவல்
தண்ணிலவு செயவெயில்செயத்
தழன்மணிக் கலனகனி தம்பமொடு வெம்முலை
தடங்கடலு மலையுஞ்செயத்

தேமரு குழற்கோதை மயிலனீர் கோசிகச்
செம்மலென வேறுபுவனம்
செயவும்வல் லீரென மணந்திடை தணந்தவர்சொல்
செஞ்சொற் பசுங்கிளிசொலக்

காமரு மனங்குழையு மாதர்பயில் வேளூர
கனிவாயின் முத்தமருளே
கங்கைக்கு நெடியவன் றங்கைக்கு மொருமகன்
கனிவாயின் முத்தமருளே. (அ)

பொய் பாராட்டி மணந்து பின் பிரிந்த தலைவர் கூறிய சொற்களைக் கிளி சொல்ல அதனால் மனங்குழையும் மாதரையுடைய வேளூர் என்று அவ்வூரின் சிறப்புரைத்தது.

(இ-ள்) பூ மரு உயிர்க்கும் கரு கொந்தளத்து விரி பூ துகள் படலமும் மணம் பொங்கிய நறு புகை படலமும் காலம் மழை பொழி

முகில் படலம் செய — மலர் மணத்தைத் தோற்றுவிக்கும் கரிய கூந்தலில் விரிந்த மலரினின்று சிந்தும் மகரந்தப் பொடியின் கூட்டமும் (அக்கூந்தலை ஆற்றுவதற்குச் செய்த) மணம் மிகுந்த நறிய புகைக் கூட்டமும் பருவ மழையைச் சொரியும் முகிற் கூட்டத்தைப்போல் தோன்ற;

தாமரை முகம் சோதி எழ எழும் சிறு முறுவல் தண் நிலவு செய—தாமரை மலர் போன்ற முகத்திலே ஒளி எழ எழுகின்ற புன்சிரிப்பு குளிர்ந்த நிலவைப்போல் தோன்ற;

தழல் மணி கலன் வெயில் செய — நெருப்புப் போன்ற செம் மாணிக்க அணிகள் (ஞாயிற்றின்) வெயில் போல் தோன்ற;

அகல் நிதம்பமொடு வெம் முலை தட கடலும் மலையும் செய— அகன்ற இடையின் கீழ்ப் பக்கத்தொடு விரும்பப்பெறும் நகில் பெரிய கடலும் மலையும்போல் தோன்ற;

தே மரு குழல் கோதை மயில் அன்னீர்—(மலரிலுள்ள) தேன் பொருந்திய கூந்தலையுடைய மயிலை ஒத்த கோதையரே!

கோசிகன் செம்மல் என வேறு புவனம் செயவும் வல்லீர் என மணந்து இடை தணந்தவர் சொல் செம் சொல் பசு கிளி சொல— விசுவாமித்திர முனிவர் (திரிசங்கின் பொருட்டு வேறு உலகம் படைத்ததுபோல) வேறு உலகத்தைத் தோற்றுவிக்கவும் வல்லமை படைத்துள்ளீர் என்று பொய் பாராட்டிக் கூடி (பின்) இடையே பிரிந்து சென்ற தலைவர் கூறிய நல்ல சொற்களைக் (கற்றுக்கொண்டு) பச்சைக் கிளி சொல்ல;

காமரு மனம் குழையும் மாதர் பயில் வேளூர—அதனால் அழகிய மனம் இளகப்பெறும் பெண்கள் பயில்கின்ற வேளூரில் உள்ளவனே. (எ—று)

முடிபு:— கொந்தளத்துப் பூந்துகட் படலமும் புகைப் படலமும் முகிற் படலம் செய, சிறு முறுவல் நிலவு செய, மணிக் கலன் வெயில் செய், நிதம்ப மொடு முலை கடலும் மலையும் செய, மயிலனீர் கோசிகச் செம்மலென் வேறு புவனம் செயவும் வல்லீர் எனப் (பொய் பாராட்டி) மணந்து இடையில் தணந்தவர் சொல் செஞ்சொல்லைப்பசுங் கிளியானது சொல்ல, (அதனைக் கேட்டு) மனம் குழையும் மாதர் பயில் வேளூர! ஒருமகன்! முத்த மருள்.

(கு—ரை) 'நிதம்பம்' என்பது பெண்கள் இடையின் கீழ்ப் பக்கத்திற்குப் பெயராகும். இதனை 'பச்சாந்நிதம்ப: ஸ்த்ரீ கட்யா:, என்னும் **அமரகோசத்தால்** அறிக. இதனைத் தமிழ் நூலோர் 'அல்குல்' என்பர்.

(சந்த விருத்தம்)

தன்ன தனன தனன தனன
தனன தனன தத்தன

50. மதியு நதியு மரவும் விரவு
மவுலி யொருவன் முக்கணும்
வனச முகமு மகமு மலர
மழலை யொழுகு சொற்சொலும்
புதல்வ விமய முதல்வி யருள்செய்
புனித வமரர் கொற்றவன்
புதல்வி தழுவு கொழுந குறவர்
சிறுமி குடிகொள் பொற்புய
கதிரு மதியு மொளிர வொளிரும்
ஒளிய வளிய கற்பகக்
கனியி னினிய வுருவ பருவ
மழையி னுதவு கைத்தல
முதிரு மறிவி லறிஞ ருணரு
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. (கூ)

முருகனைப் பல வகையாகக் கூறிப் புகழ்ந்தது.

(இ-ள்) மதியும் நதியும் அரவும் விரவும் மவுலி ஒருவன் முக கண்ணும் வனசம் முகமும் அகமும் மலர மழலை ஒழுகு சொல் சொலும் புதல்வ—பிறையும் கங்கையாறும் பாம்பும் கலந்திருக்கப் பெற்ற முடியை உடைய ஒப்பற்றவனாகிய சிவபெருமானது மூன்று விழிகளும் தாமரை மலர் போன்ற முகமும் மனமும் மலரும்படி இளமை ஒழுகும் மொழியை மொழியும் மகனே ;

இமயம் முதல்வி அருள் செய் புனித—இமய மலையிற் றோன்றிய முதன்மையான உமாதேவி ஈன்றருளின தூய்மையானவனே ;

அமரர் கொற்றவன் புதல்வி தழுவு கொழுந—தேவர் அரசனாகிய இந்திரனது மகளாகிய தெய்வயானையால் தழுவப்பெறும் கணவனே ;

குறவர் சிறுமி குடிகொள் பொன் புய—குறவர் சிறுமியாகிய வள்ளி நாயகி குடிகொண்டிருக்கும் பொன்னிறமான தோள்களை யுடையவனே ;

கதிரும் மதியும் ஒளிர ஒளிரும் ஒளிய—ஞாயிறும் திங்களும் ஒளி பெறுவதற்குக் காரணமாக விளங்கும் ஒளியை உடையவனே ;

கற்பகம் அளிய கனியின் இனிய உருவ—கற்பக மரத்தின் கனிந்த பழத்தைக் காட்டிலும் இனிய வடிவத்தை யுடையவனே;

பருவ மழையின் உதவு கைத்தல—காலத்தில் பெய்யும் மழை போலக் கொடுக்கின்ற கையாகிய இடத்தை உடையவனே;

முதிரும் அறிவில் அறிஞர் உணரும் முதல்வ முத்தமே தருக—பயின்ற அறிவினாலே அறிவுடையோர் அறிகின்ற முதன்மையானவனே முத்தம் தருக.

முனிவர் பரவு பருதி புரியின் முருக முத்தமே தருக—முனிவர் வழிபடும் பருதிபுரத்தில் வாழும் முருகனே முத்தம் தருக. (எ-று.)

முடிபு:— புதல்வ, புனித, கொழுந, பொற்புய, ஒளிய, உருவ, கைத்தல, முதல்வ, முருக முத்தமே தருக.

51. வடிவி னழகு மெழுத வரிய
புயமு நறிய செச்சையும்
மருமம் விரவு குரவு மரையின்
மணியு மணிகொள் கச்சையும்

கடவு மயிலு மயிலு மொழுகு
கருணை வதன பற்பமும்
கமல விழியும் விழியு மனமும்
எழுதி யெழுதி நித்தலும்

அடிக ளெனவு னடிகள் பணியும்
அடிய ரலது மற்றும்வே
றமரர் குழுவு மகில மறையும்
அரியு மயனு முற்றுநின்

முடியு மடியு முணர வரிய
முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பருதி புரியின்
முருக தருக முத்தமே. (க௦)

முருகப்பெருமான் அடியார்க்கல்லது பிறர்க்கு அறிவரியன் என்றது.

(இ—ள்) வடிவின் அழகும் எழுத அரிய புயமும் நறிய செச்சையும் மருமம் விரவு குரவும் அரையின் மணியும் அணிகொள் கச்சையும் கடவும் மயிலும் அயிலும் ஒழுகு கருணை வதனம் பற்பமும் கமலம் விழியும்—(உனது) உடம்பின் அழகையும் (ஓவியரால்) எழுதுதற்கரிய தோள்களையும் (அவற்றின்மேல் அணிந்துள்ள) மணமுள்ள வெட்சி மலரையும், மார்பிற் கலந்துள்ள குராமலர் மாலையையும், இடையிற் கட்டப்பெற்ற மணியையும், அழகைக்கொண்டுள்ள கச்சினையும்,

ஊர்தியாகச் செலுத்தப்பெறும் மயிலையும், படையாகச் செலுத்தப் பெறும் வேலையும், ஒழுகும் அருளையுடைய முகத்தாமரையையும், தாமரை மலர் போன்ற கண்களையும்;

விழியும் மனமும் எழுதி எழுதி நித்தலும் அடிகள் என உன் அடிகள் பணியும் அடியர் அலது—(தங்கள்) கண்களிலும் மனத்திலும் நன்கு எழுதி நாடோறும் எல்லாவற்றிற்கும் முதலானவன் என்று உனது தாள்களை வணங்கும் தொண்டர்க்கல்லது;

மற்றும் வேறு அமரர் குழுவும் அகிலம் மறையும் அரியும் அயனும் முற்றும் நின் முடியும் அடியும் உணர அரிய முதல்வ முத்தம் தருக—மற்றைய வேறாகிய தேவருடைய கூட்டமும் அழிவற்ற வேதமும் திருமாலும் நான்முகனும் ஆகிய இவர் முழுதும் உனது திருமுடியையும் திருவடியையும் அறிதற்கரிய தலைவனே! முத்தம் தருக (எ—று)

முடிபு :— வடிவின் அழகும், புயமும், செச்சையும், குரவும், மணியும், கச்சையும், மயிலும், அயிலும் வதன பற்பமும், விழியும் (ஆகிய இவற்றை) விழியும் மனமும் எழுதி எழுதி, அடிகள் என, பணியும் அடியர் அலது, அமரர் குழுவும், மறையும், அரியும், அயனும் உணர அரிய முதல்வ! முருக! முத்தமே தருக.

---

## ௬. வருகைப் பருவம்.

52. செம்பொற் கருங்கழ லரிக்குரற் கிண்கிணி
சிலம்பொடு கலின்கலினெனத்
திருவரையி லரைமணி கிணின்கிணி னெனப்பொலந்
திண்டோளின் வளைகலிப்ப
அம்பொற் பகட்டுமார் பிற்சன்ன வீரமும்
ஆரமுந் திருவில்வீச
அணிமகர குண்டலம் பருதிமண் டலமென்ன
அலர்கதிர்க் கற்றைசுற்றப்
பைம்பொற் சுடர்ச்சுட்டி கட்டுசூ ழியமுடன்
பட்டமொளி விட்டெறிப்பப்
பங்கய மலர்ந்ததிரு முகமண் டலந்தொறும்
பனிமுறுவ னிலவரும்பக்
கும்பப் படாமுலை மலைப்புதல்வி செல்வக்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (௧)

## முருகனுகிய குழந்தையை இன்ன கோலத்தோடு வருக என்றது.

(இ-ள்) செம் பொன் கரு கழல் அரி குரல் கிண்கிணி சிலம்பொடு கலின் கலின் என—சிவந்த பொன்னுற்செய்த வலிய வீரக்கழலும் தவளைக் குரல்போல் ஒலிக்கும் கிண்கிணியும் (ஆகிய இவை) சிலம்புடன் சேர்ந்து கலின் கலின் என்று ஒலிக்க;

திரு அரையில் அரை மணி கிணின் கிணின் என—அழகிய இடையிலே உடைமணியானது கிணின் கிணின் என்று ஒலிக்க;

பொலம் திண் தோளின் வளை கலிப்ப—பொன்னிறமான வலிய தோள்களில் தோள்வளை ஒலிப்ப;

அம் பொன் பகட்டு மார்பில் சன்ன வீரமும் ஆரமும் திரு வில் வீச—அழகிய பொன்னிறமான பெரிய மார்பிலே வீரசங்கிலியும் மாலையும் (இந்திரவில்லைப்போல்) அழகிய ஒளியை வீச;

அணி மகரம் குண்டலம் பரிதி மண்டலம் என்ன அலர் கதிர் கற்றை சுற்ற—அழகிய மகரமீன் வடிவான குண்டலம் என்னும் காதணிகள் சூரிய வட்டம் என்று சொல்லும்படி பரக்கும் வெயில் திரளை சூழ்ந்து வீசச்செய்ய; (குண்டலம் கற்றையோடு சுற்ற என்றுமாம்)

பை பொன் சுடர் சுட்டி கட்டு சூழியம் உடன் பட்டம் ஒளிவிட்டு எறிப்ப—பசுமையான பொன்னுற் செய்த ஒளியுடைய சுட்டி என்னும் அணி கட்டப்பெற்ற உச்சிக்கொண்டையுடன் நெற்றிப்பட்டம் ஒளியை வெளிவிட்டு வீச;

பங்கயம் மலர்ந்த திரு முகம் மண்டலம் தொறும் பனி முறுவல் நிலவு அரும்ப—தாமரை மலர்போல் மலர்ந்த அழகிய (ஆறுகிய) முகவட்டந்தொறும் குளிர்ந்த புன்சிரிப்பு நிலவினைத் தோற்ற;

கும்பம் படா முலை மலை புதல்வி செல்வம் குமாரன் நாயகன் வருக—குடம்போன்ற சாயாத நகிலையுடைய மலையரசன் மகளுடைய செல்வக் குழந்தையாகிய தலைவனே! வருக;

குரவு கமழ்தரு கந்தபுரியில் அருள் குடி கொண்ட குமரன் குரு பரன் வருக—குராமலர் மணக்கின்ற கந்தபுரியிலே அருள் குடியிருத்தலைப் பெற்ற குமரனுகிய குருபரனே! (எம்முன்) வருக. (எ-று.)

முடிபு :— கழல் கிண்கிணி சிலம்பொடு கலின் கலின் என, அரைமணி கிணின் கிணின் என, வளை கலிப்ப, சன்ன வீரமும் ஆரமும் திருவில் வீச, மகர குண்டலம் பரிதி மண்டலம் என்ன கதிர்க்கற்றை சுற்ற, சூழியமுடன் பட்டம் ஒளிவிட்டு எறிப்ப, முகமண்டலந்தொறும் முறுவல் நிலவு அரும்ப குமார நாயகனே! குமர குருபரனே! வருக.

(கு-ரை) செம்பொற் கருங்கழல் முரண்தொடை. குரவு கமழ் தரு புரியாதலால் அப்புரி முருகனுக்கு விருப்பமான இடமாயிற்று. பரன்—மேலோன்.

53. மழவுமுதிர் கனிவாய்ப் பசுந்தேறல் வெண்டுகில்
மடித்தல நனைப்பவம்மை
மணிவயிறு குளிரத் தவழ்ந்தேறி யெம்பிரான்
மார்பினிற் குரவையாடி

முழவுமுதிர் துடியினிற் சிறுபறை முழக்கியனல்
மோலிநீர் பெய்தவித்து
முளைமதியை நெளியரவின் வாய்மடுத் திளமானின்
முதுபசிக் கறுகருத்தி

விழவுமுதிர் செம்மேனி வெண்ணீறு தூளெழ
மிகப்புழுதி யாட்டயர்ந்து
விரிசடைக் காட்டினின் றிருவிழிகள் சேப்பமுழு
வெள்ளநீர்த் துளையமாடிக்

குழவுமுதிர் செவ்விப் பெருங்களி வரச்சிறு
குறும்புசெய் தவன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (உ)

முருகனாகிய குழந்தை சிவபெருமான் திருமேனியில் தவழ்ந்தேறி அவர் அணிந்துள்ள பொருள்களோடு சிறு குறும்பு செய்த செயல் கூறப்படுகிறது.

(இ-ள்) மழவு முதிர் கனி வாய் பசு தேறல் வெள் துகில் மடி தலம் நனைப்ப அம்மை மணி வயிறு குளிர தவழ்ந்து ஏறி எம்பிரான் மார்பினில் குரவை ஆடி—இளமை மிகும் கனிபோன்ற வாயிலே யிருந்து ஒழுகும் பசிய தேனானது இறைவனது வெண்மையாகிய ஆடையணிந்த வயிற்றிடத்தை நனைப்பவும், (முருகன் விளையாட்டைப் பார்த்து) அம்மையின் அழகிய வயிறு குளிரவும், எமது பிரான் (திருமேனியில்) தவழ்ந்து ஏறி மார்பிடத்தே குரவைக் கூத்தாடி;

முழவு முதிர் துடியினில் சிறு பறை முழக்கி—முழவினைப்போல் ஓசை முதிர்கின்ற உடுக்கையில் சிறுபறை முழங்கச் செய்து;

அனல் மோலி நீர் பெய்து அவித்து—கையிலுள்ள நெருப்பைச் சடைமுடியிலுள்ள கங்கை நீரை ஊற்றி அவியச் செய்து;

முளை மதியை நெளி அரவின் வாய் மடுத்து—(தலையில் அணிந்துள்ள) இளைய திங்களை நெளிகின்ற பாம்பின் வாயில் பொருந்தச் செய்து;

இள மானின் முது பசிக்கு அறுகு அருத்தி — கையிலுள்ள இளைய மானின் பெரிய பசிக்கு (முடியிலுள்ள) அறுகம் புல்லை உண்ணச் செய்து;

விழவு முதிர் செம் மேனி வெள் நீறு தூள் எழ மிக புழுதி ஆட்டு அயர்ந்து—மங்கலம் முதிர்ந்த சிவந்த மேனியில் (அணிந்துள்ள) வெண்மையாகிய திருநீறு தூளாய் எழும்படி மிகவும் புழுதி விளையாட்டைச் செய்து;

விரிசடை காட்டில் நின் திரு விழிகள் சேப்ப முழு வெள்ளம் நீர் துளையம் ஆடி—விரிந்த சடையாகிய காட்டிலே உனது அழகிய கண்கள் சிவக்க (கங்கையாகிய) பெருவெள்ள நீரில் முழுகி விளையாடி;

குழவு முதிர் செவ்வி பெரு களி வர சிறு குறும்பு செய்தவன் வருக—இளமை முதிர்ந்த பருவத்தால் (கண்டார்க்குப்) பெருமகிழ்ச்சி வரச் சிறிய குறும்பாகிய விளையாட்டைச் செய்தவனே! வருக. (எ—று)

முடிபு :— வாய்த்தேறல் மடித்தலம் நனைப்ப எம்பிரான் (திருமேனியில்) தவழ்ந்து, ஏறி, குரவை ஆடி, சிறுபறை முழக்கி, அனலை நீர் பெய்து அவித்து, மதியை அரவின் வாய் மடுத்து, மானின் பசிக்கு அறுகு அருத்தி, நீறு தூள் எழ புழுதி ஆட்டு அயர்ந்து, விழிகள் சேப்ப சடைக்காட்டின் வெள்ளத்தில் துளையம் ஆடி, குழவிமுதிர் செவ்வியினால் (கண்டார்க்குப்) பெருங்களி வரவும், அம்மை வயிறு குளிரவும் சிறு குறும்பு செய்தவனே! குமர குருபரனே! வருக.

54. இருளற விமைக்குநின் றிருவுருவி னலர்சோதி
இளஞாயி றெனமுகையவிழ்ந்
தேடுவிரி தாமரைக் காடுமுகிழ் நகைநில
வெறிப்பவலர் குமுதவனமும்

கரைபுரள வலைமோது கடலைக் கலக்குமழ
களிறென வுழக்கியொருநின்
கண்மலர்கள் செம்மலர்க ளாகமோ கப்பெருங்
கலவியங் கடலின்மூழ்கும்

வெருளின்மட நோக்கினீ ரரமகளி ருடனாடும்
விளையாட் டெனத்திரைபொரும்
வெள்ளநீர்ச் சரவணப் பொய்கையந் துறையினீள்
வீரர்க ளெனுங்கோளரிக்

குருளைக ளொடும்புனல் குடைந்துவிளை யாடிய
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (ந)

## முருகக் கடவுள் சரவணப் பொய்கையில் வீரவாகு தேவர் முதலான துணைவருடன் விளையாடிய செய்தி கூறப்படுகின்றது.

(இ-ள்) இருள் அற இமைக்கும் நின் திரு உருவின் அலர் சோதி இள ஞாயிறு என முகை அவிழ்ந்து ஏடு விரி தாமரை காடும்—இருள் நீங்கும்படி ஒளியைச் செய்யும் உனது அழகிய உருவத்திலிருந்து பரந்த ஒளியை இளஞ்சூரியன் (ஒளி) என்று எண்ணி மொட்டு விரிந்து இதழ் அலர்ந்த தாமரை மலராகிய காடுகளும்;

முகிழ் நகை நிலவு எறிப்ப அலர் குமுதம் வனமும்—அரும்பும் சிரிப்பு நிலவை வீச (அதனால்) மலர்கிற குமுதமலர்க் காடுகளும்;

கரை புரள அலை மோது கடலை கலக்கும் மழ களிறு என உழக்கி—கரையிற் சென்று புரளும்படி, 'அலைகளை வீசும் கடலினைக் கலக்குகின்ற இளைய ஆண் யானையைப்போல, (அக்காடுகளை)க் கலக்கி;

ஒரு நின் கண் மலர்கள் செம் மலர்கள் ஆக—ஒப்பற்ற உனது விழிகளாகிய வெண்மலர்கள் செந்நிறமுள்ள மலர்கள் ஆகும்படி;

மோகம் பெரு கலவி அம் கடலின் மூழ்கும் வெருளின் மடம் நோக்கின் நீர் அர மகளிர் உடன் ஆடும் விளையாட்டு என—விருப்பத்தைச் செய்யும் பெரிய புணர்ச்சியாகிய அழகிய கடலில் முழுகுகின்ற மான்போன்ற இள நோக்கையுடைய நீரரமகளிரோடு விளையாடும் விளையாட்டைப்போல;

திரை பொரும் வெள்ளம் நீர் சரவணம் பொய்கை அம் துறையில்—அலை மோதும் பெருக்கு நீரையுடைய சரவணப் பொய்கையின் அழகிய துறையுள்;

நீள் வீரர்கள் எனும் கோளரி குருளைகளொடும் புனல் குடைந்து விளையாடிய குமாரன் நாயகன் வருக—பெரிய ஒன்பது வீரர் எனும் சிங்கக்குட்டிகளோடு நீரிலே நீந்தி விளையாடிய குமாரனாகிய தலைவனே (எம்மிடம்) வருவாயாக. (எ—று)

முடிபு:— நின் உருவில் அலர் சோதி இளஞாயிறு (ஒளி) என முகை அவிழ்ந்து ஏடு விரி தாமரைக் காடும், நகை நிலவு எறிப்ப (அதனால்) அலர் குமுத வனமும், ஆகிய இவற்றைக் களிறு என உழக்கி, நின் கண்மலர்கள் செம்மலர்கள் ஆக, நீரரமகளிருடன் ஆடும விளையாட்டென, சரவணப் பொய்கையந் துறையில் வீரர்கள் எனும் கோளரிக் குருளைகளொடும் புனலில் குடைந்து விளையாடிய குமார நாயகனே! குமர குருபரனே! வருக.

55. கட்டுண்ட படர்சடைக் காட்டெம்பி ரான்வைத்த
கலைமதியொ டையநீயக்
கவுரிதிரு முடியினித் திலமிட் டிழைத்திட்ட
கதிரிளம் பிறையிணைப்பத்

தெட்டுண்ட போன்முழுத் திங்களென் றேக்கறுஞ்
செழுமணிச் சூட்டுமோட்டுச்
செம்பாம்பு பைவிரித் தாடுதலு மோடிநின்
சிறுநறுங் குஞ்சிக்கிடும்

மட்டுண்ட பைங்குலைக் காந்தளென் றணையவம்
மாசுணம் வெருண்டோடலும்
மணிமுடியி னகுதலையை மற்றெமை நகைத்தியால்
மலரவன் றலைநீமுனம்

குட்டுண்ட தறியாய்கொ லெனவித ழதுக்கும்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (சு)

## முருகனது இளமையில் பேதமை கற்பித்துப் புகழ்ந்தது.

(இ-ள்) கட்டுண்ட படர் சடை காட்டு எம்பிரான் வைத்த கலை மதியொடு ஐய நீ அகவுரி திரு முடியில் நித்திலம் இட்டு இழைத் திட்ட கதிர் இள பிறை இணைப்ப—முடியாகக் கட்டப்பெற்ற பரந்த சடைக்காட்டிலே எமது சிவபிரான் வைத்த கலையையுடைய பிறை யொடு ஐயனே! நீ அந்த உமாதேவியின் அழகிய தலையில் உள்ள முத்துக்களை வைத்து இழைத்திட்ட ஒளிவாய்ந்த இளைய பிறை யென்னும் அணியை எடுத்துப் பொருத்த;

தெட்டுண்ட போல் முழு திங்கள் என்று ஏக்கறும் செழு மணி சூட்டு மோட்டு செம் பாம்பு பை விரித்து ஆடுதலும்—(அவ்விரண்டும் கூடிய வடிவை) முழுமையான திங்கள் என்று கருதி ஏமாற்றப்பட்டது போல் ஏக்கமடையும், செழிய மாணிக்கத்தையுடைய உச்சியையும் பெருமையையும் உடைய செம்மையான பாம்பு படம் விரித்து ஆடு தலைச் செய்யவும்:

ஓடி நின் சிறு நறு குஞ்சிக்கு இடும் மட்டு உண்ட பை குலை காந்தள் என்று அணைய—(அதனைக்கண்ட நீ) உனது சிறிதாகிய மணமுள்ள மயிர்முடிக்குச் சூட்டும் மணம் பொருந்திய பசிய குலையை யுடைய காந்தள் மலர் என்று கருதி (அதனைப்பற்ற) ஓடி அணைய;

அம் மாசுணம் வெருண்டு ஓடலும்—அப்பாம்பு உன்னைக்கண்டு அஞ்சி ஓடுதலைச் செய்யவும்;

மணி முடியில் நகு தலையை எமை நகைத்தி மலரவன் தலை நீ முனம் குட்டுண்டது அறியாய் கொல் என இதழ் அதுக்கும் குமாரன் நாயகன் வருகவே—(அப்பொழுது சிவபெருமானது) அழகிய முடியில் இயற்கையாகவே சிரித்துக்கொண்டிருக்கும் தலையைப் (பார்த்து) எம்மை (இகழ்ந்து) சிரிக்கின்றனை பிரமன் தலையே! நீ முன்பு குட்டுப் பட்டது அறியாயோ என்று கூறி (சினத்தால்) உதட்டைக் கடிக் கின்றகுமார நாயகனே! வருக. மற்று, ஆல் அசைகள். (எ-று.)

முடிபு:— எம்பிரான் சடைக்காட்டில் வைத்த மதிக்கலை யொடு நீ அக்கவுரி முடியில் திலகம் இட்டு இழைத்திட்ட பிறை (அணியை) இணைப்ப (அதனை) முழுத்திங்கள் என்று தெட்டுண்ட போல் ஏக்கறும் செம்பாம்பு பைவிரித்து ஆடுதலும் (அதனைக்) குஞ்சிக்கிடும் காந்தள் என்று (நீ) ஓடி அணைய அம் மாசுணம் வெருண்டு ஓடலும் (அப்பொழுது) (சிவபெருமானது) முடியில் நகு தலையைப் (பார்த்து) மலரவன் தலையே! (நீ) எமை (இகழ்ந்து) நகைத்தி முன் குட்டுண்டது அறியாய் கொல் என (க்கூறி) இதழ் அதுக்கும் குமார நாயகனே! குமர குருபரனே! வருக.

(கு—ரை) முழுத் திங்களென்று தெட்டுண்ட போல் ஏக்கறும் செம்பாம்பு என்று கூட்டியுரைக்கப்பட்டது.

56. அங்கைத் தலத்தம்மை செங்கண் புதைத்தற்
கடங்காமை யாலெம்பிரான்
அலர்விழிகள் பொத்தலு மிருட்படல மூடவுள்
ளஞ்சிநின் றேங்கவேங்கிச்

செங்கைத் தலங்கொண் டெடுத்தணைப் பாட்கும்
திருத்தாதை யார்க்குமுத்தம்
திருமுகமொ ராறுங் கொடுப்பக் கதுப்பிற்
றெறித்துமுத் தந்தருகெனும்

கங்கைக்கு நல்கா தெழுந்தலறி யோடலும்
கண்ணீர் துடைத்தெடுத்துக்
கான்மலரு நீவித்தன் மார்புற வணைக்குமக்
கவுமாரி யருண்மாரியிற்

கொங்கைக் குடங்கொட்டு பாலருவி யாடும்
குமாரநா யகன்வருகவே
குரவுகமழ் தருகந்த புரியிலருள் குடிகொண்ட
குமரகுரு பரன்வருகவே. (ரு)

## முருகனது பிள்ளைமைச் செயல் கூறப்படுகின்றது.

(இ-ள்) அம் கை தலத்து அம்மை செம் கண் புதைத்தற்கு அடங்காமையால் எம்பிரான் அலர் விழிகள் பொத்தலும் — அழகிய கைத்தலத்தால் (நீ) உமாதேவியாகிய அம்மையின் நல்ல விழிகளை மூடுதற்கு (முயன்று) அவை கைக்கு அடங்காமையால் எமது தலைவனாகிய சிவபெருமானின் பரந்த கண்களை மூடுதலும்;

இருள் படலம் மூட உள் அஞ்சி நின்று ஏங்க-(சிவபெருமானது ஞாயிறும் திங்களுமாகிய விழி மூடப்பெற்றமையால்) எங்கும் இருட் கூட்டம் மூட (அதனால் நீ) மனம் அஞ்சி ஏங்கி நிற்க;

ஏங்கி செம் கை தலம் கொண்டு எடுத்து அணைப் பாட்கும் திரு தாதையார்க்கும் முத்தம் திரு முகம் ஓர் ஆறும் கொடுப்ப—(அதனைக் கண்டு) தானும் ஏங்கிச் சிவந்த கைத்தலத்தால் (உன்னை) எடுத்து அணைக்கும் உமாதேவிக்கும் அழகிய தந்தையாகிய சிவபெருமானுக்கும் (அவர்களுடைய) அழகிய முகம் ஆறிலும் நீ முத்தங்கொடுப்ப;

கதுப்பில் தெறித்து முத்தம் தருக எனும் கங்கைக்கு நல்காது எழுந்து அலறி ஓடலும் — (அதைக்கண்டு) உனது கன்னத்திலே தட்டி (எனக்கும்) முத்தம் தருக என்ற கங்காதேவிக்கு முத்தம் கொடுக்காமல் (நீ) எழுந்து அலறிக்கொண்டு ஓடலும்;

கண் நீர் துடைத்து எடுத்து கால் மலரும் நீவி தன் மார்பு உற அணைக்கும் அ கவுமாரி அருள் மாரியில் கொங்கை குடம் கொட்டு பால் அருவி ஆடும் குமாரன் நாயகன் வருக — விழி நீர் துடைத்து, உன்னை எடுத்து, (ஓடி வருந்திய) காலாகிய மலரையும் நீவித், தனது நெஞ்சிலே பொருந்த அணைத்துக்கொள்ளும் அந்த உமாதேவியின் அருள் மழைபோல், அவளது நகிலாகிய குடம் சொரியும் பாலருவியில் முழுகும் குமார நாயகனே! வருக (எ—று)

முடிபு:— கைத்தலத்தால் அம்மைகண் புதைத்தற்கு அடங்காமையால் எம்பிரான் விழிகள் பொத்தலும், இருள் மூட, அஞ்சி நின்று ஏங்க, ஏங்கி கைத்தலங்கொண்டு எடுத்து அணைப் பாட்கும், தாதையார்க்கும் திருமுகம் ஓராறிலும் முத்தம் கொடுப்ப, தெறித்துத் தருக எனும் கங்கைக்கு நல்காது எழுந்து அலறி ஓடலும், துடைத்து எடுத்து நீவி அணைக்கும் அக்கவுமாரி அருள் மாரிபோல், கொங்கையாகிய குடம் கொட்டு பால் அருவியில் ஆடும் குமார நாயகனே! குமர குருபரனே! வருக.

(கு—ரை) சிவபெருமானுடைய முகம் ஐந்து உமாதேவியின் முகம் ஒன்று ஆக ஆறிலும் முத்தங்கொடுத்தனர். திருமுகம் ஓர் ஆறும், என்றதற்கு 'தனது திருமுகம் ஓர் ஆறினாலும்' என்றும் கூறலாம்.

(வேறு)

57. பைந்தண் கமல வட்டவணைப்
பாவை யனையார் பூவிரியும்
பசுமென் குழற்கூட் டகிற்புகையின்
படல மூட முடைநறவின்

கந்தம் பொதிந்த செந்துவர்வாய்க்
கடைசி மகளிர் செந்நெலைப்பைங்
கன்ன லெனவுங் கன்னலைப்பூங்
கமுக மெனவுங் கடைக்கூடாத்

தந்தங் கருத்துக் கமைந்தபடி
சாற்றிச் சாற்றி முழுமாயச்
சலதி மூழ்கித் தடுமாறும்
சமயத் தவர்போற் றலைமயங்கும்

அந்தண் பழனக் கந்தபுரிக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே. (௬)

கள்ளுண்ட கடைசி மகளிர் பொய்ச் சமயத்தவர்போல் தலைமயங்கி நிற்பதற்கிடமான கந்தபுரி என்று அதன் சிறப்புக் கூறியது.

(இ-ள்) பை தண் கமலம் வட்டம் அணை பாவை அனையார் பூ விரியும் பசு மெல் குழற்கு ஊட்டு அகில் புகையின் படலம் மூட— பசுமையும் குளிர்ச்சியும் உடைய தாமரை மலராகிய வட்ட இருக்கையில் (வாழும்) இலக்குமியை ஒத்த பெண்கள், மலர் விரிவதற்கிடமான செழுமையும் மென்மையும் வாய்ந்த கூந்தற்கு மணம் ஊட்டுகின்ற அகிற் புகையின் பரப்பு (வயல் நிலங்களை யெல்லாம்) மூடிக்கொள்ள (அதனால்);

முடை நறவின் கந்தம் பொதிந்த செம் துவர் வாய் கடைசி மகளிர்—முடை நாற்றத்தையுடைய கள்ளின் மணம் பொருந்திய மிகச்சிவந்த வாயையுடைய உழவர் குலத்துப் பெண்களானவர்;

செந்நெலை பை கன்னல் எனவும் கன்னலை பூ கமுகம் எனவும் கடைக்கூடா (த) தம் தம் கருத்துக்கு அமைந்தபடி சாற்றி சாற்றி— செந்நெல்லை பசிய கரும்பு எனவும் கரும்பைப் பொலிவுள்ள கமுகு எனவும் முடிவு பெருத தம் தம் மனக்கருத்திற்குப் பொருந்திய வண்ணம் சொல்லிச் சொல்லி;

முழு மாயம் சலதி மூழ்கி தடுமாறும் சமயத்தவர் போல் தலைமயங்கும் அம் தண் பழனம் கந்தபுரிக்கு அரசே வருக வருகவே—

முற்றிலும் மயக்கவுணர்வாகிய கடலிலே அமிழ்ந்து (ஏறமுடியாமல்) தடுமாறுகின்ற பொய்ச்சமய வாதிகளைப்போல இடங்கள் தோறும் மயங்கி நிற்பதற்கிடமான அழகிய தண்ணிய மருதநிலம் சூழ்ந்த கந்தபுரிக்கு அரசனே! வருக வருக;

அருள் ஆனந்தம் கடல் பிறந்த அமுதே வருக வருகவே—(சிவபெருமானாகிய) அருளானந்தம் என்னும் கடலிடத்தே தோன்றிய அமுதம் போன்றவனே! வருக வருக. (எ-று.)

முடிபு:— பாவையனையார் குழற்கு ஊட்டு புகையின் படலம் மூட, நறவின் கந்தம் பொதிந்த வாய்க்கடைசி மகளிரானவர் நெல்லைக் கன்னலெனவும், கன்னலைக் கமுகமெனவும் கடைக்கூடாத தம் தம் கருத்துக்கு இசைந்தபடி சாற்றிச் சாற்றி, 'மாயச் சலதி மூழ்கித் தடுமாறும் சமயத்தவர் போல்' தலைமயங்கும் பழனம்; அப்பழனம் சூழ்ந்த கந்தபுரிக்கு அரசே! அமுதே! வருக வருக.

(கு—ரை) 'செம்துவர்' என்பன ஒரு பொருளிருசொல்.

58. வள்ளைக் குழையிற் றுவடிபோம்
மடமா னேக்கிற் கடைசியர்கண்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை

பள்ளத் திருடுங் கழுவநீர்ப்
பரப்பென் றகல்வான் மிசைத்தாவப்
பாகீ ரதித்தீம் புனல்கிடைத்த
பரிசு வீட்டின் பயன்றுய்க்கும்

உள்ளக் கருத்தாற் பிறிதொன்றை
உண்மைப் பொருளென் றுள்ளவுந்தம்
உணர்விற் றெய்வங் கடைக்கூட்ட
உறுதி கிடைத்த படிபோலும்

அள்ளற் பழனப் புள்ளூருக்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே. (எ)

**சிலர் வீடு பேறு அடையும் கருத்தால் அதற்குரியது அல்லாத தெய்வத்தைப் போற்ற, தம் அறிவிலே வாழும் தெய்வம் அப்பேற்றை அடையச் செய்யும் நிகழ்ச்சியை, வாளைமீன் செயலோடு ஒப்பிட்டுக் கூறியது.**

(இ-ள்) வள்ளை குழையில் தாவடி போம் மடம் மான் நோக்கின் கடைசியர்கள் மாலைக்கு உழல் வண்டு ஓலம் இட —(காதாகிய) வள்ளைத்தண்டில் உள்ள காதணியின்மேல் தாண்டிச் செல்லும் இளைய மான் நோக்கினைப் போன்ற நோக்கத்தையுடைய உழத்தியர் அணிந்த மாலையில் (உள்ள தேனுக்கு)த் திரியும் வண்டுகளெல்லாம் பேரொலி செய்ய;

மடுவில் வெடி போம் வரிவாளை பள்ளத்து இருள் தூங்கு அழுவம் நீர் பரப்பு என்று அகல் வான்மிசை தாவ-(அவ்வொலிக்கு அஞ்சி) மடுவினின்று துள்ளிச் செல்லும் வரிகளையுடைய வாளை மீனனது ஆழத்தையுடைய இருள்நிறம் பொருந்திய செறிந்த கடல்நீர்ப்பரப்பு என்று கருதி அகன்ற (நீல) வானத்தின்மேல் தாவ;

பாகீரதி தீம் புனல் கிடைத்த பரிசு — (அங்கே அவ்வாளைக்கு) ஆகாய கங்கையின் இனிய நீர் கிடைத்த இயல்பானது;

வீட்டின் பயன் துய்க்கும் உள்ளம் கருத்தால் பிறிது ஒன்றை உண்மை பொருள் என்று உள்ளவும் தம் உணர்வின் தெய்வம் கடைக்கூட்ட உறுதி கிடைத்தபடி போலும் அள்ளல் பழனம் புள்ளூருக்கு அரசே வருக—முத்திப் பயனை நுகரவேண்டும் என்னும் மனக் கருத்தால் (அதன் பொருட்டு முத்திகொடுக்க இயலாத) வேறொரு தெய்வத்தை மெய்ப்பொருள் தெய்வமென்று எண்ணவும் தம் அறிவில் எழுந்தருளியுள்ள உண்மைத் தெய்வமானது (அவ்விருப்பத்தை) முற்றுவிக்க (அதனால்) தமக்கு முத்திப் பயன் கிடைத்த வகையை ஒவ்வுவதற்கு இடமான சேறுடன் கூடிய பழனம்; அப்பழனம் சூழ்ந்த புள்ளூர்; அப்புள்ளூருக்கு அரசே வருக. (எ—று)

முடிபு:— கடைசியர்கள் மாலைக்கு உழல் வண்டு ஓலம் இட, (அதனால்) வெடி போம் வாளை வான்மிசை நீர்ப்பரப்பு என்று தாவ, (அவ்வாளைக்கு)ப் பாகீரதிப்புனல் கிடைத்த பரிசு 'வீட்டின் பயன் துய்க்கும் கருத்தால் பிறிதொன்றை உண்மைப் பொருள் என்று உள்ளவும் தம் உணர்விலே உள்ள தெய்வம் (அதனைக்) கடைக்கூட்ட உறுதி கிடைத்தபடி' போலும் பழனப் புள்ளூருக்கு அரசே! அமுதே! வருக.

(கு-ரை) 'மாலை குழல் வண்டு' என்றுமாம்.

59. நஞ்சிற் றோய்த்துக் கொலைதீற்றும்
நயன வேலுங் கரும்புருவ
நாமச் சிலையு மகலல்குல்
நகுபொற் றேரு மிகல்கடந்து
வஞ்சிக் கொடிநுண் ணிடைசாய்த்து
மதர்த்துக் களித்த மால்களிறும்
மற்றும் படைகள் பற்பலவும்
வகுத்துக் கொண்டு மடலவிழ்ந்த
கஞ்சத் தவிசிற் றிருவன்னார்
கடலந் தானைக் கைநிமிரக்
காமன் படைவீ டெனப்பொலியும்
காட்சி யானு மப்பெயரிட்
டஞ்சொற் றமிழோர் புகழ்வேளூர்க்
கரசே வருக வருகவே
அருளா னந்தக் கடற்பிறந்த
அமுதே வருக வருகவே. (அ)

'வேளூர்' என்பதற்கு வேறொரு காரணம் கற்பித்துப் புனைந்து கூறியது.

(இ-ள்) நஞ்சில் தோய்த்து கொலை தீற்றும் நயனம் வேலும்— விடத்திலே படியச்செய்து கொலைப் பண்பு பூசப்பெற்ற கண்ணாகிய வேற்படையும்;

கரு புருவம் நாமம் சிலையும்—கரிய புருவமாகிய அச்சந்தரும் விற்படையும்;

அகல் அல்குல் நகு பொன் தேரும்—அகன்ற அல்குலாகிய விளங்கும் பொற்றேராகிய படையும்,

இகல் கடந்து வஞ்சி கொடி நுண் இடை சாய்த்து மதர்த்து களித்த மால் களிறும்—பகையை வென்று வஞ்சிக் கொடி போன்ற நுண்ணிய இடையை வளைத்துச் செழித்துப் பூரித்துள்ள (நகிலாகிய) பெரிய யானைப் படையும்;

மற்றும் படைகள் பற்பலவும்—ஏனைய பற்பலவாகிய படைகளும்;

வகுத்துக்கொண்டு — (ஆகிய படைகளை) அணிவகுத்துக் கொண்டு;

மடல் அவிழ்ந்த கஞ்சம் தவிசில் திரு அன்னார் கடல் அம் தானை கை நிமிர—இதழ் விரிந்த தாமரை மலராகிய தவிசில் உள்ள இலக்குமியை ஒத்த பெண்களாகிய கடல்போன்ற அழகிய சேனை யானது மிகுந்து தோன்ற;

காமன் படை வீடு என பொலியும் காட்சியானும் அ பெயர் இட்டு அம் சொல் தமிழோர் புகழ் வேளூர்—மன்மதனது படைகள் தங்கும் வீடு என்று சொல்லும்படி பொலிகின்ற தோற்றத்தினாலும் காமனுக்குரிய வேள் என்னும் அப்பெயரையும் வைத்து அழகிய சொல்லையுணர்ந்த புலவர் புகழும் வேளூர்;

வேளூர்க்கு அரசே வருக—அத்தகைய வேளூர்க்குத் தலைவனே வருக. (எ-று.)

முடிபு:— நயனமாகிய வேலும், புருவமாகிய சிலையும், அல்குலாகிய தேரும், (நகிலாகிய) களிறும், மற்றும் படைகள் பற்பலவும் வகுத்துக்கொண்டு திருவன்னாராகிய தானை கைநிமிர காமன் படைவீடெனப் பொலியும் காட்சியானும் அப்பெயர் இட்டுத் தமிழோர் புகழ் வேளூர்; அவ்வேளூர்க்கு அரசே! அமுதே! வருக.

(கு-ரை) 'வேள்' என்னுஞ்சொல் முருகனுக்கும் மன்மதனுக்கும் ஒருசார்க் குறுநில மன்னர்க்கும் உரிய பெயராகும். முருகனுக்குரிய ஊர் என்னும் காரணத்தால் வைத்தியநாதபுரி 'வேளூர்' என்று வழங்கப்படுகிறது. காமனாகிய வேளுக்கும் படையாகிய பெண்கள் நிரம்பியிருத்தலின் அவனுக்குரிய படைவீடு என்னும் பொருளும் அதற்கு அமையும் என்று கூறிப்புனைந்துரைக்கப்பட்டது.

(சந்தவிருத்தம்)

தனன தனன தனன தனன
தனன தனன தனதன

60. உலகு குளிர வெமது மதியி லொழுகு மமுத கிரணமே
உருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே
அலகில் புவன முடியு வெளியி லளியு மொளியி னிலயமே
அறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே. (கூ)

முருகனைப் பலபடியாகப் புகழ்ந்துரைத்தது.

(இ-ள்) உலகு குளிர எமது மதியில் ஒழுகும் அமுதம் கிரணமே—உலகமெல்லாம் குளிர்ச்சியடையும்படி எமது அறிவாகிய திங்களிலிருந்து ஒழுகுகின்ற அமுதமயமான ஒளியே;

உருகும் அடியர் இதயம் நெகிழ உணர்வில் எழும் நல் உதயமே—உருகும் தொண்டரது நெஞ்சத்தாமரை கட்டவிழும்படி எம் அறிவில் உதிக்கும் நல்ல உதய ஞாயிறே;

கலையும் நிறையும் அறிவும் முதிர முதிரும் மதுர நறவமே—நூல்களும் மன அடக்கமும் அறிவும் பெருகுதற்குக் காரணமாக முதிரும் இனிய தேனே;

கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகு சலதியே—குற்றத்தைக் கழுவிய பெரியோர் குளிக்கும்படி விளங்கும் பெரிய அருள் பெருகும் கடலே;

அலகு இல் புவனம் முடியும் வெளியில் அளியும் ஒளியின் நிலயமே—எல்லை இல்லாத உலகங்களெல்லாம் முடிகின்ற வானத்திலே (விளங்கும்) முதிர்கின்ற ஒளிக்குப் பிறப்பிடமானவனே;

அறிவுள் அறிவை அறியும் அவரும் அறிய அரிய பிரமமே—அறிவினிற் சிறந்த அறிவை அறிகின்ற அப்பேர்ப்பட்டவரும் அறிதற்கரிய பெரும்பொருளாயுள்ளவனே;

மலையின் மகள் கண் மணியை அனைய மதலை வளமை தழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருக—மலைமகளின் கண் மணியை ஒத்த குழந்தையே! வளப்பங்களைத் தழுவிய பருதிபுரத்தில் பொருந்திய குமரனே! வருக (எ—று.)

முடிபு :— அமுத கிரணமே, உதயமே, நறவமே, சலதியே, ஒளியின் நிலயமே, பிரமமே, மதலையே குமரனே வருக.

(கு—ரை) 'எமது மதியில்' என்றுற்போல 'எமது உணர்வில்' என்று கொள்க. இந்நூல் செய்த குமரகுருபரசுவாமிகள் முருகன் திருவருளைப் பெற்றவர் என்பதை "உலகு குளிர ... ... உதயமே" என்னும் பகுதியால் அறிக. 'கழுவு துகளர்' என்னும் சொல் அருங்கேடன், வீதராகன் என்பனபோல் நின்றது.

61. இழுமெ னருவி சொரியு மிமய முதல்வி புதல்வன் வருகவே
இயலு நடையும் வடிவு மழகு மெழுத வரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
ஒருவ னிருவ ரொடுகை தொழுந லுபய சரணன் வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியு நகையன் வருக வருகவே
விளரி பயிலு மளியு ஞிமிறும் விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பரிது புரியின் மருவு குமரன் வருகவே.

இதுவும் முருகனைப் பலபடியாகப் புகழ்ந்தது.

(இ-ள்) இழும் என் அருவி சொரியும் இமயம் முதல்வி புதல்வன்—இழும் என்னும் ஓசையையுடைய அருவியைப் பொழிகின்ற இமயமலையில் தோன்றிய முதல்வியின் குழந்தையே ;

இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியன்—இலக்கணமும், திருவடியும், ஏனைய வடிவமும், அழகும் ஓவியரால் எழுதுதற்கு அரியவனே ;

ஒழுகு கருணை முழுகு கமலம் வதனன்—சொரிகின்ற அருள் வெள்ளத்தில் முழுகுகின்ற தாமரை மலர்போன்ற முகத்தையுடையவனே ;

ஒருவன் இருவரொடு கை தொழு நல் உபயம் சரணன்—(சங்கார காலத்தில்) ஒருவனாய் விளங்கும் உருத்திரன் பிரமனும் திருமாலுமாகிய இருவரொடு கைகுவித்து வணங்கும் நல்ல இரண்டு திருவடிகளையுடையவனே ;

விழுது விடு வெள் நிலவு பொழியும் நகையன்—வெண்ணெய்யாகிய விழுதைப்போல் வெளிவரும் வெண்மையான நிலவைப் பொழியும் சிரிப்பையுடையவனே ;

விளரி பயிலும் அளியும் ஞிமிறும் விரவு குரவன்—விளரிப் பண்ணைப் பழகுகின்ற கருவண்டும் பொன் வண்டும் கலந்து வாழும் குராமலர் அணிந்தவனே ;

மழலை முதிர முதிரும் மதுரம் வசனன்—இளமை கனியும்படி கனிகின்ற இனிய மொழியையுடையவனே ;

வளமை தழுவு பருதி புரியின் மருவு குமரன் வருகவே–செல்வம் பொருந்திய பருதி புரத்திற் பொருந்திய குமரனே வருக. (எ-று.)

முடிபு :— இமய முதல்வி புதல்வன், இயல் முதலானவற்றை எழுத அரியன், கமல வதனன், உபய சரணன், நகையன், குரவன், மதுர வசனன், குமரன் வருக.

---

## எ. அம்புலிப் பருவம்.

### (ஆசிரிய விருத்தம்)

62. மண்டலம் போற்றுருவ மமுதமய மாய்முழு
மதிக்கடவு ளெனவருதலால்
வாஞெறு தலைமடுக் கப்பொங்கு மானந்த
மாக்கட லிடைத்தோன் றலால்

தண்டலில் கொடிச்சிவாய்க் குமுதம்விள் ளக்கரத்
    தாமரை முகிழ்த்திடுதலாற்
சகலபுவ னத்திலு முயிர்ப்பயிர் தழைப்பநற்
    றண்ணளி சுரந்திடுதலால்

துண்டமதி நதியொடு பொதிந்தவே ணிப்பரஞ்
    சோதிகட் பொறியாதலால்
தோன்றலிவ னின்னையொத் துளனு னினக்குமொரு
    துணையிவன் போலில்லைகாண்

அண்டரண் டத்தொடகி லாண்டம் படைத்தவனொ
    டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
    அம்புலீ யாடவாவே. (க)

**நான்கு உபாயங்களில் ஒப்பு என்னும் சாம உபாயத்தால் அம்புலியை முருகனுடன் விளையாட அழைத்தது.**

**அம்புலிக்கும் முருகனுக்கும் சிலேடை.**

(இ-ள்) **முருகன்:** மண் தலம் போற்று உருவம் அமுதம் மயம் ஆய் முழுமதி கடவுள் என வருதலால்—மண்ணுலகம் போற்றுகின்ற வடிவம் அழியாத தன்மை உடைத்தாகி முற்றறிவு வாய்ந்த கடவுள் என்று கருதவருதலால்;

**அம்புலி:** மண்டலம் போற்று உருவம் அமுதம் மயம் ஆய் முழுமதி கடவுள் என வருதலால்—சூரிய மண்டலத்தால் காக்கப்பெற்ற வடிவம் அமிழ்தத்தின் தன்மையுடைத்தாகி முழுமையான திங்கட் கடவுள் என்று சொல்லவருதலால்;

**முருகன்:** வான் ஆறு தலை மடுக்க பொங்கும் ஆநந்தம் மா கடலிடை தோன்றலால்—ஆகாய கங்கை தலையிற் பொருந்த மிகும் ஆனந்தமாகிய பெருங்கடல் (என்னும் சிவபெருமானிடத்தே) பிறத்தலால்;

**அம்புலி:** வான் ஆறு தலை மடுக்க பொங்கும் மா நந்த மா கடலிடை தோன்றலால்—தூய ஆறுகள் தன்னிடத்தே வந்து கலக்கப் பொங்குகின்ற பெரிய சங்குகளையுடைய பெருங்கடலிடத்தே உதித்தலால்;

**முருகன்:** தண்டல் இல் கொடிச்சி வாய் குமுதம் விள்ள கரம் தாமரை முகிழ்த்திடுதலால்—தடையில்லாத கொடிபோன்ற வள்ளியின் வாயாகிய குமுதம் மலர கையாகிய தாமரை மலர் குவித்து வணங்கப்பெறுதலால்;

**அம்புலி:** தண்டல் இல் கொடிச்சி வாய் குமுதம் விள்ள கரம் தாமரை முகிழ்த்திடுதலால்—குற்றமில்லாத கொடியிடத்தே உள்ள குமுதத்தின் அரும்பு மலர, கிரணத்தை (ஒளியை) யுடைய தாமரை மலர் கூம்பப்பெறுதலால்;

**முருகன்:** சகலம் புவனத்திலும் உயிர் பயிர் தழைப்ப நல் தண் அளி சுரந்திடுதலால்—எல்லா உலகத்திலும் உள்ள உயிராகிய பயிர்களெல்லாம் தழைப்ப நல்ல குளிர்ந்த அருளைத் தோற்றுவித்தலால்;

**அம்புலி:** சகலம் புவனத்தினும் உயிர் பயிர் தழைப்ப நல் தண்ணளி சுரந்திடுதலால்—(குறிஞ்சி முதலான) எல்லா நிலத்திலும் உள்ள ஓரறிவு உயிராகிய பயிர்கள் செழிக்க நல்ல மிக்க குளிர்ச்சியைத் தோற்றுவித்தலால்;

**முருகன்:** துண்டம் மதி நதியொடு பொதிந்த வேணி பரம் சோதி கண் பொறி ஆதலால்—பிறைத் துண்டத்தை கங்கையாற்றொடு வைத்த சடையையுடைய மேலான ஒளிமயமான சிவபெருமானது விழியில் எழுந்த அனற்பொறிவடிவாயிருத்தலால்;

**அம்புலி:** சிவபெருமானது இடக்கண்ணாகிய பொறியாயிருத்தலால்;

தோன்றல் இவன் நின்னை ஒத்துளன் ஆல்—பெரியோனாகிய இம்முருகன் (அம்புலியாகிய) உன்னைச் (சிறிது) ஒத்துளன் ஆகையினாலே;

நினக்கும் ஒரு துணை இவன் போல் இல்லை காண்—(துணையற்ற) உனக்கும் ஒப்பற்ற துணை இம்முருகன்போல் வேறொருவரில்லை என்பதனை உணர்வாயாக;

அண்டர் அண்டத்தொடு அகிலம் அண்டம் படைத்தவனோடு அழகு பொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன் அம்புலீ ஆட வா—தேவருடைய உலகத்தொடு ஏனைய அழிவற்ற அண்டங்களையெல்லாம் தோற்றுவித்தவனோடு, அழகு பொலியும் கந்தபுரி செழிக்கவரு கந்தனொடு அம்புலியே விளையாட வா. (எ-று.)

**முடிபு:—** *போற்றுருவம் அமுதமயமாய் முழுமதிக் கடவுளென வருதலானும், கடலிடைத் தோன்றலானும், குமுதம் விள்ளக்கரத் தாமரை முகிழ்த்திடுதலானும், உயிர்ப்பயிர் தழைப்ப தண்ணளி சுரந்திடுதலானும், பரஞ்சோதி கட் பொறியாதலானும், அம்புலியே! தோன்றலாகிய இவன் நின்னை ஒத்துளன் ஆல் (ஆதலால்) நினக்கும் இவன்போல் (வேறு) துணையில்லை காண்; படைத்தவனொடு கந்தனுடன் ஆடவா.*

**(கு—ரை)** 'கரத்தாமரை' என்ற இடத்தே 'கரா:' என்னும் வடசொல் 'கரம்' என்று திரிந்து நின்றது. அச்சொல்லுக்குக் கப்பம், கை, கிரணம் (ஒளி) என்றும் பொருளிருத்தலை 'பலி ஹஸ்தம் அம்சவ: கரா:' என்னும் அமரகோசத்தால் அறிக.

63\. சொற்றரு பெரும்புலவர் கலையமுது கொளவிருந்
தோகைமேல் கொண்டருளினாய்
தோற்றிமுன் பொங்கிமலை போலவலை மோதுமச்
சோதிவே லையுமுகந்தாய்

குற்றமில் குணத்தைக் குறித்தவிர வலர்முகம்
கோடா தளித்தல்செய்தாய்
கோகனக நாயகன் வரக்கூ விடுங்குக்
குடங்கொடிய தாகவைத்தாய்

உற்றிடு மிதழ்க்குமுதம் விண்டுதண் டேனொழுக
ஒளிநிலா நகைமுகிழ்த்தாய்
உன்செய்கை யெம்பிரான் றன்செய்கை போலுமால்
உனையுமிவ னெவ்வாதிரான்

அற்பொதி களத்தவ னளித்தகும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (உ)

இதுவுமது.

(இ-ள்) முருகன்: சொல் தரு பெரு புலவர் கலை அமுது கொள இரு தோகை மேல்கொண்டு அருளினான்—சொற்களைத் தருகின்ற பேரறிஞரது நூல்களாகிய அமிழ்தத்தை ஏற்றுக்கொள்வதற்காகக் கரிய மயிலின்மேல் எழுந்தருளி வந்து அருள்செய்தான்;

அம்புலி: சொல் தரு பெரு புலவர் கலை அமுது கொள இருந்து ஓகை மேல் கொண்டு அருளினாய்—(அம்புலியாகிய நீயும் அம் முருகனைப்போல்) புகழைத்தரும் பெரிய தேவர்கள் (உனது) கலை அமிழ்தத்தைக் கொள்ளும்படி விளங்கி உவகை மிகுதலைக் கொண்டருள் செய்தாய்;

முருகன்: தோற்றி முன் பொங்கு இமலை போல அலை மோது சோதி வேலையும் உகந்தான்—முன் தோன்றுதல் செய்து பல மாயங்களுடன் சினக்கின்ற இக்கிரவுஞ்சமலையை ஊடுருவினாற்போல கடலினைத் தாக்குகின்ற ஒளிபெற்ற வேலாயுதத்தையும் விரும்பினான்;

அம்புலி: தோற்றி முன் பொங்கி மலைபோல அலை மோதும் அ சோதி வேலையும் உகந்தாய்—தோன்றுதல் செய்து முன்னே பொங்கி மலையினைப்போல அலைமோதுகின்ற அந்த ஒளியுள்ள கடலினையும் (நீ தோன்றும் இடமாகவும் உதிக்கும் இடமாகவும் கொண்டு) உவந்தனை;

**முருகன்:** குற்றம் இல் குணத்தை குறித்த இரவலர் முகம் கோடாது அளித்தல் செய்தான் - குற்றமில்லாத நற்குணத்தையே கருதின (தன்னிடம்) இரத்தலில் வல்ல தொண்டருடைய முகம் கோணுமல் அவர்களுக்கு அருள் செய்தான்;

**அம்புலி:** குற்றம் இல் குணத்தை குறித்த இரவு அலர் முகம் கோடது அளித்தல் செய்தாய்—குற்றமில்லாத நற்பண்பையுடைய, இரவுக் காலத்தில் (மலரும்) மலரின் முகம் வாடாமல் காத்தலைச் செய்தாய்;

**முருகன்:** கோகனகம் நாயகன் வர கூவிடும் குக்குடம் கொடியது ஆக வைத்தான்—தாமரை நாயகனுகிய சூரியன் உதிக்கும்படிக் கூவுகின்ற கோழியைக் கொடியாக வைத்தான்;

**அம்புலி:** கோகனகம் நாயகன் வர கூவிடும் குக்குடம் கொடியது ஆக வைத்தாய்—(உனது ஒளி கெடும்படி)ச் சூரியன் உதிக்கக் கூவும் கோழியை உனக்குக் கொடுமை செய்வதாக (பகையாக) வைத்தாய்;

**முருகன்:** உற்றிடும் இதழ் குமுதம் விண்டு தண் தேன் ஒழுக ஒளி நிலா நகை முகிழ்த்தான்—(வள்ளி நாயகியின்) பொருந்தும் வாயிதழாகிய குமுதமலர் மலர்ந்து குளிர்ந்த தேனெழுகும்படி ஒளி நிலாவைச் செய்யும் புன்சிரிப்புடையவனுனன்;

**அம்புலி:** உற்றிடும்...முகிழ்த்தாய்-பொருந்திய இதழையுடைய குமுதம் மலர்ந்து குளிர்ந்த தேனைச் சிந்தும்படி மிக்க ஒளியையுடைய நிலவைத் தோற்றுவித்தாய்;

உன் செய்கை எம்பிரான் தன் செய்கை போலும் ஆல் உனையும் இவன் ஒவ்வாது இரான்—உனது செயல்களெல்லாம் எமது பெருமானது செயல்களைப்போலும் ஆகையால் உன்னையும் இவன் ஒவ்வாமல் இரான்;

அல் பொதி களத்தவன் அளித்த குமரேசனுடன் அம்புலீ ஆட வா—நஞ்சாகிய இருட்டு பொதிந்த கண்டத்தையுடைய சிவபெருமான் பெற்ற குமரேசனுடன் அம்புலீ! விளையாட வா. (எ—று)

**முடிபு:—** அருளினுய், உகந்தாய், அளித்தல் செய்தாய், வைத்தாய், முகிழ்த்தாய், உன்செய்கை எம்பிரான் செய்கை போலும்; அதனுல் உனையும் இவன் ஒவ்வாதிரான்; குமரேசனுடன் கந்தனுடன் அம்புலீ! ஆட வா.

**(கு—ரை)** திங்களும் அற்பொதிகளத்தவனுலே அளிக்கப் பெற்றதாகலின் முருகனுக்கும் திங்களுக்கும் இயைபு உண்டு என்றது.

64\. கங்கைமுடி யடிகட்கோர் கண்ணு யிருத்தியக்
கண்ணினுண் மணியிவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்றுமொண்
கலைமுழுது நிறையநின்றான்
எங்குமிர வோனெனத் திரிதியிவ னடியவர்
எவர்க்குமிர வினையொழித்தான்
இருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தியிவன்
எவ்வுயிரும் வாழச்செய்தான்
பொங்கமுத மமுதா சனர்க்குதவி னையிவன்
புத்திமுத் தியுமளித்தான்
புவனம் படைத்தவிவ னின்னின்மிக் கானெனப்
புகல்வதோர் பொருளன்றுகாண்
அங்கண்மறை யோலிட் டரற்றநின் றவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (௩)

## பேத உபாயத்தால் அம்புலியை விளையாட அழைத்தது.

(இ—ள்) கங்கை முடி அடிகட்கு ஓர் கண்ணாய் இருத்தி அ கண்ணின் உள் மணி இவன் காண்—கங்கையாற்றைத் தலையிலே தரித்த முதன்மையான சிவபெருமானுக்கு (திங்களாகிய நீ) ஒரு விழியாக உள்ளாய் (ஆனால்) இம்முருகன் அவ்விழியின் உள்ளே உள்ள கரு மணியாய் உள்ளான் என்று உணர்வாயாக;

கலைகள் சில நிறைதி பின் குறைதி இவன் என்றும் ஒண் கலை முழுதும் நிறைய நின்றான்—(நீ ஒரு காலத்தில்) சில கலைகள் நிறையப்பெறுவாய் நிறைந்தபின் (அக்கலைகள்) குறையப்பெறுவாய், (ஆனால்) இம்முருகன் எப்பொழுதும் ஒளிதரும் (நூலாகிய) கலைகள் முற்றிலும் நிறையும்படி நின்றான்:

எங்கும் இரவோன் என திரிதி இவன் அடியவர் எவர்க்கும் இரவினை ஒழித்தான் — (நீ) எவ்வுலகத்தும் இராப் பொழுதிற்கு (இரத்தலுக்கு) உரியவன் என்று சொல்லும் வண்ணம் திரிந்து கொண்டுள்ளாய், இம்முருகன் தொண்டர் யார்க்கும் இரத்தலை ஒழித்தான்;

இரு நிலத்து அங்குரிக்கும் பயிர் வளர்த்தி இவன் எ உயிரும் வாழ செய்தான் — (நீ) பெரிய உலகத்திலே முளைக்கும் பயிர்களை வளர்ப்பாய், இவன் எல்லா உயிர்களையும் வாழும்படிச் செய்துள்ளான்;

பொங்கு அமுதம் அமுதம் அசனர்க்கு உதவினுய் இவன் புத்தி முத்தியும் அளித்தான்—(நீ) பொங்குகின்ற அமிழ்தத்தை அமிழ்தம் உண்பவராகிய தேவர்க்கே கொடுத்தாய், இவன் அறிவும் அதனாற் பெறுகின்ற முத்தியாகிய அமிழ்தத்தையும் (அவற்றைப் பெருத வர்க்குக்) கொடுத்தான்;

புவனம் படைத்த இவன் நின்னின் மிக்கான் என புகல்வது ஓர் பொருள் அன்று காண் — உலகங்களைப் படைத்த இம்முருகன் உன்னைக்காட்டிலும் மேலானவன் எனச் சொல்வது ஓர் பொருள் அன்று என்று உணர்வாயாக; (மலைக்கும் மடுவிற்கும் வேறுபாடு சொல்ல வேண்டுவதில்லை என்றபடி)

அம் கண் மறை ஓலிட்டு அரற்றி நின்ற அவனுடன் அம்புலீ ஆட வா — அழகிய கண் போன்ற வேதம் முழங்கிக் கூவ நின்ற அத்தகையோனுடன் அம்புலீ ! விளையாட வருக. (எ-று)

முடிபு :— அம்புலீ ! (நீ) அடிகட்குக் கண்ணுயிருத்தி, இவன் அக்கண்ணின் உள்மணி என்று காண்; (நீ) கலைகள் நிறைதி குறைதி, இவன் என்றும் கலை நிறைய நின்ருன்; (நீ) இராவோன் எனத்திரிதி, இவன் இரவினை ஒழித்தான்; (நீ) அங்குரிக்கும் பயிர் வளர்த்தி, இவன் எவ்வுயிரும் வாழச் செய்தான்; (நீ) அமுதம் அமுதாசனர்க்கு உதவினுய், இவன் (புத்திமுத்தி பெருதவர்க்குப்) புத்தி முத்தியும் அளித்தான்; (அதனுல்) நின்னின் மிக்கான் எனப் புகல்வது ஓர் பொருள் அன்று காண்; மறை ஓலிட்டு அரற்ற நின்றவனுடன், கந்தனுடன் ஆட வா.

(கு-ரை.) 'இரவினை ஒழித்தான்' என்பதற்குக் 'கேவலாவத்தையை நீக்கினுன்' என்றும் கூறலாம். அரற்றி என்பதை அரற்ற எனத்திரிக்க.

65. பாயிருட் போதத் திருட்டன்றி யகவிருட்
படலங் கிழிப்பதுணராய்
பனிவிசும் பிற்பொலிவ தொன்றலாற் புவனப்
பரப்பெலாம் பொலிவதோராய்

சேயிதழ்க் குமுதந் திறப்பதல் லாதுளத்
திருமலர் திறக்கவறியாய்
சிறைவிரி சகோரப்பு ளன்றியெவ் வுயிரும்
திளைத்தின்ப மாரச்செயாய்

நீயிவற் கொப்பன்மை செப்புவதெ னிப்பரிசில்
நின்பெருந் தவமென்சொல்கேன்
நெடியவன் முதற்றேவர் குறுகிநிற் பவுமுனை
நினைத்தழைத் தருளினன்காண்

ஆயிர மறைக்குமொரு பொருளா யிருப்பவனொ
டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (அ)

(இதுவுமது)

(இ-ள்) பாய் இருள் போதத்து இருட்டு அன்றி அகம் இருள் படலம் கிழிப்பது உணராய்—பரவிய இருட் பொழுதின் இருட்டைக் கிழிப்பதன்றி (முருகனைப்போல்) மனத்தின் இருட் பரப்பைக் கிழித்தலை (அம்புலீ ! நீ) அறியாய்;

பனி விசும்பில் பொலிவது ஒன்று அலால் புவனம் பரப்பு எலாம் பொலிவது ஓராய்—குளிர்ந்த ஆகாயத்தில் விளங்குவ தொன்றே யன்றி (முருகனைப்போல்) உலகப் பரப்பு முற்றிலும் வியாபித்து விளங்கும் இயல்பை நீ அறியாய்;

சேய் இதழ் குமுதம் திறப்பது அல்லாது உளம் திரு மலர் திறக்க அறியாய் — (நீ) சிவந்த இதழ்களையுடைய குமுத மலரை மலரச் செய்வது அல்லாமல் (முருகனைப்போல் அன்பரது) நெஞ்சத் தாமரையை மலரச் செய்வதற்கு அறியாய்;

சிறை விரி சகோரம் புள் அன்றி எ உயிரும் திளைத்து இன்பம் ஆர செயாய்--இறகு விரியும் சகோரம் என்னும் பறவையே அன்றி (முருகனைப்போல்) எவ்வுயிரும் பொருந்தி இன்பம் நுகர்தலை (நீ) செய்யாய்;

நீ இவற்கு ஒப்பு அன்மை செப்புவது என்—நீ இம்முருகனுக்கு ஒப்பல்லாமையைச் சொல்லுதலால் பயன் என்ன;

இ பரிசில்—(நீ) ஒப்பல்லாத இத்தன்மையில்;

நின் பெரு தவம் என் சொல்கேன்—உனது பெரிய தவத்தை என்ன என்று சொல்லுவேன்;

நெடியவன் முதல் தேவர் குறுகி நிற்பவும் உனை நினைத்து அழைத்தருளினன் காண் — திருமால் முதலான தேவரெல்லாம் அணுகி நிற்பவும் (அவரை அழையாமல்) உன்னைக் கருதி அழைத்தான் அறிவாயாக;

ஆயிரம் மறைக்கும் ஒரு பொருளாய் இருப்பவனொடு அம்புலீ ஆட வா — ஆயிரம் வேதத்தினாலும் சொல்லப்பட்ட ஒரு பொருளாய் இருக்கும் முருகனுடன் அம்புலீ ! விளையாட வருக. (எ-று)

முடிபு : — அன்றி கிழிப்பது உணராய், பொலிவது அலால் பொலிவது ஓராய், திறப்பது அல்லாது திறப்பது அறியாய், அன்றி ஆரச் செயாய், (அதனால்) நீ இவற்கு ஒப்பன்மை செப்புவது என்? இப்பரிசில், நின் தவத்தை என் சொல்கேன் ! தேவர் குறுகி நிற்பவும் உனை நினைத்து அழைத்தருளினன் காண் ! இருப்பவனொடு கந்தனுடன் அம்புலீ ! ஆட வா.

தாலாட்டு:

66. தருமன்னு பொன்னுலகு மண்ணுலகு மொக்கத்
தலைத்தலை மயங்கத்தொகும்
சன்னிதி யடைந்தவர்கள் பையுணோய் முற்றும்
தவிர்ந்தக மகிழ்ந்துதவிராக்
கருமன்னு மூழிப் பெரும்பிணியு மாற்றிடுதல்
கண்டனை யிருத்தியானின்
கயரோக முடன்முயற் கறையுந் துடைத்திடக்
கருதிடுதி யேலெம்பிரான்
திருமுன்ன ரள்ளியிடு வெண்சாந்து மற்றைத்
திருச்சாந்து நிற்கவற்றுச்
சித்தாமிர் தத்தடத் தீர்த்தத் துறைக்குழுந்
திவலையொன் றேயமையுமால்
அருவென்ன வுருவென்ன வன்றென்ன நின்றவனொ
டம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (ரு)

முருகனுடன் விளையாடவரின் திங்களாகிய உனக்கு இன்ன இன்ன நன்மைகள் உண்டாகும் என்று கூறியது. இதுதான உபாயம்.

(இ-ள்) தரு மன்னு பொன் உலகும் மண் உலகும் ஒக்க தலை தலை மயங்க தொகும் சன்னிதி அடைந்தவர்கள் பையுள் நோய் முற்றும் தவிர்ந்து அகம் மகிழ்ந்து—கற்பக மரங்கள் பொருந்தும் பொன்னுலகத் தேவரும் மண்ணுலக மக்களும் ஒருசேர இடந் தொறும் இடந்தொறும் கலக்கும்படிக் கூடும் (முருகனது) திரு முன்பைச் சார்ந்தவர்கள் துன்பத்தைத் தரும் பிணிகள் முற்றும் நீங்கி மனம் மகிழ்ந்து;

கரு மன்னும் ஊழி பெரு பிணியும் மாற்றிடுதல் கண்டனை இருத்தி—கருப்பையில் தங்குவதாகிய நெடுங்காலமாக வரும் (பிறவி யாகிய) பெரிய நோயையும் ஒழித்திடுதலைக் (கண்ணால்) கண்டிருக் கின்றாய்;

நின் கய ரோகமுடன் முயல் கறையும் துடைத்திட கருதிடு தியேல்—நின் உடம்பு குறையும் நோயுடன் (உடம்பின் மேலே யுள்ள) முயல் போன்ற கரு நிறத்தையும் போக்குதற்கு நீ எண்ணு வாயானால்; அதற்கு;

எம்பிரான் திரு முன்னர் அள்ளி இடும் வெண் சாந்தும் மற்றை திரு சாந்தும் நிற்க — எமது பெருமானது சன்னிதியின் முன்பு அள்ளிப் பூசிக்கொள்ளும் வெள்ளையான திருநீறும் பிறிதொன்றாகிய அழகிய சாந்தும் இருக்க;

வற்று சித்தாமிர்தம் தட தீர்த்தம் துறை குறு திவலை ஒன்றே அமையும்—வடியாத சித்தாமிர்தம் என்னும் பெரிய தீர்த்தத் துறையிலுள்ள சிறு திவலை ஒன்றே போதும்;

அரு என்ன உரு என்ன அன்று என்ன நின்றவனொடு அம்புலீ ஆட வா — அருவம் உடையவன் என்னவும் உருவம் உடையவன் என்னவும் இரண்டும் இல்லாதவன் என்னவும் நின்ற முருகனொடு அம்புலியே! விளையாட வருக. (எ-று)

முடிபு :— பொன்னுலகும் மண்ணுலகும் ஒக்க மயங்கத் தொகும் சன்னிதி அடைந்தவர்கள் நோய் முற்றும் தவிர்ந்து மகிழ்ந்து தவிரா(த) மன்னும் பெரும்பிணியும் மாற்றிடுதல் கண்டனை இருத்தி ஆல், நின் கயரோகமுடன் கறையும் துடைத்திடக் கருதிடுதியேல் எம்பிரான் முன்னர் அள்ளியிடு சாந்தும் மற்றைச் சாந்தும் நிற்க, வற்றுத தீர்த்தத் துறை திவலை ஒன்றே அமையுமால், நின்றவனொடு கந்தனுடன் அம்புலீ! ஆட வா,

(கு—ரை.) வெண் சாந்து திருக்கோயிலிலுள்ள விபூதிக் குண்டத்திலிருந்து எடுப்பது மற்றைத் திருச்சாந்தென்றது அங்கசந்தானத் தீர்த்தத்தினின்றும மருந்தென்று கருதி எடுக்கப்படும் மண். 'க்ஷயம்' என்னும் வடசொல்லுக்குக் குறைதலென்று பொருள். அது 'கயம்' என்று திரிந்தது.

67. ஒழியாத புவனத் துயிர்க்குயிர தாய்நிற்ப
தொருதெய்வ முண்டெனவெடுத்
துரையா லுணர்த்துவதை யொழியவெவ ரெவர் [கட்கும்
ஊன்கண் ணுளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வமல் லாற்புவியில்
வேறில்லை யென் றுணர்தியாற்
பொழியாத புயறங்கு புவனமுந் திசைமுகப்
புத்தேள் பெரும்புவனமும்
பொன்னுலகு மண்ணுலகு மெவ்வுலகு வேண்டினும்
பொருளன் றிவற்குமற்ற
அழியாத வீடுந் தரக்கடவ னிவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (சா)

(இதுவுமது)

(இ-ள்) ஒழியாத புவனத்து உயிர்க்கு உயிரதாய் நிற்பது ஒரு தெய்வம் உண்டு என எடுத்து உரையால் உணர்த்துவதை ஒழிய—அளவிட முடியாத உலகங்களிலுள்ள உயிர்களுக்கு உயிராய் நிற்பதாகிய ஒரு தெய்வம் உளது என்று ஆராய்ந்து ஆகம அளவையால் அறிவிப்பதைத் தவிர;

எவர் எவர்கட்கும் ஊன் கண் உளம் கண்ணதாம் விழியாக முன் நின்று தண் அளி சுரந்து அவர்கள் வேண்டிய வரம் கொடுப்பான்—ஆகம அளவையை உணரும் கற்றவர்க்கும் அதனை உணரமுடியாத கல்லாதவருக்கும் ஊனால் அமைந்த புறக்கண்ணுனது மனக்கண்ணும் விழியாகும்படி எதிரிலே (உருவமுடையவராய்) நின்று குளிர்ந்த திருவருளைச் சுரந்து அவர்கள் விரும்பிய வரங்களைத் தரும்படி;

மெய் கண்ட தெய்வம் இ தெய்வம் அல்லால் புவியில் வேறு இல்லை என்று உணர்தி—மெய்யாகக் கண்ணிற்கண்ட தெய்வம் இந்த முருகனாகிய தெய்வம் அல்லாமல் உலகத்தில் வேறு தெய்வம் இல்லை என்று உணர்வாயாக;

பொழியாத புயல் தங்கு புவனமும் திசைமுகன் புத்தேள் பெரு புவனமும் பொன் உலகும் மண் உலகும் எ உலகு வேண்டினும் பொருள் அன்று இவற்கு—பொழியாத மேகமாகிய திருமால் தங்கும் வைகுண்ட உலகும் நான்முகனாகிய தேவன் வாழும் சத்தியலோகமும் பொன்னுலகும் நிலவுலகும் (இவையேயன்றி) எவ்வுலகு வேண்டினாலும் (அவை) இம்முருகனுக்குக் கொடுக்க இயலாத பொருளன்று;

மற்ற அழியாத வீடும் தரக்கடவன் இவனுடன் அம்புலீ ஆட வா—இவற்றின் வேறாகிய அழியாத முத்தியையும் தருதற்கு உரிமையுடையவன் (ஆதலால்) இத்தகையோனுடன் அம்புலியே! விளையாட வா. (எ-று.)

முடிபு:— புவனத்து ஆய் நிற்பது (ஆகிய) தெய்வம் உண்டு என எடுத்து உணர்த்துவதை ஒழிய, எவர்கட்கும் ஆம் விழி ஆக நின்று சுரந்து கொடுப்பான் அல்லால், இல்லை என்று உணர்தி; (ஆல் அசை) புயல் தங்கு புவனமும், புத்தேள் புவனமும், பொன்னுலகும், மண்ணுலகும், எவ்வுலகு வேண்டினும் இவற்குப் பொருள் அன்று; மற்ற வீடும் தரக்கடவன்; இவனுடன், கந்தனுடன் அம்புலீ! ஆட வா.

68. நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கியார்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு வென்புநெரியக்

கட்டெனப் பிடியெனக் கொடிறுடைத் தடியெனக்
கணநாதர் கடுகமுடுகிக்
கடல்வாய் திறந்தெனப் பிலவாய் திறந்தலறு
காட்சிநீ காணுயலை

மட்டுடைத் தூறுந் தடங்கமலன் முதலியோர்
வாய்புதைத் தஞ்சிநிற்ப
வருகென் றழைத்திடவும் வாரா திருத்தியால்
மற்றிவன் முனிந்தா லுனக்

கட்டதிக் கினிலுமொரு திக்கிலையெ மையனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (எ)

**இது தண்ட உபாயத்தால் அம்புலியை விளையாட அழைத்தது. வைத்தீசுவரன் கோயிலில் முருகன் திருமுன்பு பேய் ஓட்டப்படும் காட்சி இதனுள் கூறப்படுகின்றது.**

(இ-ள்) நெடு உடல் பை கண் கரு பேய்கள் செம் மயிர் நிரை தூணம் வீக்கி ஆர்த்து—நீண்ட உடம்பையும் பசிய கண்களையும் உடைய கருநிறமான பேய்களின் சிவந்த மயிரை (சன்னிதியின் முன்புள்ள) வரிசையான தூணிலே இருக்கிக்கட்டி;

நிற்கும் குறள் பூதம் ஒன்றினை விடுத்து உடலின் நெடிய பழு என்பு நெரிய கட்டு என பிடி என கொடிறு உடைத்து அடி என கணம் நாதர் கடுக—பூத கணங்கட்குத் தலைவரானவர் (அப்பேய்களின் மேல்) தம்முன் நிற்கும் குறும்பூதம் ஒன்றை விடுத்து அவற்றைக் கட்டென்றும் பிடி என்றும் கன்னத்தை உடைத்து அடி என்றும் கூறி விரைய;

முடுகி கடல் வாய் திறந்து என பிலம் வாய் திறந்து அலறு காட்சி நீ காணுய் அலை—(அப்பேய்கள் ஓடுவதற்கு) விரைந்து கடலானது வாய்திறந்து ஒலித்தாற்போல மலைப்பிளவு போன்ற வாயைத் திறந்து அலறுகின்ற காட்சியை நீ பாராயல்லை; (பார்த்துக்கொண்டுள்ளாய் என்று கருத்து)

மட்டு உடைத்து ஊறும் தட கமலன் முதலியோர் வாய் புதைத்து அஞ்சி நிற்ப—தேனுனது முறுக்கினை உடைத்துக்கொண்டு சுரக்கும் பெரிய தாமரை மலரை உடையவனுகிய (பிரமன்) முதலான தேவரெல்லாம் வாயைக் கையாற் பொத்திக்கொண்டு அச்சமுற்றுத் தன் முன்னே நிற்க;

வருக என்று அழைத்திடவும் வாராது இருத்தி—(அவரையெல்லாம் அழையாமல் உன்னை) வருக என்று அழைத்திடவும் (நீ) வாராமல் இருக்கின்றனை ; (ஆல்-அசை)

மற்று இவன் முனிந்தால் உனக்கு அட்ட திக்கினிலும் ஒரு திக்கிலை எம் ஐயனுடன் அம்புலீ ஆட வா—மேலும் இவன் சினந்தால் உனக்கு எட்டுத் திசையிலும் ஒரு புகல் இல்லை எமது ஐயனாகிய முருகனுடன் அம்புலீ ! ஆடவா. (எ-று.)

முடிபு :— கணநாதர் கரும்பேய்கள் செம்மயிரைத் தூணத்தில் வீக்கி ஆர்த்து பூதம் ஒன்றினை விடுத்து நெரிய கட்டென பிடியென உடைத்து அடி யென கடுக, (அவை) முடுகி என அலறும் காட்சி நீ காணுயலை ! கமலன் முதலியோர் புதைத்து அஞ்சி நிற்ப, (உன்னை) வருக என்று அழைத்திடவும் வாராது இருத்தி, இவன் முனிந்தால் உனக்குத் திக்கில்லை (ஆகையால்) எம் ஐயனுடன், கந்தனுடன் அம்புலீ ! ஆட வா.

(கு—ரை) 'காணுயல்லை' என்னுஞ்சொல் 'காணுயலை' என்று ஆயிற்று.

69\. குன்றைத் திறந்திட்ட குடுமிவேல் சூருயிர்
குடித்திட விடுத்துநின்றான்
குண்டிகைக் கள்வனைக் குடுமித் தலைப்பசுங்
குருதிபொங் கப்புடைத்தான்

இன்றைக் குழந்தையென் றெண்ணாது குலிசன்முதல்
எண்மரும் பிறருமொருஞான்
றெதிர்நின் றுடற்றியவர் பட்டபா டறியா
திருத்தியலை யதுகிடக்க

முன்றக்கன் வேள்விக் களங்கொலைக் களமென்ன
முடியமரர் மொத்துண்டநாள்
முழுமதிக் கடவுணீ யவமதிப் புண்டது
மொழிந்திடக் கடவதன்றால்

அன்றைக் கணக்கின்றும் வந்திருக் கின்றதினி
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (அ)

(இதுவும் தண்டோபாயம்)

(இ-ள்) குன்றை திறந்திட்ட குடுமி வேல் சூர் உயிர் குடித்திட விடுத்து நின்ருன்—கிரவுஞ்ச மலையைப் பிளந்திட்ட நுனியையுடைய வேலினைச் சூரபன்மன் உயிரைக் குடித்திட ஏவி நின்ருன்;

குண்டிகை கள்வனை குடுமி தலை பசு குருதி பொங்க புடைத்தான்—நீர்க்கரகம் ஏந்திய வஞ்சகனுகிய பிரமனைக் குடுமியோடு கூடிய தலையில் பச்சை இரத்தம் பொங்கக் குட்டினுன்;

இன்றை குழந்தை என்று எண்ணுது குலிசன் முதல் எண்மரும் பிறரும் ஒரு ஞான்று எதிர் நின்று உடற்றி அவர் பட்ட பாடு அறியாதிருத்தி அல்லை—இப்பொழுது பிறந்த சிறு குழந்தை என்று கருதாமல் வச்சிரப்படையையுடைய இந்திரன் முதலான (திசைக் காவலர்) எண்மரும் பிறரும் ஒரு காலத்திலே, எதிர் நின்று போர் புரிந்து அத்தேவர் அடைந்த துன்ப நிலையை உணராமலிருப்பையல்லை;

அது கிடக்க முன் தக்கன் வேள்வி களம் கொலை களம் என்ன முடி அமரா மொத்துண்ட நாள் முழு மதி கடவுள் நீ அவமதிப்பு உண்டது மொழிந்திடக் கடவது அன்ருல்—அது போக, முற்காலத்திலே, தக்கன் யாகசாலையானது கொலைக்களம் என்று சொல்லும்படி முடியையுடைய தேவரெல்லாம் (வீரபத்திரராலும் பூத கணங்களாலும்) அடியுண்ட காலத்திலே முழுத் திங்களாகிய கடவுளே! நீ அவமானப்பட்டதை (இப்பொழுது) சொல்லவேண்டுவதன்று;

அன்றை கணக்கு இன்றும் வந்திருக்கின்றது இனி அம்புலீ ஆட வா—(நீ வாராவிட்டால்) அன்றைய முறை இன்றும் வந்துள்ளது (ஆதலால்) இப்பொழுது அம்புலியே! விளையாட வருக. (எ-று.)

முடிபு:— திறந்திட்ட வேலை குடித்திட விடுத்து நின்ருன், கள்வனை பொங்க புடைத்தான், என்று எண்ணுது குலிசன் முதலானவர் நின்று உடற்றி பட்டபாடு அறியாதிருத்தி அல்லை, அது கிடக்க, என்ன, அமரர் மொத்துண்ட நாள், கடவுள் நீ அவமதிப்புண்டது மொழிந்திடக்கடவது அன்று, அன்றைக் கணக்கு இன்றும் வந்திருக்கின்றது இனி அம்புலீ! ஆட வா.

(கு-ரை) கள்வன்—இங்கே பிரமன்; பிரணவப் பொருள் உணராதிருப்பவும் உணர்ந்தவனுகத் தன்னைக் கருதிச் செருக்குக் கொண்டமையால் 'கள்வன்" எனப்பட்டான்.

70. தள்ளும் பவக்கட லூழக்குமெனை முத்தித்
தடங்கரை விடுப்பவனுனைத்
தலையளிப் பான்வர வழைப்பவும் வராவிடிற்
றண்ணளி சுரந்துகருணை

வெள்ளங் கொழிக்குங் கடைக்கண் சிவப்பவிவன்
வெகுளாது விடினுமழுது
விழிசிவப் பக்காணி னிரவிபகை சாய்த்தவிள
வீரன் பொறுப்பானலன்
கள்ளம் பழுத்தகட் கடைசியர் சிறுர்திரைக்
காவிரித் தண்டுறைதொறும்
கதிர்நித் திலங்குவி மணற்குன்ற மேறியக்
கலைமதிக் கலசவமுதை
அள்ளுந் தடம்பணைச் சோணுட னிவனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. (கூ)

(இதுவுமது)

(இ-ள்) தள்ளும் பவம் கடல் உழக்கும் எனை முத்தி தடம் கரை விடுப்பவன்—தள்ளப்படும் பிறவிக் கடலில் (வீழ்ந்து) வருந்தும் என்னை வீடுபேருகிய அகன்ற கரையில் சேர்ப்பவனுகிய (முருகன்);

உனை தலை அளிப்பான் வர அழைப்பவும்—(அம்புலியாகிய) உன்னைக் காப்பதற்காக வரும்படி அழைக்கவும்;

வராவிடின் தண் அளி சுரந்து கருணை வெள்ளம் கொழிக்கும் கடைக்கண் சிவப்ப இவன் வெகுளாது விடினும்—(நீ) வராவிட்டால் குளிர்ந்த இரக்கத்தைச் செய்து அருளாகிய வெள்ளத்தைப் பெருக்குகின்ற கடைக்கண் சிவக்கும்படி இவன் சினவாது விட்டாலும்;

அழுது விழி சிவப்ப காணில் இரவி பகை சாய்த்த இள வீரன் பொறுப்பான் அலன்—அழுது கண் சிவப்பக் கண்டால் ஞாயிறுக்குப் பகைவனுகிய (பானுகோபன் என்னும் அசுரனை) அழித்த இளைய வீரனுகிய (வீரவாகு தேவன்) மனம் பொறுப்பான் அல்லன்;

கள்ளம் பழுத்த கண் கடைசியர் சிறுர் திரை காவிரி தண் துறை தொறும் கதிர் நித்திலம் குவி மணல் குன்றம் ஏறி அ கலை மதி கலசம் அமுதை அள்ளும் தட பணை சோணுடு—களவுத் தன்மை முதிர்ந்த விழியையுடைய உழத்தியரது சிறுவர் அலையையுடைய காவிரி யாற்றின் குளிர்ந்த துறைகள் தோறும் ஒளிபெற்ற முத்துகளோடு குவிந்துள்ள மணற் குன்றிலே ஏறி, அந்தக் கலைத் திங்களாகிய குடத்தில் உள்ள அமிழ்தத்தை அள்ளுதற்கிடமான பெரிய வயல் சூழ்ந்த சோழ நாடு;

சோணுடன் இவனுடன் அம்புலீ ஆடவா—அத்தகைய சோழ நாட்டை யுடையவனுகிய முருகனுடன் அம்புலியே! விளையாட வா. (எ-று.)

ஸ்ரீடிபு :— உழக்கும் எனை விடுப்பவன் உனைத் தலை யளிப்பான் வரவழைப்பவும் (நீ) வராவிடில் சுரந்து கொழிக்கும் கண் சிவப்ப வெகுளாது விடினும், அழுது சிவப்ப காணில், சாய்த்த வீரன் பொறுபபான் அலன், சிறுர் காவிரித் துறை தொறும் மணற்குன்றம் ஏறி மதியாகிய கலச அமுதை அள்ளும் சோணுடனுகிய இவனுடன், கந்தனுடன், அம்புலீ! ஆட வா.

71\. தன்னொத்த தெய்வச் சிறுருமிள வீரரும்
தாணிழற் கீழ்நிற்பவிச்
சகதண்ட மண்டல மடுக்கழியு நாளமரர்
தமையழக் காண்பவனிவன்
நின்னைப் பொருட்படுத் தொருவிரற் றலைசுட்டி
நீள்கழற் ருளுதைந்து
நெடுமலர்க் கண்பிசைந் தழுதழு தழைத்தனன்
நினக்கிதில் வியப்பிலைகாண்
பின்னற் றிரைச்சுர நதித்தண் டுறைத்தேவர்
பேதைக் குழாங்களென்னப்
பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
பெருந்தண் டுறைச்சிறைவிரித்
தன்னக் குழாந்திளைத் தாடுசோ ணாடனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி த்லமையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே.

(இதுவுமது)

(இ-ள்) தன் ஒத்த தெய்வம் சிறுரும் இள வீரரும் தாள் நிழல் கீழ் நிற்ப இ சகத் அண்டம் மண்டலம் அடுக்கு அழியும் நாள் அமரர் தமை அழ காண்பவன் இவன்—தன்னை ஒத்த தெய்வச் சிறுவரும் இளைய ஒன்பான் வீரரும் திருவடி நிழற்கீழ் நிற்ப, இந்நிலவுலகமும் ஏனைய அண்டமாகிய கோளங்களும் தம்நிலை அழியும் அழிவுக் காலத்திலே தேவர் தமை அழச் செய்பவனுகிய இம் முருகன் ;

நின்னை பொருள் படுத்து ஒரு விரல் தலை சுட்டி நீள் கழல் தாள் உதைந்து நெடு மலர் கண் பிசைந்து அழுது அழுது அழைத்தனன்—அம்புலியாகிய உன்னைப் பொருள்செய்து ஒரு விரல் நுனியால் உன்னைக் குறித்துக் காட்டி நீண்ட கழலணிந்த கால்களை உந்தி நீண்ட மலர்போன்ற விழிகளைப் பிசைந்து அழுது அழுது அழைத்தான் ;

நினக்கு இதில் வியப்பு இல்லை காண்—உனக்கு இவ்வாறு அழைத்ததில் வியப்புக்கு இடமில்லை என்று உணர் ;

பின்னல் திரை சுர நதி தண் துறை தேவர் பேதை குழாங்கள் என்ன பெருகும் தட புனல் காவிரி பூ விரி பெரு தண் துறை சிறை விரித்து அன்னம் குழாம் திளைத்து ஆடு சோணாடனுடன் அம்புலீ ஆட வருக—"பின்னல் போன்ற அலைகளையுடைய தெய்வ உலகத்து ஆற்றின் குளிர்ந்த துறையில் தேவச்சிறுமியர் கூட்டம் படிந்தாடுதலைப் போல" பெருகும் புனலையுடைய தடங்காவிரியின் பூவிரியும் பெருந் தண் துறையிலே, அன்னக் கூட்டம் திளைத்தாடுகின்ற சோழ நாட்டையுடைய முருகனுடன் அம்புலீ! ஆட வா. (எ—று.)

முடிபு :— சிறுரும் வீரரும் தாட்கீழ் நிற்ப, இச்சகத்தும் மண்டலமும் அழியும் நாள், அமரரை அழக்காண்பவனாகிய இவன், நின்னைப் பொருட்படுத்து சுட்டி உதைந்து பிசைந்து அழுது அழுது அழைத்தனன், நினக்கு இதில் வியப்பில்லை காண், "சுர நதித் தண்டுறையில் தேவர் பேதைக் குழாங்கள் என்ன" காவிரித் துறையில் அன்னக்குழாம் திளைத்து ஆடும் சோணாடனுடன், கந்தனுடன், அம்புலீ! ஆட வா.

(கு—ரை) பிறரை ஒரு காலத்தே அழச்செய்பவன் இப்பொழுது தான் அழுது, அழுதலையே கருவியாக நின்னை அழைக்கின்றான்; இது கால விசேடமாகையால் வியப்பில்லை என்றது. தன்னொத்த தெய்வச்சிறுர் என்றது விநாயகர், வீரபத்திரர் என்னும் சிவ குமாரர்களை.

---

திறமை+ஐ = திறவீட

## அ. சிற்றிற் பருவம்

72. குறுமென் னடையு நெடுவெணிலாக்
கோட்டு நகையும் வாட்டடங்கண்
குளிர முகந்துண் டொளிர்சுட்டிக்
குஞ்சி திருத்தி நறுங்குதலை

முறுகு நறைத்தேன் கனிபவள
முத்துண் டுச்சி மோந்துகொண்டுன்
முகமுந் துடைத்து விளையாட
முன்றிற் புறத்துப் பொன்றதும்பி

இறுகும் புளகக் கும்பமுலை
எம்பி ராட்டி விடுத்ததுமற்
றிளையார் மறுக மறுகுதொறும்
இடுக்கண் செயற்கோ வெந்தாய்நின்

சிறுகிண் கிணிச்செஞ் சீறடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (சு)

**உமாதேவியார் உனக்கு அணியணிந்து விளையாட விட்டது எங்கள் சிற்றிலை அழித்தற்கோ என்று கூறி, சிற்றிலைச் சிதையேல் என்று சிறுமியர் வேண்டியது.**

(இ-ள்) குறு மெல் நடையும் நெடு வெள் நிலா கோட்டு நகையும் வாள் தட கண் குளிர முகந்து உண்டு—குறுக நடக்கும் மெல்லிய நடையினையும், நெடுந்தூரம் வெண்ணிலவைச் செய்கின்ற சிரிப்பினையும், ஒளியையுடைய பெரிய கண் குளிரும்படி (அக்கண்ணால்) அள்ளி உண்டு;

ஒளிர் சுட்டி குஞ்சி திருத்தி—விளங்கும் சுட்டி என்னும் அணியுடன் கூடிய மயிர்முடியைத் திருத்தி;

நறு குதலை முறுகு நறை தேன் கனி பவளம் முத்துண்டு—தூய மழலைச் சொல்லும், முதிர்ந்த மணமுள்ள தேனும், சுரக்கும் (வாயாகிய) பவளத்தின் முத்தங்கொண்டு;

உச்சி மோந்து கொண்டு உன் முகமும் துடைத்து—;

பொன் ததும்பி இறுகும் புளகம் கும்பம் முலை எம்பிராட்டி விளையாட முன்றில் புறத்து விடுத்தது—பொன் நிறம் நிறைந்து இறுகியுள்ளதும் பூரிப்புடையதும் குடம் போன்றதும் ஆகிய நகிலையுடைய எமது பெருமாட்டியார் (உமாதேவியார்) வீட்டு முகப்பின் புறத்தே (உன்னை) விளையாட வரவிட்டது;

இளையார் மறுக மறுகு தொறும் இடுக்கண் செயற்கோ—இளைய பெண்கள் வருந்த வீதிதொறும் துன்பம் செய்தற்குத் தானோ;

எந்தாய் நின் சிறு கிண்கிணி செம் சிறு அடியால் சிறியேம் சிற்றில் சிதையேல் செந்நெல் பழனம் புள்ளூரா சிறியேம் சிற்றில் சிதையேல்—எந்தையே! உனது சிறிய கிண் கிணியணிந்த சிவந்த சிறய கால்களால், சிறியேங்களுடைய சிறிய வீட்டினை அழியற்க; செந்நெல் வயல் சூழ்ந்த புள்ளூரனே! சிறியேங்களுடைய சிறிய வீட்டினை அழியற்க. (எ-று.)

முடிபு :— எம்பிராட்டி (உனது) நடையும் நகையும் கண் குளிர முகந்துண்டு, குஞ்சி திருந்தி, குதலையும் தேனும் கனியும் பவளத்தின் முத்துண்டு, உச்சி மோந்துகொண்டு, உன் முகமும் துடைத்து, முன்றிற் புறத்து விளையாட விடுத்தது, மறுகு தொறும் இளையார் மறுக இடுக்கண் செயற்கோ? எந்தாய்! புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல்.

73. கொழுநாண் மலர்க்கற் பகமுநறைக்
குரவு நாறு நறுங்குஞ்சிக்
கோமான் மகனே நங்கள்குலக்
கொழுந்தே யென்று குறையிரந்து

தொழுவா னவர்த முடிசூட்டும்
சோதி முடியிற் றுகளெழநின்
துணைத்தாள் வண்டற் றுறைப்புழுதித்
தூளி படினும் படுகசுடர்க்

கழுவா மணியு நிலவுவிரி
கதிர்நித் திலமு முமையம்மை
கண்ணி லுறுத்த வடிகேணின்
காலி லுறுத்தல் கடனன்றாற்

செழுநான் மறையின் பெருஞ்செல்வச்
செருக்கே சிற்றில் சிதையேலே
செற்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (உ)

**சிற்றிலை அழித்தால் திருவடியில் புழுதிபடும், மணி முத்து முதலியவை காலில் உறுத்தும் என்று கூறி அழியேல் என்றது.**

(இ-ள்) கொழு நாள் மலர் கற்பகமும் நறை குரவும் நாறும் நறு குஞ்சி கோமான் மகனே நங்கள் குலம் கொழுந்தே என்று—செழுமையான அன்றலர்ந்த கற்பக மலரும் மணமுள்ள குறிஞ்சியின் (சிவந்த மலரும்) மணக்கின்ற மணமுள்ள மயிர்முடியையுடைய கோமானுகிய மகனே! நமது தேவசாதிக்குக் கொழுந்து போன்றவனே! என்று சொல்லி;

குறை இரந்து தொழு வானவர் தம் முடி சூட்டும் சோதி முடியில் துகள் எழ நின் துணை தாள் வண்டல் துறை புழுதி தூளி படினும் படுக—தம் குறைகளைக் கூறி இரந்து வணங்குகின்ற தேவர் தம் தலையில் அணியப்பெற்றுள்ள ஒளியையுடைய முடி என்னும் அணியில் புழுதி தோன்றும்படி உனது இரண்டு திருவடிகள், விளையாடுமிடத்திலே புழுதியாகிய தூளி பட்டாலும் படுக (அதனுல் ஒன்றும் ஏதம் இல்லை);

சுடர் கழுவா மணியும் நிலவு விரி கதிர் நித்திலமும் உமை அம்மை கண்ணில் உறுத்த அடிகேள் நின் காலில் உறுத்தல் கடன் அன்று ஆல்—(வண்டற்றுறையில் சிற்றிலில் உள்ள) ஒளியையுடைய தூய்மை செய்யப்பெருத மணிகளும் நிலவினைத் தோற்றும் ஒளியுள்ள முத்துக்களும் உமையாகிய தாயின் விழியில் வருத்தத்தைச் செய்யும்படி சுவாமியே! நினது திருவடிகளில் (பட்டு) உறுத்துதல் முறைமை அன்று ஆதலால்;

செழு நால் மறையின் பெரு செல்வம் செருக்கே சிறு இல் சிதை யேல்—செழிய நான்கு வேதத்தின் பெரும் பொருள் உணர்ந்த மேம்பாட்டினை யுடையவனே! எங்களது சிறிய புழுதி வீட்டினைச் சிதையற்க. (எ–று.)

முடிபு :— கற்பகமும் குரவும் நாறும் குஞ்சியையுடைய வனே! கோமான் ஆகிய மகனே! கொழுந்தே! என்று இரந்து தொழு வானவர் தம் முடியில் சூட்டும் முடியில் துகள் எழ, நின் தாளில் தூளிபடினும் படுக; மணியும் முத்தும் அம்மை கண் ணில் உறுத்த நின் காலில் உறுத்தல் கடன் அன்றால்; செருக்கே! புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல்.

(கு–ரை) 'குரவக:' என்னுஞ் சொல் சிவந்த மலர்களையுடைய குறிஞ்சியையும், அதே மலர்களையுடைய முட் குறிஞ்சியையும் குறிக் கும் என்பதை அமர கோசத்தால் அறிக. 'கோமான் மகனே' என்ற சொற்றொடரை இரு பெயரொட்டாகக் கொண்டு, 'பெருமை யிற் சிறந்தோனாகிய குழந்தையே' என்று பொருள் உரைத்துக் கொள்க. இங்ஙனம் கொள்ளாமல் 'கோமான்' என்பதைச் சிவ பெருமானாகக் கொண்டு 'கோமானுக்கு மகனே' என்று பொருள் கொள்ளின், கோமானுடன் குஞ்சியியையாமை காண்க. 'முடி சூட் டும் சோதி' என்று பிரித்து 'வானவர் தம் முடியில் சூட்டிக்கொள் ளும் ஒளி மயமான சிவபெருமான்' என்று சிலர் உரை கூறுவர். பொருந்து மேற்கொள்க. முருகன் திருவடியிற் பட்ட புழுதியானது அவனை வணங்கும் தேவர் தம் மகுடத்திலும் படும்; அங்ஙனம் பட் டால் அதனைச் சிறந்த பேறாக அவர் கொள்வராதலின், 'தூளிபடி னும் படுக' என்றார். முருகன் திருவடியில் மணியும், நித்திலமும் சிற்றில் அழிக்கும் பொழுது பட்டு, உறுத்தின், அதனைக் காணச் சகிக்காமல் உமையம்மையார் மிகவும் வருந்துவராதலின், 'உமை யம்மை கண்ணிலுறுத்த அடிகேள் நின் காலில் உறுத்தல் கடன் அன்றால்' என்றார்.

74. வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டன் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பா னடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே

கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியே மனைமுன்றிற்
குவியா நின்ற மணிக்குவையைக்
குருகு பெயர்க்குன் றமுமன்றூற்

சுழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வால் வளைத்தெண் டிரைக்கரத்தாற்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி னோடுங் கலந்தூட்டிச்
செழிக்குந் தடங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ங)

**எங்கள் சிற்றிலும் மணிக்குவையும் நீ அழித்த பொருள் போன்றதல்ல ஆதலால் அழியற்க என்று வேண்டிக்கொண்டது.**

(இ-ள்) வழிக்கு புறம்பு ஆய் யாம் இழைத்த வண்டல் மனை அ அசுரர் ஈசன் வான் கூட்டு உண்பான் நடு கடலில் வகுத்த நகர் அன்று—நடக்கும் வழிக்கு ஒதுக்காக யாங்கள் செய்த மண் சிறு வீடானது அந்த அசுரர்களுக்கெல்லாம் தலைவனாகிய சூரபதுமன் வானுலகத்தைக் கொள்ளை கொண்டு உண்ணவேண்டி நடுக்கடலில் செய்துகொண்ட வீரமகேந்திரம் என்னும் நகரம் அன்று;

இகழாமே கொழிக்கும் சிறு முற்றிலில் வாரி கொடு வந்து அடியேம் மனை முன்றில் குவியா நின்ற மணி குவை அ குருகு பெயர் குன்றமும் அன்று ஆல்—சோர்வு படாமல் தெள்ளுதற்குப் பயன் படும் சிறிய கிளிஞ்சிலாகிய சுளகில் வாரிக்கொண்டு வந்து அடியேங் கள் வீட்டின் முகப்பில் குவிக்கின்ற மணிக்குவியல் அப்பேர்ப்பட்ட கிரவுஞ்சமலையும் அன்று ஆகையால்;

சுழி குண்டு அகழி வாய் மடுப்ப—சுழியையும் ஆழத்தையும் உடையதும் (நில உலகத்திற்கு) அகழிபோன்றதும் ஆகிய கடல் தன் வாயினிடத்தே உண்ணும்படி (கடலிடத்தே பொருந்த என்று கருத்து);

சுடர் வால் வளை தெண் திரை கரத்தால்—ஒளியையும் வெண் மையையும் உடைய வளையலணிந்த அலையாகிய கையினால் (சங்கினை யுடைய அலையால் என்று கருத்து);

சுரபி சொரி பால் மடை அடைத்த சோற்றினோடும் கலந்து ஊட்டி செழிக்கும் தட காவிரி நாடா—பசுக்கள் பொழியும் பாலினை, வயல் மடையை உழவர் அடைத்த சோற்றுத் திரளோடு கலந்து உண்ணச் செய்து செழிக்கும் பெரிய காவிரியாறு பாயும் நாடனே. (எ-று)

முடிபு:— யாம் புறம்பாய் இழைத்த மனை அசுரேசன் கூட்டுண்பான் வகுத்த நகர் அன்று; இகழாமே கொழிக்கும் முற்றிலில் வாரிக் கொடுவந்து குவியா நின்ற மணிக்குவை குருகு

பெயர்க் குன்றமும் அன்று ஆல்: (ஆகையால்) அகழி வாய் மடுப்ப திரைக் கரத்தால் பாலேச் சோற்றிஞேடு கலந்தூட்டிச் செழிக்கும் காவிரி நாடனே! புள்ளூரனே! சிறியேம் சிற்றில் சிதையேல்.

(கு—ரை) உலகமெலாம் வயல் மடையைச் சேற்ருல் அடைத்தால் 'சோழவள நாடு சோறுடைத்து' என்று புகழப்பட்ட சோழ நாடு அம்மடையைச் சோற்ருல் அடைக்கின்றது. காவிரி என்னும் பெண் தன் வளேக்கரத்தால் பாலும் சோறும் கலந்து கடல் என்னும் கணவனே உண்ணும்படி ஊட்டும் என்ற நயம் காண்க. சோறு—தாழையின் சோறுமாம். செழிக்கச் செய்யும் காவிரி நாடனுயிருந்தும் எங்கள் சிற்றிலே அழிக்கலாமோ என்று கருத்து. அக்குருகு பெயர்க் குன்றம் என்றதில் அகரச்சுட்டு சிறப்பை யுணர்த்தி நிற்கின்றது.

75. மூரிக் களிறோ மழவிடையோ
முடுகிற் றெனப்பார்த் துழியுனது
முகத்தி னழகெம் வடிக்கண்ணுல்
மொண்டுண் டனம்யா மெனவுமிகப்
பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயத்தைக் கண்ணேறு
பட்டே மெனவு மடிகள்பகை
பாராட் டுவதோர் பண்பன்ருல்
வேரிக் கொழுந்தாற் றிளம்பாளே
விரிபூங் கமுகும் பால்பாயும்
வேழக் கரும்பு மிருட்பிழம்பை
விழுங்கிக் கக்குஞ் சுடர்ப்பருதித்
தேருக் கெழில்செய் சோணுடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (சு)

**யாங்கள் நின்னேப் பார்த்ததால் குற்றம் விளேந்ததென்று கருதி பகை பாராட்டிச் சிற்றில் சிதையற்க என்றது.**

(இ—ள்) மூரி களிறோ மழ விடையோ முடுகிற்று என பார்த்துழி—வலிய ஆண் யானேயோ இளேய காளேயோ விரைந்து வந்ததென்று கருதி (நீ வந்ததை யாங்கள்) பார்த்த பொழுது;

உனது முகத்தின் அழகு எம் வடி கண்ணுல் மொண்டு உண்டனம் யாம் எனவும் மிக பாரித்து ஓங்கி பூரித்த பை பொன் புயத்தை கண் ஏறு பட்டேம் எனவும்—உனது முகத்தின் அழகை எமது கூரிய விழியால் முகந்து யாம் நுகர்ந்தோம் என்றும் மிகவும்

பெருத்து உயர்ந்து எழுச்சியையுடையதான பசிய பொன் நிறம் பெற்றதோள்களைக் கண்ணேறு படச்செய்தோம் என்றும் எண்ணி;

அடிகள் பகை பாராட்டுவது ஓர் பண்பு அன்று ஆல்—அடிகளே (எங்கள் மீது) பகைமையை வளர்ப்பது ஓர் நற்பண்பன்று. ஆகையால்; ('ஆல்' அசையுமாம்)

வேரி கொழு தாற்று இள பாளை விரி பூ கமுகும் பால் பாயும் வேழம் கரும்பும் இருள் பிழம்பை விழுங்கி கக்கும் சுடர் பருதி தேருக்கு எழில் செய் சோணாடா—மணமுள்ள செழிய தாறுகளையுடைய இளைய பாளை விரிகின்ற பொலிவுள்ள கமுக மரமும் சாறுபாயும் இரசதாளி என்கிற வேழக்கரும்பும் இருட் கூட்டத்தைத் தனக்குள் அடக்கி சுடரை வெளிப்படுத்தும் ஞாயிற்றின் தேருக்கு அழகைச் செய்யும் சோழ நாடனே. (எ–று.)

முடிபு :— களிறே, விடையோ முடுகிற்றென (யாங்கள்) பார்த்துழி, உனது முகத்தின் அழகை எம் கண்ணால் யாம் மொண்டு உண்டனம் எனவும், பாரித்து ஓங்கி பூரித்த புயத்தைக் கண்ணேறு பட்டேம் எனவும், அடிகள்! பகை பாராட்டுவது பண்பு அன்று ஆல்; கமுகும், கரும்பும் இருளை விழுங்கிச் சுடரைக் கக்கும் தேருக்கு எழில் செய் சோணாடா! புள்ளூரா சிற்றில் சிதையேல்.

76. பொன்னங் கொடிபோ னுடங்குமிடைப்
புத்தேண் மகளிர் விளையாடப்
புனைமா ளிகையுஞ் சூளிகையும்
புதுக்கிக் கொடுத்தாய் பொதுஞானம்

மெய்ந்நின் றவருள் விழிப்பாவை
விளையாட் டயர வழியாத
வீடுங் கொடுத்தா யெம்மனையும்
விடுத்துச் சென்றான் மிகையுண்டோ

பின்னுந் திரைத்தீம் புனற்கங்கைப்
பேராற் றாற்று நறைக்கோட்டுப்
பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப்
பிறழும் வாளைப் பகடுதைத்த

தென்னம் பழமவீழ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (ரு)

**தேவ மகளிர் விளையாட மாளிகையும் சூளிகையும் புதுக்கித்தந்து மெய்ந்நின்றவர் விழிப்பாவை விளையாட வீடும் கொடுத்த நீ எம்மனையை அழிப்பது நன்றன்று என்றது.**

(இ-ள்) பொன் அம் கொடி போல் நுடங்கும் இடை புத்தேள் மகளிர் விளையாட புனை மாளிகையும் சூளிகையும் புதுக்கி கொடுத்தாய் —பொன்னிறமான அழகிய கொடிபோல அசையும் இடையையுடைய தேவ மகளிர் விளையாடுவதற்கு அழகிய மாளிகையையும் உச்சி அறையையும் புதுப்பித்துத் தந்தாய்;

பொது ஞானம் மெய் நின்றவர் உள் விழி பாவை விளையாட்டு அயர அழியாத வீடும் கொடுத்தாய் — (பதி பசு பாசம் என்னும் மூன்றைப்பற்றி அறிகின்ற) பொதுவாகிய அறிவை உடையராய்ப் பின் உண்மைப் பொருளிலே நின்ற அறிஞரது அகக்கண்ணிலே உள்ள (சிற்சத்தியாகிய) பாவை விளையாட்டைச் செய்வதற்கு இடமாக அழியாத வீட்டினைக் கொடுத்தாய்;

எம் மனையும் விடுத்து சென்றால் மிகை உண்டோ—(யாங்கள் விளையாடுகின்ற) எமது சிற்றிலையும் அழிக்காமல் விட்டுப்போனால் (அதனால்) குற்றம் உண்டோ;

பின்னும் திரை தீம் புனல் கங்கை பேர் ஆற்று ஊற்று நரை கோடு பெரு கற்பகத்தின் கழுத்து ஒடிய பிறழும் வாளை பகடு உதைத்த தென்னம் பழம் வீழ் சோணாடா—பின்னலிடும் அலைகளையுடைய இனிய நீர் நிறைந்த ஆகாய கங்கையின் பேராற்றங் கரையில், சுரக்கும் தேனையும் கிளைகளையுமுடைய பெரிய கற்பக மரத்தின் கழுத்து ஒடியும் வண்ணம், பிறழும் ஆண் வாளையால் மோதப்பட்ட தென்னையின் முதிர்ந்த காய்கள் விழுவதற்கிடமான சோழ நாடனே! (எ-று.) (கற்பக மரத்தைவிட தென்னை மரம் உயர்ந்துள்ளதென்று கருத்து.)

முடிபு:— புத்தேள் மகளிர் விளையாட மாளிகையும் சூளிகையும் புதுக்கிக் கொடுத்தாய், மெய்ந்நின்றவர் உள் விழிப் பாவை விளையாட்டு அயர அழியாத வீடும் கொடுத்தாய், எம் மனையும் விடுத்துச்சென்றால் (அதனால்) மிகை உண்டோ? வாளைப்பகடு உதைத்த தென்னம்பழமானது கங்கைப்பேராற்றுக் கற்பகத்தின் கழுத்தொடிய வீழ் சோணாடனே! புள்ளூரனே! சிறியேம் சிற்றில் சிதையேல்.

77. கானக் குறப்பெண் குடியிருந்த
கன்னிப் புனத்துத் தினைமாவும்
கமழ்தேன் றெளிவு முண்டுசுவை
கண்டா யென்றே மதுவல்லாய்

மீனத் தடங்க ணவண்மிச்சில்
மிசைந்திட் டதுவு நசைமிக்கு
விரைத்தீங் குமுதத் தமுதடிகள்
விருந்தா டியதும் விண்டோமோ

கூனற் பிறையின் கோடுரிஞ்சும்
கொடிமா டத்து வெயில்விரிக்கும்
குருமா மணியாற் சுரநதியிற்
கொழுந்தா மரைகண் முறுக்குடைந்து

தேனக் கலருஞ் சோணுடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (சா)

**சிறுமியர் முருகனை நோக்கி 'உன்னைக் குறித்துச் சொல்லவேண்டுவதைச் சொன்னேம் சொல்லத் தகாதவற்றைச் சொற்றிலம் ஆகையால் எம் சிற்றில் சிதையற்க, என்றது.**

(இ-ள்) கானம் குறம் பெண் குடியிருந்த கன்னி புனத்து தினை மாவும் கமழ் தேன் தெளிவும் உண்டு சுவை கண்டாய் என்றேம்—காட்டில் வாழும் குறவர் தம் பெண் குடியிருந்த காவலை யுடைய புனத்திலே தினை மாவையும் மணக்கும் தேன் தெளிவையும் உண்டு சுவை கண்டாய் என்று சொன்னேம்;

அது அல்லால் மீனம் தட கண் அவள் மிச்சில் மிசைந்திட் டதுவும் நசை மிக்கு விரை தீம் குமுதத்து அமுது அடிகள் விருந்து ஆடியதும் விண்டோமோ—அவ்வொருசொல்லையன்றி, மீன் போலும் பெருங் கண்ணையுடைய அவள் எச்சிலை உண்டதையும், விருப்பம் மிகுந்து மணமுள்ள இனிய (வாயாகிய) குமுத மலரின் அமிழ்தத்தை அடிகளாகிய தாங்கள் புதிதாய் நுகர்ந்து கொண்டாடி யதையும் வெளிப்படச் சொன்னேமோ?;

கூனல் பிறையின் கோடு உரிஞ்சும் கொடி மாடத்து வெயில் விரிக்கும் குரு மா மணியால் சுரர் நதியின் கொழு தாமரைகள் முறுக்கு உடைந்து தேன் நக்கு அலரும் சோணுடா—வளைந்த பிறையின் நுனி உராயும் கொடி, அக்கொடி கட்டிய மாடம், அம் மாடத்திலே வெயில் விரிக்கும் நிறமுள்ள பெரிய மணியால் தேவரது யாருகிய ஆகாய கங்கையில் செழிய தாமரைகள் கட்டவிழ்ந்து தேன் விளங்க மலர்வதற்கிடமான சோணுடனே. (எ-று.)

**முடிபு:** குறப்பெண் குடியிருந்த புனத்திலே தினை மாவும், தேன் தெளிவும் உண்டு, சுவை கண்டாய் என்றேம், அது அல்லால், அவள் மிச்சில் மிசைந்திட்டதுவும், குமுதத்து அமுது

விருந்தாடியதும் விண்டோமோ? மாடத்து மணியால் சுர நதியில் தாமரைகள் முறுக்குடைந்து தேன் நக்கு அலரும் சோணாடா! புள்ளூரா! சிறியேம் சிற்றில் சிதையேல்.

78. பிள்ளை மதிச்செஞ் சடைச்செருகும்
பெருமா னுர்க்கு முலகேழும்
பெற்ற தாய்க்கு நீயருமைப்
பிள்ளை யெனினெம் பேராய

வெள்ள மமைத்த சிறுசோறு
வேண்டி னிடுகே மலதெளியேம்
விளையா டிடத்துச் சிறுகுறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ

கள்ள விழிச்சூ ரரமகளிர்
காமன் கொடியேற் றெனவியப்பக்
கற்ப தருவிற் படர்ந்தேறு
காமர் கொடிச்செங் கயல்பாயும்

தெள்ளு புனற்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (எ)

**நீ சிவபெருமானுக்கும் உமாதேவிக்கும் அருமைப் பிள்ளையா யிருந்தாலும் செய்யும் சிறு குறும்பைப் பொறுக்க விதி என்ன என்றது.**

(இ-ள்) பிள்ளை மதி செம் சடை செருகும் பெருமானுர்க்கும் உலகு ஏழும் பெற்ற தாய்க்கும் நீ அருமை பிள்ளை எனில்—இளந் திங்களைச் சிவந்த சடையில் செருகிக்கொள்ளும் சிவபெருமானுக்கும், உலகம் ஏழையும் பெற்ற உமாதேவியாகிய தாய்க்கும் நீ அருமையாகிய குழந்தை என்று சொல்லப்பட்டால்;

எம் பேர் ஆயம் வெள்ளம் அமைத்த சிறு சோறு வேண்டின் இடுகேம் அலது — எமது பெரிய விளையாட்டு மகளிர் கூட்டம் அமைத்த சிறு சோற்றினை நீ விரும்பினுல் படைப்போமே அல்லது;

எளியேம் விளையாடு இடத்து சிறு குறும்பு விளைத்தல் பொறுக்க விதி உண்டோ — எளியேங்கள் விளையாடும் இடத்திலே (உயர்ந்தவனுகிய நீ வந்து) சிறு குறும்புகளைத் தோற்றுவித்தால் அவற்றையெல்லாம் பொறுக்க முறையுண்டோ?

கள்ளம் விழி சூர் அரமகளிர் காமன் கொடி ஏற்று என வியப்ப—களவுத் தன்மை பொருந்திய கண்களையுடைய அச்சந்தரும் தெய்வ மகளிரானவர் மன்மதனது கொடியேற்று விழா என்று கருதி வியக்கும்படி!

கற்பகம் தருவில் படர்ந்து ஏறும் காமர் கொடி செம் கயல் பாயும் தெள்ளு புனல் காவிரி நாடா—கற்பக மரத்திலே பரவி ஏறுகின்ற காம வல்லியாகிய கொடிமேல் நல்ல கயல் மீன்கள் பாய்வதற்கிடமாகிய தெளிந்த நீர் நிறைந்த காவிரியாறு பாயும் நாடனே! (எ—று)

முடிபு :— பெருமானுர்க்கும் தாய்க்கும் நீ அருமைப் பிள்ளை எனில், எம் ஆய வெள்ளம் அமைத்த சிறு சோற்றை வேண்டின் இடுகேம் அல்லது, சிறு குறும்பு விளைத்தால் பொறுக்க விதியுண்டோ! அரமகளிர் காமன் கொடி யேற்று என வியப்ப, காமர் கொடியில் கயல் பாயும் காவிரி நாடா! புள்ளூரா! சிற்றில் சிறையெல்.

'எனினும்' என்றும் பாடம் அடி—I

79. மடல்வா யவிழ்ந்த குழற்பேதை
ஒருத்தி திருத்தும் பகிரண்ட
மணற்சிற் றிலையோர் கணத்தின்கண்
மட்டித் தாடு மைந்தனருள்
விடலாய் தமியேஞ் சிற்றின்முற்றும்
விளையாட் டாக வொருநீயும்
வீட்டா நிற்பத் தொடங்கினையால்
வித்து முளையும் வேறன்றே
கடமா மருப்புஞ் சுடர்மணியும்
கதிர்நித் திலமு மகளிர்முலைக்
களபத் தொடுகுங் குமச்சேறும்
கரைத்து விடுத்தக் கடற்குட்டம்
திடராச் செயுங்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (அ)

அழிக்கும் தொழிலை மேற்கொண்ட உன் தந்தை போலவே நீயும் சிற்றிலை அழிக்கிருய் என்று கூறிச் சிற்றில் சிதையேல் என்றது.

(இ-ள்) மடல் வாய் அவிழ்ந்த குழல் பேதை ஒருத்த திருத்தும் பகிர் அண்டம் மணல் சிறு இல்லை—மலரிதழ் வாய் மலர்ந்த கூந்தலையுடைய (உமாதேவியாகிய) சிறுபெண் ஒருத்தி திருத்தமுறச் செய்யும் வெளி அண்டமாகிய மணற்சிறு வீட்டினை,

ஓர் கணத்தின் கண் மட்டித்து ஆடும் மைந்தன் அருள் விடலாய்—ஒரு கணப்பொழுதிலே அழித்து நடிக்கின்ற (சிவபெருமாளுகிய) வலிமையுடையோன் பெற்ற குழந்தாய்!

தமியேம் சிற்றில் முற்றும் விளையாட்டு ஆக ஒரு நீயும் வீட்டா நிற்ப தொடங்கினை ஆல் வித்தும் முளையும் வேறு அன்றே—எளியேங்களுடைய சிறு வீட்டையெல்லாம் (உனக்கு) விளையாட்டாக ஒப்பற்ற நீயும் அழிக்கத் தொடங்கினை ஆதலால், விதையும் அதிலிருந்து தோன்றும் முளையும் (காரண காரியமாய்க் கருதப்பட்டு) வேறல்லவே;

கடம் மா மருப்பும் சுடர் மணியும் கதிர் நித்திலமும் மகளிர் முலை களபத்தோடு குங்குமம் சேறும் கரைத்து விடுத்து அ கடல் குட்டம் திடர் ஆ செயும் காவிரி நாடா—மதத்தையுடைய யானைக் கொம்பையும் ஒளியுள்ள இரத்தினங்களையும் ஒளியுள்ள முத்துக்களையும் பெண்களது நகிலிலே அப்பிய கலவைச் சாந்துடன் குங்குமச் சேற்றையும் கரைத்து விட்டு அக்கடலின் ஆழத்தை மேடாகச் செய்யும் காவிரியையுடைய நாடனே. (எ-று.)

முடிபு:— பேதையாகிய ஒருத்தி திருத்தும் பகிரண்டமாகிய மணற் சிற்றிலை மட்டித்து ஆடும் மைந்தன்; அம்மைந்தன் அருளிய விடலாய்! தமியேம் சிற்றில் முற்றும் விளையாட்டு ஆக நீ வீட்டா நிற்பத் தொடங்கினை; ஆல், வித்தும் முளையும் வேறு அன்று; மருப்பும், மணியும், நித்திலமும், களபத்தொடு குங்குமச்சேறும் கரைத்து, விடுத்து, அக்கடற் குட்டத்தைத் திடராச் செய்யும் காவிரி; அக்காவிரி நாடா! புள்ளூரா! சிற்றில் சிதையேல்.

80. வார்மாண் கலைப்பே ரகலல்குல்
மடமா னுேக்கி னரமகளிர்
மகிழ்பூத் திருப்பப் புத்தேட்கு
வந்த விடுக்கண் மாற்றினையால்

கோமா னினக்கப் பெருந்தேவர்
குலமே யன்றி யடியேமும்
குற்றே வலுக்கா மகம்படிமைக்
குடியாக் கொண்டாற் குறையுண்டோ

காய்மாண் குலைச்செவ் விளநீரைக்
கடவுட் சாதி மடநல்லார்
கதிர்ப்பூண் முலையென் றேக்கறப்பைங்
கமுகு நகைவாண் முத்தரும்பும்

தேமாம் பொழிற்றீம் புனனாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (கூ)

**நீ எங்களை அகம்படித் தொழிற்குரிய தொண்டராக்க வேண்டும் என்று கூறியது.**

(இ-ள்) வாம் மாண் கலை பேர் அகல் அல்குல் மடம் மான் நோக்கின் அர மகளிர் மகிழ் பூத்து இருப்ப புத்தேட்கு வந்த இடுக்கண் மாற்றினை—அழகிய மாட்சிமைப்பட்ட மேகலை அணிந்த பெரிய அகன்ற இருக்கை உறுப்பினையும் இளைய மான் நோக்கம் போன்ற நோக்கினையும் உடைய தெய்வ மகளிரெல்லாம் களிப்புத் தோன்ற இருக்கும்படி தேவர்களுக்குச் (சூரபதுமனால்) வந்த துன்பத்தை ஒழித்தனை; (ஆல்-அசை)

கோமான் நினக்கு அ பெரு தேவர் குலமே அன்றி அடியேமும் குறு ஏவலுக்கு ஆம் அகம் படிமை குடி ஆ கொண்டால் குறை உண்டோ—தலைவனாகிய உனக்கு அங்ஙனம் ஆட்கொள்ளப்பெற்ற பெரிய தேவசாதியே அல்லாமல், அடியேங்களையும் சிறிய ஏவிய தொழில்களுக்கு ஆகும் அணுக்கத்தொண்டுபுரியும் குடியாகக் கொண்டால் (அதனால் உனக்குக்) குறையுளதோ;

காய் மாண் குலை செ இள நீரை கடவுள் சாதி மடம் நல்லார் கதிர் பூண் முலை என்று ஏக்கற பை கமுகு நகை வாள் முத்து அரும்பும் தேமா பொழில் தீம் புனல் நாடா—காய்த்தல் மாட்சிமைப் பட்ட கொத்தில் உள்ள சிவந்த இளநீரைக்(கண்ட) தேவசாதியர், இளைய நல்ல பெண்களின் ஒளியுடைய அணிகளை அணிந்த நகில் என்று கருதி ஆசையில் அமிழ்ந்து நிற்ப, (அது கண்டு நகைப்பாரைப்போல்) பசிய கமுகு சிரிப்பாகிய வெண்முத்தைத் தோற்றுவதற்கு இடமான தேமாஞ் சோலையையுடைய புனல் நாடனே, (எ-று)

முடிபு:— அரமகளிர் மகிழ் பூத்திருப்ப புத்தேட்கு வந்த இடுக்கண் மாற்றினை, நினக்கு அத்தேவர் குலமே அன்றி, அடியேமும் குற்றேவலுக்காம் குடியாகக் கொண்டால் குறையுண்டோ; கடவுட் சாதியார் இளநீரை நல்லார் முலையென்று ஏக்கற, கமுகு நகைவாண் முத்தரும்பும் புனல் நாடா, புள்ளூரா! சிற்றில் சிதையேல்.

(கு—ரை) கமுகில் முத்துப் பிறப்பதாகக் கூறுதல் உண்டு. தென்னை மரங்கள் தெய்வ உலகத்தை ஒட்டி வளர்ந்துள்ளன என்பது கருத்து.

81. கருவீற் றிருந்த பெருங்கருணை
கடைக்கண் பொழிய வீற்றிருக்குங்
கடவு ணீயே பகிரண்டம்
கண்டா யெனின்வண் டடைகிடப்ப

மருவீற் றிருந்த குழன்மகளிர்
வண்டற் றுறைக்கு மணற்சிற்றில்
மனைகோ லுவது மற்றடிகேள்
வகுக்குந் தொழிற்கு மாறன்றே

குருவீற் றிருந்த மணிமாடக்
கொடிமா நகரந் தொறுமலர்ந்த
கொழுந்தா மரைப்பூங் கோயிலிற்பல்
கோடி யுருவங் கொண்டுசெழுந்

திருவீற் றிருந்த சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. (௯௦)

**நீ உலகங்களைத் தோற்றுவித்ததுபோல யாங்களும் மனை கோலுகின்றோம்; இது உன் தொழிலுக்கு மாறன்று; அதனால் சிற்றில் சிதையேல் என்றது.**

(இ-ள்) கரு வீற்றிருந்த பெரு கருணை கடைக்கண் பொழிய வீற்றிருக்கும் கடவுள் நீயே பகிர் அண்டம் கண்டாய் எனில்—கருக் கொண்டு தங்கியிருந்த பேரருளைக் கடைக்கண் சொரிய எழுந்தருளி யிருக்கும் கடவுளாகிய நீயே (விளையாட்டாக)ப் பெரிய உலகங்களை யெல்லாம் உண்டாக்கினாய் என்றால்;

வண்டு அடை கிடப்ப மரு வீற்றிருந்த குழல் மகளிர் வண்டல் துறைக்கு மணல் சிற்றில் மனை கோலுவது — வண்டுகள் (எங்கும் செல்லாமல்) தங்கிக் கிடக்கும்படி மணம் தங்கியிருந்த கூந்தலை யுடைய சிறு மகளிரானவர் தங்கள் விளையாட்டுத் துறைக்காக மணற் சிறு வீடு அமைத்துக்கொள்வதானது;

அடிகேள் வகுக்கும் தொழிற்கு மாறு அன்றே — அடிகளே! தங்கள் படைக்குந் தொழிற்கு மாறுபாடன்றே;

குரு வீற்றிருந்த மணி மாடம் கொடி மா நகரம் தொறும் மலர்ந்த கொழு தாமரை பூ கோயிலில் பல் கோடி உருவம் கொண்டு செழு திரு வீற்றிருந்த சோணாடா—நிறம் தங்கியிருந்த மணிகள் பதித்த மாடங்களையுடைய கொடி கட்டிய பெரிய நகர்ந்தொறும்

மலர்ந்துள்ள செழிய தாமரை மலராகிய கோயிலின்கண் பல்கோடி வடிவங்கொண்டு செழுமையாகிய இலக்குமி வீற்றிருந்த சோணாடனே! (எ—று.)

முடிபு :— கடைக்கண் பெருங் கருணையைப் பொழிய வீற்றிருக்கும் கடவுளாகிய நீயே பகிரண்டம் கண்டாய் எனில், மகளிர் மணற் சிற்றில் மனை கோலுவது அடிகேள்! வகுக்கும் தொழிற்கு மாறன்று; நகரந்தோறும் மலர்ந்த தாமரைப் பூங் கோயிலிற் பல்கோடி உருவம் கொண்டு திருவீற்றிருந்த சோணாடா! புள்ளூரா! சிற்றில் சிதையேல்.

---

## கூ. சிறுபறைப் பருவம்

82. ஊற்றும் பசுந்தே னுவட்டநெட் டிதழ்விரியும்
ஒண்காந்தண் முச்சியுச்சி
ஒருவனீ மும்முதற் கடவுளு மிளைப்பாற
உலகெலாந் தலையளித்துப்

போற்றுந் திறத்தினைப் பழமறைக் கிழவன்
புரிந்தபகி ரண்டங்கடாம்
புதுக்குவ கடுப்பநெடு வெளிமுகட் டுக்குவிரி
புதுநிலாக் கற்றையிட்டுத்

தூற்றும் பெயர்க்கரு முகிற்படாத் தையும்வெண்
டுகிற்படா மாக்கிவீக்கித்
தொடுகடற் புவனப் பெருந்தட்டொ டண்டச்
சுவர்த்தலத் துக்கும்வெள்ளை

தீற்றுஞ் சுதைத்தவள மாடமலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (க)

முருகக்கடவுள் மும்முதற் கடவுளும் இளைப்பாறத்தலையளித்து அவர் தொழிலைப் புதுக்கினற்போல புள்ளூரிலுள்ள மாடங்களும் தம் வெண் சுதை ஒளியினாலே உலகமுழுதையும் புதுக்குகின்றன என்று கூறப்படுகிறது.

(இ-ள்) ஊற்றும் பசு தேன் உவட்ட நெடு இதழ் விரியும் ஒள் காந்தள் முச்சி உச்சி ஒருவன் நீ—சுரக்கும் பசுந்தேன் பெருக் கெடுப்ப நீண்ட இதழ் மலரும் ஒளிபெற்ற காந்தள் மலரை அணிந்த கொண்டையையுடைய உச்சியைப் பெற்றிருக்கும் ஒப்பற்றவனாகிய நீ;

மு முதல் கடவுளும் இளைப்பு ஆற உலகு எலாம் தலையளித்து போற்றும் திறத்தில்—(படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் தொழிற்குரிய நான்முகன், திருமால், உருத்திரன் என்னும்) மூன்று முதற் கடவுளரும் இளைப்புத் தணியும்படி உலகம் எல்லாவற்றையும் (முத்தொழிலால்) பாதுகாத்து அவர் தொழிலைப் போற்றிப் (புதுக்கும்) திறத்தைப் போல;

அ பழம் மறை கிழவன் புரிந்த பகிர் அண்டங்கள் தாம் புதுக்குவ கடுப்ப—அந்தத் தொன்மையாகிய வேதத்திற்குரிய நான்முகன் செய்த வெளி அண்டங்களை (மாடங்களாகிய) தாம் புதுக்குவதை ஒப்ப;

நெடு வெளி முகட்டுக்கு விரி புது நிலா கற்றை இட்டு தூற்றும் பெயல் கரு முகில் படாத்தையும் வெண் துகில் பாடாம் ஆக்கி வீக்கி தொடு கடல் புவனம் பெரு தட்டொடு அண்டம் சுவர் தலத்துக்கும் வெள்ளை தீற்றும் சுதை தவளும் மாடம்—நீண்ட வான் வெளியின் மேற்பரப்பிற்கு விரியும் புது நிலாத் திரட்சியை அமைத்து, சொரியும் மழையையுடைய கரிய மேகமாகிய மேற்கட்டும் ஆடையையும் வெண் துகிலாகிய ஆடையாக ஆக்கி மேலே கட்டி, தோண்டப்பெற்ற கடல் சூழ்ந்த உலகமாகிய பெருந்தட்டுடன் (பக்கத்திலுள்ள) அண்டச் சுவராகிய இடத்திற்கும் வெள்ளையான நிறத்தைச் செய்யும் வெள்ளை யான மாளிகைகள்;

மாடம் மலி வேளூர தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவ சிறு பறை முழக்கி அருள்—அத்தகைய மாடங்கள் மலிந்த வேளூரனே! தமிழ் மொழிக்கும் வட மொழிக்கும் தலைவனே! சிறு பறையை முழக்கி அருள் செய்வாயாக. (எ—று.)

முடிபு :— ஒருவனாகிய நீ மும்முதற் கடவுளும் இளைப்பாற தலையளித்துப் போற்றும் திறத்தின், மறைக்கிழவன் புரிந்த அண்டங்களைத் தாம் புதுக்குவ கடுப்ப, வெளி முகட்டுக்கு நிலாக் கற்றையிட்டு, கருமுகிற் படாத்தை வெண் துகிற் படாமாக ஆக்கி வீக்கி, புவனப் பெருந்தட்டொடு அண்டச் சுவர்த் தலத் துக்கும் வெள்ளை தீற்றும் சுதை மாடம்; அம்மாடம் மலி வேளூர! தலைவ! சிறுபறை முழக்கி அருள்.

83. விளக்கும் பெரும்புவன மொக்கக் கரைத்தகடை
வெள்ளஞ் சுருங்கவீங்கி
வேதண்ட மெட்டிநெடு மூதண்ட கூடத்தும்
விளையாடி யுலகமேழும்

வளைக்குங் கருங்கடல் பெரும்புறக் கடலோடும்
வாய்மடுத்தெதி ரெடுப்ப
வருபுனற் காவேரி வளநாட நாடொறு
மதிக்கடவு ளேறியேறி

இளைக்கும் பளிக்கறை முயற்கறை யறக்காலும்
இளநிலா வெள்ளமூழ்கி
எறிதிரைப் பாகீ ரதிப்புனல் குடைந்திடும்
இடைக்கொடி நகிற்கொடியெனத்

திளைக்குந் துகிற்கொடி முகிற்கொடிசெய் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (உ)

**காவிரி நதியின் வெள்ளப் பெருமையும் புள்ளூரின் துகிற்கொடிச் சிறப்பும் கூறப்படுகின்றன.**

(இ-ன்) விளைக்கும் பெரு புவனம் ஒக்க கரைத்த கடை வெள்ளம் சுருங்க வீங்கி—தோற்றுவிக்கப்பட்ட பெரிய உலகங்களை ஒருசேரக் கரைத்த அழிக்குங்காலத்தெழுந்த வெள்ளப்பெருக்கும் சுருக்க முடைத்தாய்த் தோன்றும்படி பொங்கி;

வேதண்டம் எட்டிஞெடு மூது அண்டம் கூடத்தும் விளையாடி— இமயம் முதலான குலமலைகள் எட்டிஞெடு பழைய அண்ட முகட்டினும் (சென்று) விளையாடி;

உலகம் ஏழும் வளைக்கும் கரு கடல் பெரு புறம் கடலொடும் வாய்மடுத்து எதிர் எடுப்ப வருபுனல் காவேரி வளம் நாட—ஏழுலகங் களையும் வளைக்கும் கருநிறமுள்ள கடலானது பெரிய புறத்தே உள்ள கடலோடும் நிரம்பி எதிர்த்து வரும்படி, வருகின்ற நீரையுடைய காவிரியாறு; அக்காவிரி பாயும் வள நாடனே;

நாள் தொறும் மதி கடவுள் ஏறி ஏறி இளைக்கும் பளிக்கு அறை—ஒவ்வொரு நாளும் திங்களாகிய தேவன் ஏறி ஏறி உடல் தேய்வதற்குக் காரணமான பளிங்குக் கல்லால் செய்த அறைக ளானவை;

முயல் கறை அற காலும் இள நிலா வெள்ளம் எறி திரை பாகீரதி புனல் குடைந்திடும் இடை கொடி நகில் கொடி என மூழ்கி திளைக்கும் துகில் கொடி முகில் கொடி செய் வேளூர—திங்களின் முயலாகிய கறுப்பு ஒழியும்படி வெளிப்படுத்துகின்ற இளைய நிலா வெள்ளத்தின் கண் "அலை யெறியும் ஆகாய கங்கையின் மூழ்கும் இடையாகிய கொடியையும் நகிலையும் உடைய கொடி போன்ற மகளிர் போல்"

முழுகிப் பயிலும் துகிற்கொடிகள் முகில் வரிசையைப் போல் தோன்றும் (முகிலையுடைய கொடி என்றுமாம்) வேளூர்; அவ்வேளூரை உடையவனே. (எ–று.)

முடிபு:— கடை வெள்ளம் சுருங்க வீங்கி, விளையாடி, கருங்கடல் பெரும்புறக் கடலோடும் வாய் மடுத்து எதிர் எடுப்ப வருகின்ற புனலையுடைய காவேரி வளநாடனே! மதி ஏறி ஏறி இளைக்கும் பளிக்கறையானவை காலும் இள நிலா வெள்ளத்தில் 'பாகிரதிப் புனலில் குடைந்திடும் கொடியவர் (மகளிர்) என' மூழ்கித் திளைக்கும் துகிற்கொடிகள் முகிற்கொடி செய்யும் வேளூரனே! தலைவ! சிறுபறை முழக்கியருள்.

84. இருளுந் தரங்கக் கருங்கடன் முகட்டெழும்
இளம்பிறை முயற்குழந்தைக்
கேறவிடு மோடமென வான்மீன் றடந்திரை
எடுத்தெறியு நெடுமீனெனத்

தரளம் பதிந்திட்ட மணிமுறுவ லவரோடு
தருநிழற் செல்வருய்க்கும்
தமனிய விமானமும் வெயிற்கதிர்ப் போர்வையான்
தனியாழி திசையுருட்ட

உருளுங் கொடித்தேருப் வீற்றுவீற் றெழில்புனைந்
தோட்டுபொற் றெப்பமென்ன
உலகேழு மலையெட்டு மொழுகுகதிர் விழுதுவிடும்
ஒண்ணிலாப் புணரிகோப்பத்

திரளும் பளிக்குமா டங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பமைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (௩)

**வேளூரில்பளிக்கு மாடங்கள் நிலாப்புணரி கோப்பத்திரண்டிருப்பதும், அந்நிலாக் கடலில் திங்கள் முதலானவை காட்சியளிக்கும் வகையும் கூறப்படுகின்றன.**

(இ–ள்) இருளும் தரங்கம் கரு கடல் முகட்டு எழும் இள பிறை முயல் குழந்தைக்கு ஏற விடும் ஓடம் என — இருள் நிறம் பெற்ற அலையுடன் கூடிய கருங்கடலின் மேற்பரப்பில் எழுகின்ற இளைய பிறையானது முயலாகிய பிள்ளைக்கு ஏறித்திரிய விடுகின்ற ஓடத்தைப்போல் (நிலாப்புணரியில்) விளங்கவும்;

வான் மீன் தட திரை எடுத்து எறியும் நெடு மீன் என— ஆகாயத்திலுள்ள மீன்களானவை (நிலாப்புணரியில் தோன்றும்) பெரிய அலைகள் எடுத்து வீசும் நீண்ட மீன்களைப்போல் தோன்றவும்;

தரளம் பதிந்திட்ட மணி முறுவலவரொடு தரு நிழல் செல்வர் உய்க்கும் தமனியம் விமானமும் வெயில் கதிர் போர்வையான் தனி ஆழி திசை உருட்ட உருளும் கொடி தேரும்—முத்துக்கள் பதிந்து விளங்கினாற்போன்ற அழகிய பல்லையுடைய பெண்களுடன் கற்பக மரத்தின் நிழலில் வாழும் செல்வத்தையுடைய தேவர் செலுத்தும் பொன் விமானமும், வெயிலாகிய ஒளியைப் போர்வையாகவுடைய சூரியனுடைய, ஒற்றைச் சக்கரம் திசைகளில் செல்லும்படி உருட்டி விட அதனால் உருளுகின்ற கொடியையுடைய தேரும்;

வீற்று வீற்று எழில் புனைந்து ஓட்டு பொன் தெப்பம் என்ன— (விமானமும் தேரும்) வெவ்வேறாகிய அழகினைப் பெற்று (நிலாப் புணரியில) செலுத்தப்பெறும் பொற்றெப்பத்தைப்போல் விளங்கவும்;

உலகு ஏழும் மலை எட்டும் ஒழுகு கதிர் விழுது விடும் ஒள் நிலா புணரி கோப்ப திரளும் பளிக்கு மாடங்கள் பொலி வேளூர—உலகம் ஏழிலும் குலமலைகள் எட்டிலும் செல்லுகின்ற ஒளித்திரட்சியை விடும்படி ஒள்ளிய நிலாக்கடல் நிறையும் வண்ணம் திரளுகின்ற பளிக்கு மாடங்கள்; அம்மாடங்கள் பொலியும் வேளூரனே (எ-று)

முடிபு:— பிறை முயற்குழந்தைக்கு ஏறவிடும் ஓடம் என, வான்மீன் திரை எடுத்தெறியும் நெடுமீன் என, முறுவலவரொடு செல்வர் உய்க்கும் விமானமும் போர்வையான் தேரும் எழில் புனைந்து ஓட்டு பொற்றெப்பம் என்ன, உலகம் ஏழிலும் மலை எட்டிலும் ஒழுகு கதிர் விழுது விடும் நிலாப்புணரி கோப்பத் திரளும் பளிக்கு மாடம் பொலி வேளூர! தலைவ! சிறுபறை முழக்கியருள்.

85. மொய்ம்பிற் பெரும்புவன மொக்கச் சுமக்கின்ற
மோட்டாமை முதுகுளுக்க
முடவுப் படங்கிழிந் தரவரசி னுயிர
முடித்தலையு மூளைபொங்கக்

கம்பக் கடாயானை யெட்டும் பிடர்த்தலை
கழுத்தொடு முரிந்துகவிழக்
கதிர்மணிச் சூட்டுநெட் டரவெட்டும் வடவைக்
கடுங்கனற் கண்பிதுங்க

அம்பொற் றடம்புரிசை யெழுபெருந் தட்டுருவி
அண்டகூ டத்தளவலால்
அவரவர் வழங்குதற் கிடுதலைக் கடையென
அடுக்கேழு நிலையேழுமாம்

செம்பொற் றிருக்கோ புரங்கள்பொலி வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பழைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (சு)

**வேளூர்க் கோபுரத்தின் பெருமையும், உயர்ச்சியும் கூறப்படும்.**

(இ-ள்) மொய்ம்பில் பெரு புவனம் ஒக்க சுமக்கின்ற மோடு ஆமை முதுகு உளுக்க—பெரிய உலகங்களையெல்லாம் தன் மொய்ம்பினாலே (வலியினாலே) ஒருங்கு சுமக்கின்ற பெரிய ஆமையின் முதுகு கெடவும்;

முடவு படம் கிழிந்து அரவு அரசின் ஆயிரம் முடி தலையும் மூளை பொங்க—வளைந்த படம் கிழிபட்டு (உலகத்தைத் தாங்கும்) பாம்பு களின் வேந்தனாகிய ஆதிசேடனின் ஆயிரம் முடியோடு கூடிய தலை களிலும் மூளை கொதிக்கவும்;

கம்பம் கடாம் யானை எட்டும் பிடர் தலை கழுத்தொடும் முரிந்து கவிழ—தூணில் கட்டப்பெறும் மதத்தையுடைய (உலகத்தைத் தாங்கும்) திசை யானைகள் எட்டும் பிடரியோடு கூடிய தலை கழுத் தொடும் முரியப்பட்டு கவிழ்ந்து விழவும்;

கதிர் மணி சூட்டு நெட்டு அரவு எட்டும் வடவை கடு கனல் கண் பிதுங்க—ஒளியுள்ள மாணிக்கத்தை உச்சியிலே உள்ள (உலகத் தைத் தாங்கும்) நீண்ட (திசைப்) பாம்புகள் எட்டும் வடவைக் கடுந் தீப்போன்ற கண்கள் பிதுங்கவும்;

அம் பொன் தட புரிசை எழு பெரு தட்டு உருவி அண்டம் கூடத்து அளவலால்—அழகிய பொன்னாற் செய்த பெரிய மதிலா னது (மேலே உள்ள) ஏழு பெரிய உலகங்களாகிய தட்டுகளை ஊடுருவி அண்டத்தின் உச்சியில் சேர்தலால்;

அவர் அவர் வழங்குதற்கு இடு தலைக்கடை என அடுக்கு ஏழும் நிலை ஏழும் ஆம் செம்பொன் திரு கோபுரங்கள் பொலி வேளூர — அந்தந்த உலகத்தவர் (மதிலுக்கு வெளியே) சென்று வருவதற்கு அமைக்கப்பட்ட வாயிற்படி என்று சொல்ல, ஏழு அடுக்குகளையும் ஏழு வாயிலையும் கொண்ட செம்பொன் திருக்கோபுரங்கள்; அவை பொலியும் வேளூரனே! (எ-று.)

முடிபு:— புவனத்தைச் சுமக்கின்ற ஆமை முதுகு உளுக்க, அரவு அரசின் படம் கிழிந்து மூளை பொங்க, யானை எட்டும் கழுத்தொடு முரிந்து கவிழ, அரவெட்டும் கண் பிதுங்க, (அவ்வளவு பெரிதாக) வேளூரிலே திருக்கோபுரங்கள் பொலி கின்றன; புரிசை (ஏழுலகமாகிய) எழு பெருந்தட்டுருவி அண்ட கூடத்தை அளவலால், அவரவர், (அந்தந்த உலகத்தவர்) வழங்கு

தற்கு இடு தலைக்கடை என அடுக்கு ஏழையும் நிலை ஏழையும் கொண்டு (அவ்வளவு உயரமாக) வேளூரிலே திருக்கோபுரங்கள் பொலிகின்றன.

அத்தகைய வேளூரனே! தலைவனே! சிறுபறை முழக்கியருள்.

(சூ—ரை) 'புவனம் சுமக்கின்ற' என்னும் தொடரை அரவரசு முதலானவற்றிற்கும் கூட்டுக. இப்பாட்டு மதில் கோபுரங்களின் பெருமையையும் உயர்ச்சியையும் கூறியதாகவும் கொள்ளலாம்.

86. தரிக்குஞ் சுடர்ப்பருதி முழுமதிக் கடவுளொடு
தடமதில் கடந்தகநகர்
சாரவரி தாற்புவன கோடிகட் கொளிசெயச்
சதுமுகன் கற்பந்தொறும்
விரிக்கின்ற விருசுடரு மொருவழித் தொக்கென
வியன்கதிர்ப் படலமூடி
வீங்கிருள் விழுங்குசெம் மணிமாட நிரையுமொளி
விளைபசுங் கதிர்வெண்புரி
புரிக்குஞ் செழுந்தரள மாடமும் வெயிலினெடு
பொழிநிலாப் போர்ப்பமுற்றும்
போதுதெரி யாமையிற் குமுதமொடு சதவிதழ்ப்
போதுமே யிருபோதையும்
தெரிக்குந் தடம்பணை யுடுத்ததமிழ் வேளூர
சிறுபறை முழக்கியருளே
தென்கலைக் கும்பனைய வடகலைக் குந்தலைவ
சிறுபறை முழக்கியருளே. (௫)

**பருதியும், மதியும் தடமதிலைக் கடந்து அகநகரில் புக முடியாமையால், அங்கே செம்மணி மாட நிரையும், தரளமாட நிரையும் முறையே வெயிலையும், நிலவையும் செய்ய, அதனால், இரவும், பகலும் தெரியாமையினாலே குமுதமும் தாமரையுமே அப்பொழுதைக் காட்டும் என்று புனைந்து கூறப்பெறுகிறது.**

(இ-ள்) தரிக்கும் சுடர் பருதி முழு மதி கடவுளொடு தட மதில் கடந்து அகம் நகர் சார அரிதால் — சுடரைத் தாங்கும் ஞாயிறானது முழுமையான திங்கட் கடவுளோடு பெரிய மதிலைக் கடந்து உள் நகரத்தை அடைய அரிதாயிருத்தலினால் (மதில் மிக உயர்ந்தது என்று கருத்து)

புவனம் கோடிகட்கு ஒளி செய சதுமுகன் கற்பம் தொறும் விரிக்கின்ற இரு சுடரும் ஒரு வழி தொக்கு என—உலக கோடிகளுக்கு ஒளியினைச் செய்ய நான்முகனானவன் கற்பகாலந்தொறும்

படைக்கின்ற (ஞாயிறும் திங்களுமாகிய) இரு சுடர்களும் ஓரிடத்தில் கூடிஞற்போல;

வியன் கதிர் படலம் மூடி வீங்கு இருள் விழுங்கு செம் மணி மாடம் நிரையும், ஒளி விளை பசு கதிர் வெள் புரி புரிக்கும் செழு தரளம் மாடமும் வெயிலிஞெடு பொழி நிலா போர்ப்ப — பெரிய ஒளித் தொகுதியால் வளைத்து இருளை விழுங்குகின்ற செம்மணிகள் பதித்த மாளிகைகளின் வரிசையும், ஒளியை விளைவிக்கும் குளிர்ந்த கிரணங்களால் வெள்ளையான கயிற்றைத் திரிக்கும் செழுமையான முத்துக்களால் இயன்ற மாளிகைகளின் வரிசையும், வெயிலோடு பொழியும் நிலவிஞல் (அகநகரை) மூடிக்கொள்ள;

முற்றும்போது தெரியாமையில் — முழுதும் (நகரத்தவரால்) பொழுது அறியப்படாமையிஞல்;

குமுதமொடு சதம் இதழ் போதுமே இரு போதையும் தெரிக்கும் தட பணை உடுத்த தமிழ் வேளூர — குமுதமலருடன் நூற்றிதழ்த் தாமரை மலர்களே இரவு பகலென்னும் இரண்டு காலத்தினையும் தெரியச்செய்யும் பெரிய வயல் சூழ்ந்த தமிழையுடைய வேளூரனே! (எ—று)

*முடிபு :— பருதி மதிக் கடவுளொடு மதில் கடந்து அகநகர் சார அரிதால், "சதுமுகன் கற்பந் தொறும் விரிக்கின்ற இரு சுடரும் ஒரு வழித் தொக்கென" செம்மணி மாட நிரையும் தரள மாட (நிரையும்) வெயிலிஞெடு நிலாப் போர்ப்ப (அதஞல்) முற்றும்போது தெரியாமையிஞல் குமுதமொடு சத இதழ்ப் போதுமே இரு போதையும் தெரிக்கும் வேளூர! தலைவ! சிறு பறை முழக்கியருள்.*

(வேறு)

87. *மழைமுகில் பிளிறு முழக்கென விரிசிறை*
*மடமயி லினமகவ*
*மால்கட லோலிடு மொலியென விரக*
*மடந்தையர் மனநெகிழப்*

*பழமறை யார்ப்பென வாகுதி வேட்டெழு*
*பண்ணவ ருண்மகிழப்*
*பரநா தத்தொலி யெனவனு பூதி*
*பலித்தவர் நெக்குருக*

*அழலவிர் சோதியை மைய னடஞ்செய*
*ஆயிர மங்கையினேர்*
*அண்ண றுவைத்திடு குடமுழ வொடுசுடர்*
*ஆழி யவன்கொட்டு*

முழவென வமரரு முனிவரு மார்ப்ப
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (சு)

## இன்ன இன்ன நிகழ்ச்சிகள் எல்லாம் நிகழ முருகனைச் சிறுபறை முழக்குக என்றது.

(இ–ள்) மழை முகில் பிளிறு முழக்கு என விரி சிறை மட மயில் இனம் அகவ—மழையைப் பெய்யும் மேகம் முழங்கும் முழக்கு என்று கருதி விரியும் சிறகினையுடைய மட மயிற் கூட்டங்கள் ஆரவாரிக்கவும்,

மால் கடல் ஓல் இடும் ஒலி என விரகம் மடந்தையர் மனம் நெகிழ—பெரிய கடல் ஒலித்தல் செய்யும் ஒலி என்று கருதி காம நோய்கொண்ட பெண்களுடைய மனம் நெகிழ்ச்சியடையவும்;

பழ மறை ஆர்ப்பு என ஆகுதி வேட்டு எழு பண்ணவர் உள் மகிழ—பழைய வேதத்தின் ஒலி என்று கருதி அவியுணவை விரும்பி எழுகின்ற தேவரெல்லாம் உள்ளம் மகிழவும்;

பரம் நாதத்து ஒலி என அனுபூதி பலித்தவர் நெக்கு உருக—மேலான நாத தத்துவத்தின் ஒலி என்று யோகப் பயிற்சியில் பயன் பெற்றவர் நெகிழ்ந்து உருகவும்;

அழல் அவிர் சோதி எம் ஐயன் நடம் செய ஆயிரம் அம் கையில் ஓர் அண்ணல் துவைத்திடு குடம் முழவொடு சுடர் ஆழியவன் கொட்டும் முழவு என அமரரும் முனிவரும் ஆர்ப்ப—அழலுகின்ற (சுடுகின்ற) விளங்கும் ஒளியுருவாகிய எமது தலைவன் நடித்தலைச் செய்ய, ஆயிரம் அழகிய கைகளாலும் ஒப்பற்ற பெரியோனாகிய வாணசுரன் முழக்கும் குட முழவு என்னும் வாத்தியத்தொடு ஒளிபெற்ற சக்கரத்தையுடைய திருமால் முழக்கும் முழவு என்று கருதித் தேவரும் முனிவரும் ஆரவாரம் செய்ய;

மு தமிழ் பயில் பருதி பதி முருகன் முழக்குக சிறு பறையே—மூன்று தமிழைப் பயிலும் பருதிப்பதி முருகனே! சிறுபறை முழக்குக. (எ–று.)

முடிபு:— மயில் இனம் முகில் முழக்கு என அகவவும், விரக மடந்தையர் கடல் ஒலி என மனம் நெகிழவும், பண்ணவர் மறை ஆர்ப்பு என உள் மகிழவும், அனுபூதி பலித்தவர் பரநாத ஒலி என நெக்கு உருகவும், அமரரும் முனிவரும் ஐயன் நடம் செய அண்ணல் துவைத்திடு குடமுழவொடு ஆழியவன் கொட்டும் முழவென ஆர்ப்பவும் முருகன்! சிறுபறை முழக்குக.

88. பெருவெளி முகடு திறந்திட் டண்டப்
 பித்திகை வெடியாமே
 பேரண்டத்துள வேதண் டங்கள்
 பிதிர்ந்துதி ராகாமே
குருமணி சிதறிய வென்ன வுடுத்திரள்
 கொட்டுண் டுதிராமே
 குவடு படுந்திசை செவிடு படச்சிலர்
 குடர்கள் குழம்பாமே
திருவிர லொடுநக கண்களி னுஞ்செங்
 குருதி ததும்பாமே
 சேயொளி நின்று துளும்பிட நின்சிறு
 செங்கை வருந்தாமே
முருகலர் தாரவ னொருமுறை மெல்ல
 முழக்குக சிறுபறையே
 முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
 முழக்குக சிறுபறையே. (எ)

**அண்டப் பித்திகை வெடித்தல் முதலான நிகழ்ச்சிகள் நடவாதவாறு மெல்லச் சிறுபறை முழக்குக என்று முருகனை வேண்டியது.**

(இ-ள்) பெரு வெளி முகடு திறந்திட்டு அண்டம் பித்திகை வெடியாமே—பெரிய வானவெளியிலே உள்ள அண்டத்தின் உச்சி திறந்திட்டு அவ்வண்டத்தின் பக்கச் சுவர்கள் வெடித்துவிடாமலும்;

பேர் அண்டத்து உள வேதண்டங்கள் பிதிர்ந்து உதிர் ஆகாமே—பெரிய அண்டத்தின் உள்ளே உள்ள மலைகளெல்லாம் தூளாகிச் சிந்தாமலும்;

குரு மணி சிதறிய என்ன உடு திரள் கொட்டுண்டு உதிராமே-நிறமுள்ள முத்து மணிகள் சிதறின என்னும்படி வான்மீன் கூட்டங்கள் (வானத்திலிருந்து) கொட்டப்பெற்று சிதராமலும்;

குவடு படும் திசை செவிடு பட சிலர் குடர்கள் குழம்பாமே—குலமலைகள் பொருந்திய திசையில் வாழும் சிலர் செவிடுபட்டுக் குடர் குழம்பாமலும்;

திரு விரலொடு நகம் கண்களினும் செம் குருதி ததும்பாமே—(உனது) அழகிய விரல்களோடு நகக்கண்களிடத்தே சிவந்த இரத்தம் மிக்குப் பரவாமலும்;

சேய் ஒளி நின்று துளும்பிட நின் சிறு செம் கை வருந்தாமே—(இரத்தம் மிக்குப் பரவலால்) சிவந்த ஒளி நின்று ததும்ப உனது சிறிய சிவந்த கை வருந்தாமலும்;

முருகு அலர் தாரவன் மு தமிழ் பயில் பருதி புரி முருகன் ஒரு முறை மெல்ல முழக்குக சிறு பறையே — நறுமணத்தோடு மலர்ந்த மாலையையுடையவனே! மூன்று தமிழ் வழங்கும் பருதிபுரியின் முருகனே! ஒருதரம் சிறு பறையை மெல்ல முழக்குக. (எ-று)

முடிபு:— முகடு திறந்திட்டுப் பித்திகை வெடியாமே, வேதண்டங்கள் பிதிர்ந்து உதிராகமே, மணி சிதறிய என்ன உடுத்திக் கொட்டுண்டு உதிராமே, திசையிலே சிலர் செவிடு படக் குடர்கள் குழம்பாமே, விரலொடு கண்களிலும் குருதி ததும்பாமே, சேயொளி நின்று துளும்பிட செங்கை வருந்தாமே, தாரவன்! முருகன்! சிறு பறையை மெல்ல முழக்குக.

89. வம்மி னெனப்புல வோரை யழைத்திடு
வண்கொடை முரசமென
வடகலை தென்கலை யொடுபயி லுங்கவி
வாணர்க ளோடிவர

அம்மென் மடப்பிடி பொன்னுல கீன்றவ
ணங்கை மணம்புணரும்
அணிகிளர் மணமுர சென்னவெ மையனொ
டம்மை மனங்குளிரத்

தெம்முனை சாயச் சமர்விளை யாடிச்
செங்கள வேள்விசெயும்
திறன்முர செனவிமை யவர்விழ வயரச்
செழுநகர் வீதிதொறு

மும்முர சமுமதிர் காவிரி நாடன்
முழக்குக சிறுபறையே
முத்தமிழ் பயில்பரு திப்பதி முருகன்
முழக்குக சிறுபறையே. (அ)

கொடை முரசு மணமுரசு வெற்றி முரசு என்னும் மும்முரசைப்போல் முருகனைச் சிறுபறை முழக்கச்சொன்னது.

(இ-ள்) வம்மின் என புலவோரை அழைத்திடு வள் கொடை முரசம் என வடகலை தென்கலையொடு பயிலும் கவி வாணர்கள் ஓடி வர—வாரீர் என்று புலவரை அழைக்கும் வளப்பந்தங்கிய கொடை முரசம் என்று கருதி, வடமொழிக் கலைகளைத் தென்மொழிக் கலைகளுடன் கற்கும் பாவாணர்கள் ஓடி வரும்படியும்;

அம் மென் மடம் பிடி பொன் உலகு ஈன்ற அணங்கை மணம் புணரும் அணி கிளர் மணம் முரசு என்ன எம் ஐயனொடு அம்மை மனம் குளிர—அழகிய மென்மையான இளைய பெண்யானைபோலப் பொன்னுலகம் பெற்ற தெய்வயானை என்னும் பெண்ணை நீ மணஞ் செய்து கொள்ளும் அழகு ஓங்கும் மணமுரசென்று கருதி, எமது ஐயனாகிய சிவபெருமானோடு அம்மையாகிய உமாதேவி மனம் மகிழும்படியும்;

தெவ் முனை சாய சமர் விளையாடி செம் கள வேள்வி செயும் திறல் முரசு என இமையவர் விழவு அயர—பகைவரது போர்முனை கெடப் போரிலே திருவிளையாடல் செய்து சிவந்த போர்க்கள வேள்வியைச் செய்கின்ற வெற்றி முரசென்று கருதித் தேவரெல்லாம் விழாக் கொண்டாடும்படியும்;

செழு நகர் வீதி தொறும் மு முரசமும் அதிர் காவிரி நாடன் முழக்குக சிறு பறை—செழுமையாகிய நகரங்களில் உள்ள வீதிகள் தொறும் (கொடை முரசு மண முரசு வெற்றி முரசு) என்னும் மூன்று முரசங்களும் முழங்கும் காவிரி நாடனே! (அம்முரசைப் போலவே, சிறு பறை முழக்குக. (எ–று.)

முடிபு:— வீதி தொறும் மும்முரசமும் அதிர் காவிரி நாடனே! முருகனே! கொடை முரசமெனக் கவிவாணர் ஓடி வரவும், (நீ) அணங்கை மணம்புணரும் மண முரசென்ன எம் ஐயனொடு அம்மை மனங்குளிரவும், (நீ) தெம்முனை சாய விளையாடி களவேள்வி செயும் திறல் முரசென்ன இமையவர் விழவு அயரவும் சிறு பறை முழக்குக.

(சந்த விருத்தம்)

தனன தனத்தன தனன தனத்தன தனதனனா

90. பெருகுசுவைத்தெளி நறவொழுகக்கனி கனியமுதே
பிடிநடைகற்றிட வடிகள்பெயர்த்திடு மடவனமே
கருவரைநெக்குட னுருகமிழற்றுமொர் கிளியரசே
கருணைசெயத்தகு மளியனிடத்தெனு மொழிபுகலா
அருளில்புனத்தவர் மகளிருபொற்பதம் வருடல்செயா
அவண்முனெடுத்துநின் முடியின்முடித்திடு கரமலராற்
பருவயிரப்புய சயிலன்முழக்குக சிறுபறையே
பருதிபுரிச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே. (கூ)

### முருகப்பெருமான் வள்ளி நாயகியைப் பாராட்டிய செய்தி கூறப்படுகிறது

(இ–ள்) பெருகு சுவை தெளி நறவு ஒழுக கனி கனி அமுதே—பெருகும் சுவையுள்ள தெளிந்த தேன் ஒழுகும் வண்ணம் பழுத்த பழமாகிய அமிழ்தமே;

பிடி நடை கற்றிட அடிகள் பெயர்த்திடும் மடம் அனமே — பெண் யானை நடத்தலைக் கற்றிடும்படி கால்களைப் பெயர்த்து (மெல்ல நடக்கின்ற) இளைய அன்னப் பறவையே;

கரு வரை நெக்கு உடன் உருக மிழற்றும் ஓர் கிளி அரசே — (தான் வாழும்) கரியமலை நெகிழ்ந்து ஒருசேர உருகும்படி (இனிய சொற்களைப்) பேசும் ஒப்பற்ற கிளி அரசே;

கருணை செய தகும் அளியன் இடத்து எனும் மொழி புகலா — எளியேனிடத்தில் அருள் செய்யத்தகும் என்னும் சொற்களைக் கூறி;

அருள் இல் புனத்தவர் மகள் இரு பொன் பதம் வருடல் செயா — இரக்கமில்லாத புனத்தையுடையவராகிய குறவர்தம் மகளாகிய வள்ளி நாயகியின் பொன் போன்ற அடிகளைத் தடவுதல் செய்து;

அவள் முன் எடுத்து நின் முடியில் முகிழ்த்திடு கரம் மலரால்— அவளுக்கு முன்னே உயர்த்து உனது முடியில் கூப்பப்பெறும் கையாகிய தாமரை மலரால்;

பரு வயிரம் புயம் சயிலன் பரிதி புரி சிறு குமரன் முழக்குக சிறு பறை—பெரிய வயிரம் போன்ற தோளாகிய மலையையுடையவனே! பரிதிபுரிச் சிறு குமரனே! சிறு பறை முழக்குக. (எ—று)

முடிபு :— கனியமுதே, மடவனமே, கிளியரசே, அளியனிடத்து கருணை செயத்தகும் எனும் மொழி புகலா, புனத்தவர் மகள் இரு பதம் வருடல் செயா, அவள் முன் எடுத்து முடித்திடு கரமலரால் புயசயிலனே! குமரனே! சிறுபறை முழக்குக.

(கு—ரை.) தெய்வங்களைத் தொழும்பொழுது தலைக்குமேல் கைகுவித்துத் தொழல் வேண்டும் என்பது மரபு. அவ்வாறு முருகன் வள்ளியைத் தொழுதான் என்க.

91. இழுமென்மொழித்தெளி தமிழின்வடித்திடு நவரசமே
இதயவிருட்டற வுணர்விலுதித்திடு சுடரொளியே
கழுவுமணிக்கல னடுவிலிழைத்திடு குலமணியே
கனிதருமுக்கனி யொடுவடிகட்டிய சுவையமுதே
ஒழுகுநறைச்செழு மலர்விரியக்கமழ் புதுமணமே
உருகுமுளத்தருள் பெருகியுவட்டெழு சலநிதியே
பழமறைகட்கொரு முதல்வன்முழக்குக சிறுபறையே
பருதிபுரிச்சிறு குமரன்முழக்குக சிறுபறையே. (௯௦)

## முருகனைப் பலவகையாகப் பாராட்டியது

இழும் என் மொழி தெளி தமிழின் வடித்திடு நவம் ரசமே— இழும் என்னும் நல்ல ஓசையையுடைய சொற்களைப்பெற்றுள்ள தெளிவான தமிழினின்றும் வடித்தெடுக்கப்பெறும் ஒன்பது சுவையாயுள்ளவனே;

இதயம் இருட்டு அற உணர்வில் உதித்திடு சுடர் ஒளியே — மனத்திலுள்ள (அறியாமையாகிய) இருள் நீங்க அறிவில் தோன்றுகின்ற விளங்கும் ஒளியாயுள்ளவனே;

கழுவும் மணி கலன் நடுவில் இழைத்திடு குலம் மணியே — தூய்மை செய்யப்பட்ட இரத்ன அணியின் நடுவே வைத்து இழைத்திட்ட சிறந்த நாயக மணியே;

கனி தரு மு கனியொடு வடி கட்டிய சுவை அமுதே — பழுத்த (வாழை பலா மா என்னும்) மூன்று பழச்சாற்றோடு (கலந்த) வடித்த சுவையையுடைய அமிழ்தமே;

ஒழுகு நறை செழு மலர் விரிய கமழ் புது மணமே — ஒழுகுகின்ற தேனையுடைய கொழுத்த மலர்கள் மலர (அப்பொழுது அதிலே) மணக்கும் புதிய மணமாயுள்ளவனே;

உருகும் உளத்து அருள் பெருகி உவட்டு எழு சலநிதியே — உருகும் (அன்பர்) மனத்திலே அருளாகிய வெள்ளம் பெருக்கெடுத்துத் ததும்பி எழுதற்குக் காரணமான கடலே;

பழ மறைகட்கு ஒரு முதல்வன்—பழைய வேதங்கட்கு ஒன்றாகிய முதல்வனாயுள்ளவனே;

முடிபு:— நவரசமே! சுடரொளியே! குலமணியே! சுவையமுதே! புதுமணமே! சலநிதியே! முதல்வன்! குமரன்! சிறுபறை முழக்குக.

---

## ௰. சிறுதேர்ப் பருவம்.

92. போரோடு படைதுறந் துடறிறந் தோடுசெம்
புனலோட வோடிநிமிரும்
புணரிப் பெருந்தானை யவுணப் படைத்தலைவர்
பூதப் படைத்தலைவர்முன்

தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட
தழல்விழிக் கெதிர்செலாத
தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமமும்
தாலிக்கு வேலிகொலெனப்

*பீரோடு கொங்கைக்க ணீரோடு வெள்ளருவி*
*பெருகக் கடைக்கணிற்கும்*
*பெய்வளை யவர்க்கோத வவர்விழிக டொறுமிளம்*
*பேதையர்கள் கண்டொறுமெனத்*

*தேரோடு மொருபெருஞ் சிலையோடு நின்றவன்*
*சிறுதே ருருட்டியருளே*
*திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர*
*சிறுதே ருருட்டியருளே* (க)

**தோற்றேடிய அவுணப் படைத்தலைவர் தம் மனைவியர்க்குப் பூதப்படைத் தலைவர்முன் தங்கட்கு முருகன் வேலியாயிருந்தான் என்று சொல்ல, அம்மனைவியர் கண்முன் முருகன் தோன்றிய காட்சி கூறப்படுகிறது.**

(இ—ள்) போரோடு படை துறந்து உடல் திறந்து ஓடு செம் புனல் ஓட ஓடி நிமிரும் புணரி பெருதானை அவுணர் படைத்தலைவர்- போர்த் தொழிலோடு படைக்கலங்களையும் துறந்து உடம்பு பிளந்து அதினின்றும் சிவந்த இரத்தநீர் ஓடும்படி புறமுதுகிட்டு ஓடி அவ் வோட்டத்தில் மிகுகின்ற கடல்போன்ற பெரிய அவுணசேனையின் படைத்தலைவரானவர்;

பூதம் படை தலைவர்முன் தாரோடு அவிழ்ந்திட்ட குஞ்சிக்கு இமைத்திட்ட தழல் விழிக்கு எதிர் செலாத தாளுக்கு வாள் சோர் தட கைக்கு நாமம் நும் தாலிக்கு வேலி எனு — (தங்களை அழிக்கும்) பூதகணப் படைத்தலைவர் முன்பாக மாலைகளுடன் அவிழ்ந்த தலை மயிர் உடையார்க்கும், (அஞ்சி) இமைத்த தீப்போன்ற கண்களை யுடையார்க்கும், (போர்கருதி) எதிர் நடவாத கால்களையுடையார்க்கும், வாட்படை சோர்ந்த பெரிய கைகளையுடையார்க்கும், (எங்களைப் போலவே) அச்சந் தங்கிய உங்களது தாலிக்கும் (தோற்றார்மேல் படைதொடுக்க வேண்டாமென்று ஆணையிட்ட முருகக் கடவுள்) வேலி ஆயினர் என்று; (கொல் : அசை நிலை.)

பீர் ஓடு கொங்கைக்கண் நீரோடு வெள் அருவி பெருக கடைக் கண் நிற்கும் பெய்வளையவர்க்கு ஓத — பசலை படர்ந்த நகிலி னிடத்தே (கண்ணிலிருந்து துளியாய்ப் பெருகாமல்) நீராய் ஓடு கின்ற வெள்ளருவி பெருக்கெடுக்க (தம் கணவர் வரவைப் பார்த்து) கடைவாயிலில் நிற்கும் சிந்தும் வளையலையுடைய மனைவியர்க்கும் (உன் பெருமையைப்பற்றிச்) சொல்ல;

அவர் விழிகள் தொறும் இள பேதையர்கள் கண் தொறும் என தேரோடும் ஒரு பெரு சிலையோடும் நின்றவன் — அதனைக் கேட்ட அப்பெண்கள் கண்கள் தோறும், (விளையாட்டு மகளிராகிய) இளம் பேதையர் விழிகள் தோறும் (இப்பொழுது உருட்டும் சிறு

தேரோடு நின்றாற்) போல (போர் செய்வதற்கு ஏறிய) பெருந் தேருடனும் ஒப்பற்ற வில்லுடனும் (அப்பொழுது) நின்றருளி யவனே!

திரு வளர வளர் கந்தபுரி வளர் இள குமர சிறு தேர் உருட்டி யருள்—இலக்குமி எழுந்தருளியிருக்கும்படி வளர்ந்துள்ள கந்த புரியில் வளரும் இளைய குமாரனே! சிறிய தேரினை உருட்டி விளை யாடுவாயாக. (எ—று)

முடிபு:— போருடனே படையைத் துறந்து செம்புனல் ஓட ஓடி நிமிரும் அவுணப் படைத்தலைவரானவர், கொங்கைக் கண் அருவி பெருகக் கடைக்கண் நிற்கும் பெய்வளையவர்க்கு "பூதப்படைத்தலைவர்முன் அவிழ்ந்திட்ட குஞ்சிக்கு, இமைத் திட்ட விழிக்கு, எதிர் செலாத தாளுக்கு, வாள் சோர்ந்த கைக்கு, நும் தாலிக்கு (முருகன்) வேலி என" ஓத, அவர் விழிகள் தொறும் 'இளம் பேதையர் கண்டொறும் எனத்' தேரோடும் சிலையோடும் நின்றவனே! குமரனே! சிறு தேரு ருட்டியருள்,

(கு—ரை) போரில் தலைமயிர் அவிழ்ந்தாரையும், கண் இமைத் தாரையும், பின்னே அடியிட்டாரையும், வாள் சோர்ந்தாரையும் கொல்லுதல் அறமன்றாதலின் (தொல்-புற-நூ. 10—நச்) அத்தகைய அவுணரைக் கொல்லற்க என்று பூதகணங்கட்கு முருகன் ஆணை யிட்டதால் அவுணர்க்கு வேலி ஆயினன் என்க. 'அவர் விழிகள் தொறும்' என்பதற்கு 'அவர் மனக்கண் தொறும்' என்று உரைப் பினும் அமையும். தம் கணவரைப் பாதுகாத்த அருள்பற்றி அவு ணப் படைத்தலைவருடைய மனைவியர் முருகன் திருவுருவை எண்ணியிருப்பர் என்றவாறு.

93. கம்பக் களிற்றுக் கடற்றானை வீரர்கட்
கடையிற் கிடைக்கனலெழக்
கண்டொட் டுனுஞ்சில மருட்பேய் கரிந்தெழு
கடுங்குருதி வெள்ளமூழ்கித்

தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை யினைச்சுடு
கனற்சிகை யெனப்பதைப்பச்
சூட்டிறைச் சிக்குச் சிணுங்குங் குறட்பேய்க்கொர்
சூர்ப்பேய் கொழுந்தசைகள்கோத்

தம்பிற் சுடத்தான் கவந்தமொடு தொந்தமிட்
டாடும் பறந்தலைநிலத்
தானைப் பிணக்குன்று மவுணப் பிணக்காடும்
அளறுபட் டொழியநின்றோர்

செம்பொற் றடந்தே ருாட்டிவரு சேவகன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (உ)

உடற்குறையுடன் பேய்க்கோலம்

**வீரர்தலை, கவந்தமொடு தொந்தமிட்டு ஆடும் பறந்தலையிடத்தே பிணங்கள் சேருகும்படி முருகன் தேர் செலுத்திய செய்தி கூறப்படுகிறது.**

(இ-ள்) கம்பம் களிற்று கடல் தானை வீரர் கண் கடையில் கடைக்கனல் எழ—தறியிலே கட்டப்பெறும் ஆண் யானையையுடைய கடல்போன்ற படை வீரரது விழியின் கடையில் ஊழித்தீப்போன்ற நெருப்புத் தோன்ற;

கண் தொட்டு உணும் சில மருள் பேய் கரிந்து எழு கடு குருதி வெள்ளம் மூழ்கி—இறந்த வீரரின் விழிகளைத் தோண்டி உண்ணும் சில மருட்சியையுடைய பேய்கள் (அவ்விழிக் கனலில் அகப்பட்டுக்) கரிந்து, (அவ்வெப்பம் தணிய) எழுகின்ற வேகமுள்ள இரத்த வெள்ளத்திலே மூழ்கி;

தும்பை தலை செம் மயிர்ச்சிகையினை சுடு கனல் சிகை என பதைப்ப — (இறந்த அவுண வீரருடைய) தும்பை மலரோடு கூடிய தலையிலே உள்ள இயற்கையிலேயே சிவந்த மயிர் முடியினைச் சுடு கின்ற தீக்கொழுந்து என்று கருதி (அணுகாமல்) பதைத்து நிற்ப;

சூட்டு இறைச்சிக்கு சிணுங்கும் குறள் பேய்க்கு ஓர் சூர் பேய் கொழு தசைகள் கோத்து அம்பில் சுட — சுட்ட இறைச்சியைப் பெறுவதற்கு முணுமுணுத்து அழும் பிள்ளைப் பேய்க்கு ஓர் அஞ்சாத பேய் கொழுத்த தசையை அம்பிலே கோத்து (செம்மயிர்ச் சிகையைக் கனற்சிகை என்று கருதி) அதில் சுட;

தான் கவந்தமொடு தொந்தமிட்டு ஆடும் பறந்தலை — (செம்மயிர்ச் சிகையுடன் கூடிய தலையாகிய) தான் தனது உடற் குறையுடன் இணைந்து ஆடுகின்ற போர்க்களம்;

பறந்தலை நிலத்து ஆனை பிணம் குன்றும் அவுணர் பிணம் காடும் அளறுபட்டு ஒழிய நின்று செம் பொன் தட தேர் உருட்டி வரு சேவகன்—அத்தகைய போர்க் களமாகிய நிலத்திலே யானை களின் பிண மலைகளும் அசுரரது பிணக்காடும் சேறுபட்டொழியும்படி நின்று சிவந்த பொன்னாற் செய்த பெரிய தேரினை உருட்டி வரு கின்ற வீரனே; (எ-று)

முடிபு:— தானை வீரரது கண்கடையிலே கடைக்கனல் எழ, சில பேய் (அக்கனலில் அகப்பட்டு)க் கரிந்து, (அவ்வெப்பந் தீர) குருதி வெள்ளத்தில் மூழ்கிப் (பின் அப்பயத்தால்) செம

மயிற் சிகையைக் கனற்சிகை என்றே கருதிப் பதைப்ப, சிணுங்கும் குறட் பேய்க்கு ஓர் சூர்ப்பேய் தசையை அம்பிற் கோத்துச் சுட (அத்தலையாகிய) தான் தன் கவந்தமொடு தொந்தமிட்டு ஆடும் பறந்தலை நிலத்து, குன்றும் காடும் அளறுபட்டு ஒழிய, பின்று தேர் உருட்டி வரு சேவகன்! குமர! சிறுதேருருட்டியருள்.

(கு—ரை) மருட்பேய் ஆகையால் தும்பை மலரோடு கூடிய செம்மலர்ச் சிகைத்தலையாயிருந்தும் அதனை 'மயிர்ச்சிகை' என்று துணியாமல் 'கனற்சிகை' என்றே கருதியது. தீயில் மலர் இராது. சூர்ப்பேய்—அம்மருட் பேய்களில் அஞ்சாத ஓர் பேய். தான் — வீரரது அறுபட்ட தலை. சிலர் 'தான்' என்பதற்குக் 'குறட்பேய்' என்று உரை கொண்டுள்ளனர் அவ்வுரை பொருந்து மேற்கொள்க.

94. வண்டேறு செந்நிறப் பங்கித் தலைக்கமல
வனமூடு குருதியாற்று
மால்யானை கையெடுத் தார்த்துநீந் தப்புணரி
மகரமீ னெனநினைந்து
கொண்டேகு சிறுகுடர்ப் பெருவலை யெடுத்தெறி
குறட்பேய் நெடுஞ்சினமுறக்
குறுநரி பிடித்தீர்ப்ப வலறுவதும் வீரர்தொடு
கொலைநேமி யவுணருயிரை
உண்டேகு வதுமொருவன் விடவோ விடுங்கரிக்
குதவவரு திகிரியேய்க்கும்
ஒல்லென் பறந்தலை மறந்தலைக் கொண்டசூர்
உய்த்திட்ட விந்த்ரஞாலத்
திண்டேரை யுருளாது நிற்கப் பணித்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (ந)

**முருகக் கடவுள் போர் செய்த போர்க்கள நிகழ்ச்சி திருமால் கசேந்திரனைக் காத்த நிகழ்ச்சியைப்போல் விளங்குவதாக கூறப்படுகிறது.**

(இ—ள்) வண்டு ஏறு செம் நிறம் பங்கி தலை கமலம் வனம் மூடு குருதி யாற்று — வண்டுகள் (ஈக்கள்) மொய்க்கப்பெற்ற செந்நிற மயிரையுடைய தலையாகிய தாமரை மலர்க்காடு மூடியுள்ள இரத்த யாற்றிலே;

மால் யானை கை எடுத்து ஆர்த்து நீந்த—பெரிய யானையானது தன் தும்பிக்கையை உயரத் தூக்கிக்கொண்டு ஆரவாரித்து நீந்தா நிற்க;

புணரி மகரம் மீன் என நினைந்து கொண்டு ஏகு சிறு குடர் பெரு வலை எடுத்து எறி குறள் பேய் நெடு சினம் உற குறு நரி பிடித்து ஈர்ப்ப அலறுவதும்—கடலில் வாழும் மகரம் என்னும் பெரு மீன் என்று எண்ணித் தான் எடுத்துக்கொண்டு செல்லும் சிறு குடராகிய பெரிய வலையை எடுத்து வீசும் சிறு பேய்க்குப் பெருங்கோபம் உண்டாகும்படி, சிறிய நரியொன்று அவ்யானையைப் பிடித்து இழுப்ப, அவ்யானை அலறுகின்ற காட்சியும்:

வீரர் தொடு கொலை நேமி அவுணர் உயிரை உண்டு ஏகுவதும்—(அப்பொழுது) நவவீரர் செலுத்தும் கொலைச் சக்கரம் அசுரருடைய உயிரை உண்டு செல்லுங் காட்சியும்:

ஒருவன் விட ஓலிடும் கரிக்கு உதவ வரு திகிரி ஏய்க்கும் ஒல்லென் பறந்தலை — திருமாலாகிய ஒப்பற்றவன் செலுத்த, ஆதி மூலமே! என்று ஓலமிடும் கசேந்திரனாகிய யானைக்கு உதவ வருகின்ற சக்கராழ்வானை நிகர்க்கின்ற ஒல்லென்னும் போர்க்களத்திலே;

மறம் தலை கொண்ட சூர் உய்த்திட்ட இந்திர ஞாலம் திண் தேரை உருளாது நிற்க பணித்தவன் — வீரத்தைத் தன்னிடத்தே கொண்ட சூரபத்மன் செலுத்திய இந்திர ஞாலம் என்னும் வலிய தேரை உருளாமல் நிற்கக் கட்டளையிட்டவனே! (எ-று)

முடிபு:— தலையாகிய கமலவனம் மூடு குருதியாற்றிலே, யானை கையெடுத்து ஆர்த்து நீந்த, (அதனை) மகரமீன் என நினைந்து (பற்ற எண்ணி), குடராகிய வலையை எடுத்து எறி குறட்பேய் சினமுற (சினமுறும்படி), குறு நரி (யானையை) பிடித்து ஈர்ப்ப, (அவ்யானை) அலறுவதும், வீரர் தொடு நேமி உயிரை உண்டு ஏகுவதும், "ஒருவன் ஓலிடும் கரிக்கு உதவ விட வரு திகிரி ஏய்க்கும்" ஒல்லென் பறந்தலையிடத்தே, சூர் உய்த்திட்ட இந்திர ஞாலத் தேரை உருளாது நிற்கப் பணித்தவன்! குமர! சிறு தேருருட்டியருள்,

95\. பைங்கட் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோற்
படருந்தன் வேகத்தி னுக்கப் பறக்கப்
பறந்தலைச் செந்தலையறும்

வெங்கட் டயித்திய ருடற்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்டூர்ப்ப தெனவுடுவுகப்

பொங்கற் கடற்குட்ட மட்டதிக் குந்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடற் சேடன் படந்தூக்கி யார்க்கும்
புகைப்படலம் வடவாமுகச்
செங்கட் பசுந்தோகை வாம்பரி யுகைத்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (ச)

முருகப்பெருமான் மயிலாகிய ஊர்தியைச் செலுத்திய சிறப்பு கூறப்படுகிறது.

(இ—ள்) பை கண் சிறை கால் கடைக்கால் செய — பசுமையான கண்களையுடைய சிறகினால் எழும் காற்று ஊழிக் காலத்துக் காற்றைப்போல் (வீசுதலைச்) செய்யவும்;

படரும் தன் வேகத்தில் கிரிகள் விரி சிறை படைத்து எழுவ போல் ஒக்க பறக்க — பறந்து செல்லும் தனது வேகத்தினாலே மலைகள் விரியும் சிறகினைப் பெற்று எழுவனபோல ஒருசேரப் பறக்கவும்;

மீ செல்லும் மா செல் என பறந்தலை செம் தலை அறும் வெம் கண் தயித்தியர் உடல் குறை தலை குறை விரைந்து உயிரினை தொடர்ந்து செல — 'மேலே செல்லும் கரிய மேகம் போல' போர்க்களத்திலே சிவந்த மயிரையுடைய தலை அற்ற கொடிய விழியையுடைய அசுரரின் உடற்குறையும் தலைக்குறையும் (படருந் தன் வேகத்தினால்) விரைவாய்த் தம் உயிரைத் தொடர்ந்து செல்லவும்;

பூ மாசி விண் தூர்ப்பது என உடு உக — 'மலர் மழையை வானுலகம் சிந்துவதைப்போல' (படருந் தன் வேகத்தினால்) வான் மீன்கள் சிந்தவும்;

பொங்கல் கடல் குட்டம் அட்ட திக்கும் தமில் போர் செய — (படருந்தன் வேகத்தினால்) பொங்கும் கடற் பள்ளங்கள் எட்டுத் திசையிலும் சென்று தமக்குள் (அலை எறிந்து) போர் புரியவும்;

பார் கவிழ — (படருந்தன் வேகத்தினாலே) நிலம் கவிழவும்;

வெம் பொறி உடல் சேடன் படம் தூக்கி ஆர்க்கும் புகை படலம் வடவாமுகம் செம் கண் பசு தோகை வாம் பரி உகைத்தவன் — (கண்டார்க்கு) வெம்மையைத் தரும் புள்ளிகளையுடைய உடம்பைப் பெற்றிருக்கும் பாம்பு தனது படத்தை எடுத்துக்கொண்டு சீறுதற்குக் காரணமான, புகைத் திரளுடன் கூடிய வடவைத்தீயை ஒத்த சிவந்த விழிகளையும், பச்சையான இறகினையும் உடைய, தாவும் (மயிலாகிய) ஊர்தியைச் செலுத்தியவனே; (எ-று)

முடிபு:— சிறைக்கால் கடைக்கால் செயவும், கிரிகள் சிறை படைத்து எழுவ போல் படரும் (மயில்) தன் வேகத் திறல் ஒக்கப் பறக்கவும், 'மீச் செல்லும் மா செல் என' தயித்தியர் உடற் குறையும் தலைக் குறையும் விரைந்து உயிரினைத் தொடர்ந்து செலவும், 'விண் பூமாரியைத் தூர்ப்பதென' உடு உகவும், கடல் போர் செயவும், பார் கவிழவும் தோகையை யுடைய பரியை உகைத்தவனே! குமரனே! சிறு தேர் உருட்டி யருள்.

(கு—ரை) பைங்கண் என்றது பீலிக் கண்களை — சேடன் என்றது மயில் தன் அலகிற் கோத்த பாம்பை.

96. நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு
நிகளத் தடங்குன் றுவான்
நிமிருங் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கொலெனுக்

கைவைத் திடப்பரி முகஞ்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளும்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டிற் பிறந்துபிரியா

மெய்வைத்த காதன்மை யரமகளிர் பேராய
வெள்ளந் திளைத்தாடியோர்
மென்னடைக் கேக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்க ளுடனுலாவும்

தெய்வப் பிடிக்குக் கிடைத்தவொரு மழகளிறு
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (ரு)

காவிரித் திருநாட்டின் சிறப்பும், முருகக் கடவுள் தெய்வயானை அம்மையை மணந்த சிறப்பும் கூறப்படுகின்றன.

(இ—ள்) நால் கோட்டு நிகளம் தட குன்று நெய் வைத்த கூந்தல் பிடிக்கு உதவ — நான்கு கொம்புகளையுடையதும் சங்கிலி பூண்டதும் ஆகிய பெரிய குன்றம் போன்ற ஐராவதமாகிய யானை யானது (தனது) நெய்ப்பைப் பெற்ற கூந்தலையுடைய பெண் யானைக்கு உதவும் பொருட்டு;

வான் நிமிரும் கதிர் குலை செந்நெலை பாகுபடு நெடு இலை கன்னல் கொல் எனு கை வைத்திட பரி முகம் செய்து வெய்யோன்

கூடு பரியை நட்பு கொளும் கழனி — வானுலகத் தளவும் உயர்கிற கதிர்க் கொத்துகளோடு கூடிய செந்நெற் பயிர்களை வெல்லப்பாகு தோன்றப்பெறும் நீண்ட இலையையுடைய கரும்போ என்று கருதி அதனை எடுக்கும்பொருட்டு கையை வைக்க, அக்கதிருடன் கூடிய செந்நெல் குதிரை முகத்தைப்போல் வளைதலைச் செய்து, சூரியனது விரைந்த குதிரையை உறவு கொள்வதற்கு இடமான வயல்கள்:

(கழனி) விரி காவிரி திரு நாட — அத்தகைய வயல்கள் பெருகு தற்குக் காரணமான காவிரி; அக்காவிரி பாயும் அழகிய நாட்டை யுடையவனே !

கற்பகம் காட்டில் பிறந்து பிரியா மெய் வைத்த காதன்மை அர மகளிர் பேர் ஆய வெள்ளம் திளைத்து ஆடி ஓர் மெல் நடைக்கு ஏக்கற்ற பிடி பின் பிடிக்க முலை வேழங்களுடன் உலாவும் தெய்வம் பிடிக்கு கிடைத்தது ஒரு மழ களிறு — கற்பகச் சோலையிலே தோன்றி, நீங்காத உண்மையை வைத்த அன்பையுடைய தேவப் பெண்களின் பெரிய ஆய வெள்ளத்திலே பயின்று, விளையாடி, ஒப்பற்ற மென்மையாகிய நடைக்கு ஏமாந்த பெண் யானை (அதனைக் கற்றுக்கொள்ள)ப் பின்பற்றிவர, நகிலாகிய யானைகளுடன் உலாவித் திரியும் தெய்வயானை அம்மையார்; அத் தெய்வப் பிடிக்குக் கணவ னுகக் கிடைத்த ஒப்பற்ற இளைய யானை போன்றவனே ! (எ-று)

முடிபு:— தடங்குன்ற (ஐராவதம்) பிடிக்கு உதவ செந் நெலைக் கன்னல் கொல் என கை வைத்திட, அக்கதிருடன் கூடிய நெல் பரிமுகம் செய்து, வெய்யோன் பரியை நட்புக் கொளும் கழனிவிரி காவிரித் திரு நாடனே ! கற்பகக் காட்டில் பிறந்து, அர மகளிர் ஆய வெள்ளம் திளைத்தாடி, பிடிபின் பிடிக்க வேழங்களுடன் உலாவும் தெய்வப் பிடிக்குக் கிடைத்த களிறே ! சிறு தேருருட்டி அருள்.

97. பற்றுவிற் காமன் கொடிப்படைக் கூரெலாம்
படைவீடு கயல்கடாவும்
பழனங்க ளோவத்ர சாலைபூஞ் சோலைப்
பரப்பெலாங் காற்றேரோடும்

கொற்றவங் கங்குற் கடாயானை யுங்கட்டு
கூடமே யெனினுமருதக்
கோமகன் குடிகொண்ட சோணாடு சேணாடு
குங்குமங் கொட்டுதிண்டோட்

பொற்றடங் குன்றினிரு கொங்கைப் பொருப்புமொரு
பூங்குழற் காடும்வெயில்கால்
புனைமணிக் கலையல்குன் மாக்கடலு மேந்தியொர்
புனத்தின்கண் மிகநுடங்கும்

*சிற்றிடைக் கொல்குமென் கொடிபடர நின்றவன்*
*சிறுதே ருருட்டியருளே*
*திருவளர வளர்கந்த புரிவளா ரிளங்குமர*
*சிறுதே ருருட்டியருளே.* (௬)

**சோழநாடு காமனுக்குரிய படைவீடு முதலியவற்றைப்பெற்றதாயினும், மருதக் கோமகனுக்குரிய நாடென்றும், முருகன், தோள்களாகிய குன்றில் வள்ளியாகிய கொடி படர நின்றுரென்றும் இப்பாட்டு கூறுகின்றது.**

(இ—ள்) பற்று வில் காமன் கொடி படைக்கு ஊர் எலாம் படை வீடு—ஆசையைச் செய்யும் வில்லையுடைய மன்மதனது (மகளிராகிய) கொடியை ஏந்திய படை வீரர்க்கு (சோழ நாட்டில் உள்ள) ஊர்களெல்லாம் படை தங்கியிருக்கும் வீடு;

கயல்கள் தாவும் பழனங்களோ அத்ர சாலை — கயல் மீன்கள் துள்ளும் வயல்களோ படைக்கலக் கொட்டில்;

பூ சோலை பரப்பு எலாம் கால் தேரொடும் கொற்றம் அம் கங்குல் கடா யானையும் கட்டு கூடமே எனினும் — மலரையுடைய காக்களின் பரப்பெல்லாம் தென்றற் காற்ருகிய தேருடனே வெற்றியைத்தரும் அழகிய இரவாகிய ஆண் யானையையும் கட்டப்பெறும் கூட சாலையாக இருப்பினும்;

மருதம் கோமகன் குடிகொண்ட சோணுட — மருத நிலத்தின் அரச குமாரனுகிய இந்திரனும் குடியிருப்பாகக்கொண்டு (அரசாட்சி செய்யப்பெறும்) சோழ நாட்டை உடையவனே !

சேண் நாடு குங்குமம் கொட்டு திண் தோள் பொன் தட குன்றில் — உயர்தலையே கருதிய குங்குமக் குழம்பு அப்பிய வலிய தோளாகிய பொன்னிறம் பெற்ற பெரிய மலையின்மேல்;

இரு கொங்கை பொருப்பும் ஒரு பூ குழல் காடும் வெயில் கால் புனை மணி கலை அல்குல் மா கடலும் ஏந்தி ஓர் புனத்தின்கண் மிக நுடங்கும் சிறு இடைக்கு ஒல்கும் மெல் கொடி படர நின்றவன் — இரண்டு நகிலாகிய மலையையும், ஒப்பற்ற மலரணிந்த கூந்தலாகிய காட்டையும், ஒளியை வீசுகின்ற புதிய மணிகள் இழைத்த மேகலை அணிந்த அல்குலாகிய பெரிய கடலையும் சுமந்து ஓர் தினைப்புனத்தின்கண் (இருந்து) மிகத் துவளும் சிறிய இடையிடத்தே மட்டும் தளர்கின்ற (வள்ளி நாயகியாகிய) மென் கொடி படர நின்றவனே ! (எ—று).

முடிபு :— காமன் படைக்கு ஊரெலாம் படைவீடு, பழனங்களோ அத்ரசாலை, சோலைப் பரப்பெலாம் தேரொடும் யானை

யும் கட்டு கூடமே எனினும், மருதக் கோமகன் குடிகொண்ட சோணாட! தோளாகிய குன்றிலே, ஏந்தி நுடங்கும் சிற்றிடைக்கு ஒல்கும் (வள்ளியாகிய) கொடி படரநின்றவன்! குமர! சிறு தேருருட்டி அருளே.

தோளாகிய குன்றில் கொடிபடர நின்றவன் என்று கூட்டுக.

(கு—ரை) சோழநாட்டு ஊர்களிலே காமனுக்குப் படைவீரராகக் கூறப்பெறும் அழகிய மகளிர் வாழ்வர்; வயல்களிலே அவனுக்கு வில்லாகச் சொல்லப்பெறுங் கரும்பும் அம்பாகச் சொல்லப்பெறுந் தாமரையும் நீலமும் நிறைந்திருக்கின்றன; சோலையிடமெல்லாம் அவனுக்குத் தேராகிய தென்றற் காற்று வீசுகின்றது; அச்சோலை வெயில் நுழைதற்கியலாதபடி செறிந்து நிற்றலின் அவனுக்கு யானை என்று சொல்லப்பெறும் இருள் செறிந்து நிற்கின்றது என்று கருத்து. வள்ளியாகிய கொடி, பொருப்பையும் (குறிஞ்சியையும்) காட்டையும் (முல்லையையும்) கடலையும் (நெய்தலையும்) ஏந்தி நின்றும் ஓர் தினைப்புனத்தின்கண் வாழ்ந்து சிற்றிடையிடத்தே மட்டும் தளர்கின்றது என்ற நயம் அறிந்து இன்புறத்தக்கது. சிற்றிடைக்கு உருபு மயக்கம்.

98\. கோல்பாய் பசுமட்புண் ணசும்புகும் பத்தடங்
குன்றுகவுண் மடைதிறந்து
கொட்டுநெட் டருவியொடு தேனருவி யுந்திரை
கொழித்துடன் கோப்பமேதிப்
பால்பாய் பெருக்கா றுவட்டெழுத றன்றுணைப்
பாவைய ரொடுங்குறுகுமப்
பாகீ ரதிக்குநிகர் தண்டுறை தொறுந்திசைப்
பாலர்மேற் படையெடுத்து
வேல்பாய் நெடுங்கட் கடற்றுணை யொடுமொருவன்
மேற்செல்ல நாற்றிசையிலும்
வெற்றிக் கயற்கொடி யெடுத்தென வெடுத்தெறியும்
வெண்டிரை கிழித்துவெடிபோம்
சேல்பாய் தடம்பணை யுடுத்தகா விரிநாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (எ)

**யானையின் மத அருவியொடு தேன் அருவியும் உடன்கோப்ப எருமைப் பால் ஆருய்ப் பெருகுவது யமுனையாறும் சோணை என்னும் சரசுவதி யாறும் உடன்வரக் கங்கையாறு பெருகுவதைப் போன்ற தண் துறை தோறும், நாற்றிசையிலும் கயல் மீன்கள் துள்ளி மேலெழுவது மன்மதன் நாற்றிசையிலும் படை எடுக்கவேண்டித் தனது வெற்றிக் கொடியை நாற்றிசையிலும் உயர்த்தியது போலும் என்று நாட்டைச் சிறப்பித்தது.**

(இ–ள்) கோல் பாய் பசு புண் அசும்பு கும்பம் தட குன்று — ஈட்டியாகிய கோல் பாய்தலால் (உண்டாகிய) பச்சைப் புண்ணி லிருந்து (இரத்தம்) துளிக்கப்பெறும் கும்பத்தலத்தையுடைய பெரிய குன்று போன்ற யானையானது;

கவுள் மடை திறந்து கொட்டு நெடு அருவியொடு தேன் அருவியும் திரை கொழித்து உடன் கோப்ப மேதி பால் பாய் பெருக்கு ஆறு உவட்டு எழுதல் — கன்னத்தின் மடையைத் திறந்து சொரி யும் நீண்ட மத அருவியுடனே (மலரிலிருந்து பெருகும்) தேன் அருவியும் அலை வீசித் தன்னுெடு ஒன்ருய்க் கலந்துகொள்ள எரு மைப்பால் பாய்கிற பெருக்காறு மிகுந்தெழுதலானது;

தன் துணை பாவையரொடும் குறுகும் அ பாகீரதிக்கு நிகர் தண் துறை தொறும்—தனது துணைப் பெண்களாகிய கரிய யமுனை யுடனும் சிவந்த சோணையுடனும் வருகின்ற அந்த (வெண்மையான) கங்கையாறு (உவட்டெழுதலுக்கு) ஒக்கும் குளிர்ந்த நீர்த்துறைகள் தோறும்;

திசை பாலர் மேல் படை எடுத்து வேல் பாய் நெடு கண் கடல் தானையொடும் ஒருவன் மேல் செல்ல நால் திசையிலும் வெற்றி கயல் கொடி எடுத்து என — திசைக் காவலராகிய (இந்திரன் முதலியவர்) மேல் படையெடுத்தலைத் தொடங்கி வேல்போல் பாயும் நீண்ட விழிகளையுடைய (மகளிராகிய) கடல் போன்ற சேனையுடனே ஒருவனுகிய காமன் அவர்கள்மேல் செல்லுவதற்காக நான்கு திக்கு களிலும் வெற்றியைத்தரும் மீனக்கொடியை உயர்த்திஞற் போல;

எடுத்து எறியும் வெண் திரை கிழித்து வெடி போம் சேல் பாய் தட பணை உடுத்த காவிரி நாட — தூக்கி வீசுகின்ற வெண்மை யான அலைகளைப் பிளந்துகொண்டு துள்ளிப் போகும் சேல் மீன்கள் பாய்வதற்கிடமான பெரிய வயல்களாற் சூழப்பெற்ற காவிரியாறு பாயும் நாட்டையுடையவனே! (எ–று)

*முடிபு :— தடங்குன்று (யானை) திறந்து கொட்டு (மத) அருவியொடு தேன் அருவியும் கொழித்து கோப்ப மேதிப்பால் பாய் பெருக்காறு உவட்டெழுதலானது தனது துணைப் பாவை யரொடும் குறுகுகின்ற பாகீரதிக்கு நிகரும் துறைதொறும்*

"ஒருவன் திசைப் பாலர்மேல் படையெடுத்துத் தானையொடும், மேற்செல்ல நாற்றிசையிலும் கயற்கொடி எடுத்தது என" ச் சேல் பாயும் காவிரி நாடனே! குமர! சிறு தேர் உருட்டியருள்.

(கு—ரை.) கும்பம் — யானைத்தலையின் மேலுள்ள பிண்டம் போன்ற தசைத்திரள். கோல் — யானையைத் தண்டிக்கும் ஈட்டி; இது 'வேணுகம்' என்றும் கூறப்பெறும். (பாவையரொடும் குடையும்) என்பது மகாவித்வான் — ரா. பா. ம் அதற்குக் 'காவிரித் துறையிலே யமுனை சோணைகளுடன் கூடிக் கங்கை நீராடுவதுபோற் காட்சியளிக்கும்' என்று உரை கூறிக்கொள்க. யானையின் கரிய மத நீர் யமுனைக்கும், சிவந்த தேன் சோணையாற்றுக்கும் வெள்ளிய பால் கங்கைக்கும் உவமை.

99. மீத்தந்த மாகத்து மேகத்தி னோடுமுடு
மீனிரியல் போகவுகளும்
வெடிவாளை மதியகடுடைத்தூற்று தெள்ளமுத
வெள்ளருவி யாற்பசுந்தண்

காத்தந்த சண்பகப் பூவேரி மாரிசெய்
காவேரி யாயிரமுகக்
கங்கையா கச்செய்து மீட்டுநாற் கோட்டுவெங்
களிறுபிளி றத்தாவிவான்

பூத்தந்த கற்பகக் காட்டினை யுழக்கிவிரி
பொற்று தெழுப்பிமற்றப்
பூந்துகட் படலத்தி னூற்றெய்வ நதியையும்
பொன்னிநதி யாகச்செயும்

தேத்தந்த தண்பணையு டுத்ததீம் புனனாடு
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (அ)

**புனல்நாட்டின் வாளை மீன் வானுலகத்தில் பாய்ந்து காவிரியாற்றைக் கங்கையாறாகவும், கங்கையாற்றைக் காவிரியாறாகவும் செய்கின்றதென்று, புனைந்து கூறுகின்றது.**

(இ-ள்) மீ தந்த மாகத்து மேகத்தினோடும் உடு மீன் இரியல் போக உகளும் வெடி வாளை — வானத்தின் மேலிடத்தே தரப்பட்ட முகிலினோடும் நட்சத்திரங்களாகிய மீன்கள் பின்னடைந்து நீங்கும் படித் துள்ளுகின்ற எழும்பும் வாளைமீனானது;

மதி அகடு உடைத்து ஊற்றும் தெள் அமுதம் வெள் அருவி யால் — திங்களின் நடுவிடத்தைத் தகர்த்து கொட்டச் செய்யும் தெளிந்த அமிழ்தமாகிய வெள்ளிய அருவியினாலே;

பசு தண் கா தந்த சண்பகம் பூ வேரி மாரி செய் காவேரி ஆயிரம் முகம் கங்கை ஆக செய்து — பச்சையான குளிர்ந்த சோலை யிடத்தே தரப்பட்ட சண்பக மரத்தின் மலர்களானவை தேன் மழையைச் செய்வதற்கிடமான காவிரியாற்றை ஆயிரம் முகங்களாகப் பாயும் கங்கையாருகச்செய்து;

மீட்டும் நால் கோட்டு வெம் களிறு பிளிற தாவி — திரும்பவும் (வானுலகத்திலேயுள்ள) நான்கு கொம்புகளையுடைய கொடிய ஐரா வதமாகிய ஆண் யானை (அஞ்சி) ஒலிக்கும்படி மேலே தாவி;

வான் பூ தந்த கற்பகம் காட்டினை உழக்கி விரி பொன் தாது எழுப்பி — உயர்ந்த மலர்களைக் கொடுத்த கற்பக மரங்கள் (நிறைந்த) காடுகளைக் கலக்கி விரியும் பொன் நிறமான மகரந்தப் பொடிகளை (மலரிலிருந்து) எழும்படி செய்து; (மற்று—அசை)

அ பூ துகள் படலத்தினுல் தெய்வம் நதியையும் பொன்னி நதி ஆக செயும் தேன் தந்த தண் பணை உடுத்த தீம் புனல் நாட — அந்த (பொன்னிறமான) மலர்ப் பொடியின் தொகுதியினுல் தெய்வ உலகத்திலுள்ள ஆகாய கங்கையாற்றினையும் பொன்னி என்று பெயர் படைத்த காவிரியாருகச் செய்வதற்கிடமான தேனைத் தந்த குளிர்ந்த வயல் சூழ்ந்த இனிய புனல் நாடனே! (எ—று)

முடிபு:— மேகத்தினோடு உடுமீன் இரியல் போக உகளும் வாளையானது மதியின் அகட்டை உடைத்து ஊற்றும் அமுத அருவியால் காவேரியைக் கங்கையாகச் செய்து, மீட்டும் களிறு பிளிறத் தாவி, கற்பகக் காட்டினை உழக்கி, தாதை எழுப்பி அப் பூந்துகள் படலத்தினுல் தெய்வ நதியையும பொன்னி நதியாகச் செயும் புனல் நாடனே! குமரனே! சிறு தேர் உருட்டி அருள்.

100. கள்ளவிழ் நறுங்கொடிகள் கமுகிற் படர்ந்துபூங்
கற்பகத் தும்படர்தலாற்
காமன் பெருஞ்செல்வ மன்னவர்கள் குழுமியக்
கமுகின் கழுத்தில்யாத்த

ஒள்ளொளிய செம்மணிப் பொன்னூசல் பன்முறை
உதைந்தாட வாடுந்தொறும
ஒண்கமு கொடுந்துணர்ப் பைங்கற் பகக்காடும்
ஒக்கவசை யத்தலையசைத்

தள்ளிலை யலங்கல்வே லெம்பிரா னைப்பாடி
ஆடுகின் றாரெனத்தாம்
அலர்மாரி பொழிவபோ லங்கற் பகத்தெய்வம்
அம்பொன்மலர் மாரி தூர்க்கும்

தெள்ளுதமிழ் விரிபுனற் காவிரித் திருநாட
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (கூ)

**காவிரித் திருநாட்டின் சிறப்பு கூறப்படும்.**

(இ-ள்) கள் அவிழ் நறு கொடிகள் கமுகில் படர்ந்து பூ கற்பகத்தும் படர்தலால் — தேனை வெளிவிடும் நறுமணமுள்ள கொடிகளானவை பாக்கு மரத்தில் படர்ந்து (ப்பின் வானுலகத்திலுள்ள) மலரையுடைய கற்பக மரத்திலும் படர்ந்த காரணத்தினலே;

காமன் பெரு செல்வம் அன்னவர்கள் குழுமி — மன்மதனுடைய பெரிய செல்வத்தினை ஒத்த அழகிய பெண்கள் கூடி;

அ கமுகின் கழுத்தில் யாத்த ஒள் ஒளிய செம் மணி பொன் ஊசல் பல் முறை உதைந்து ஆட—அந்தப் பாக்கு மரத்தின் கழுத்தில் கட்டிய மிக வொளி வாய்ந்த சிவந்த மாணிக்கக் கல் பதித்த பொன்னுற்செய்த ஊசலிலே பல தடவை உந்தி ஆடுதலைச் செய்ய;

ஆடும் தொறும் ஒள் கமுகொடும் துணர் பை கற்பகம் காடும் ஒக்க அசைய — அவர்கள் ஊசலாடும்பொழுதெல்லாம் சிறந்த கமுக மரத்தோடும் பூங் கொத்துகளையுடைய பசுமையான கற்பக மரக்காடும் ஒரு சேர அசைதலால்;

கற்பகம் தெய்வம் அள் இலை அலங்கல் வேல் எம்பிரானை பாடி ஆடுகின்றார் என தாம் தலை அசைத்து அலர் மாரி பொழிவ போல்— கற்பக மரத்தை இடமாகக்கொண்ட தெய்வமானவை (இவ்வூசலாடும் மகளிர்) கூரிய இலை போன்றதும் மாலையை அணிந்ததும் ஆகிய வேற்படையையுடைய எமது தலைவனுகிய முருகனைப் பாடி ஆடுகின்றனர் என்று கருதித் தாம் தம்முடைய தலையை அசைத்து மலர் மழை சொரிவதை நிகர்க்கும்படி;

அம் பொன் மலர் மாரி தூர்க்கும் தெள்ளு தமிழ் விரி புனல் காவிரி திரு நாட — (அக்கற்பகக் காடு) அழகிய பொற்பூ மழையால் அம்மகளிரை மூடுவதற்கிடமான தெளிந்த தமிழ் விரிகின்ற நீரையுடைய காவிரியாறு பாயும் அழகிய நாடனே! (எ—று).

முடிபு :—கொடிகள் கமுகிலே படர்ந்து (வானுலகத்திலுள்ள) கற்பகத்தும் படர்தலால், அன்னவர்கள் குழுமி, அக் கமுகின்

கழுத்தில் யாத்த பொன்னூசலைப் பன்முறை உதைந்து ஆட, (அவர்கள்) ஆடுந்தொறும் கமுகொடும் கற்பகக் காடும் ஒக்க அசைய, “கற்பகத் தெய்வம் (இம்மகளிர்) வேல் எம்பிரானைப் பாடி ஆடுகின்றார் என தாம் தலையசைத்து அலர்மாரி பொழிவ போல்” (கற்பகக் காடு) பொன் மலர் மாரி தூர்க்கும் திருநாட! குமர! சிறுதேருருட்டி அருள்.

(கு—ரை.) ‘கற்பகத் தெய்வம்’ என்றதற்குத் தெய்வத் தன்மை வாய்ந்த கற்பக மரங்கள் என்றுரைப்பினும் அமையும். ‘தலையசைத்து அள்ளிலை அலங்கல் வேல் எம்பிரானைப் பாடி ஆடுகின்றா ரெனத் தாம் அலர் மாரி பொழிவபோல் அங்கற்பகத் தெய்வம் அம் பொன் மலர் மாரி தூர்க்கும்’ என்னும் பகுதி, ‘கற்பகத் தெய்வம் அள்ளிலை அலங்கல் வேல் எம்பிரானைப் பாடி ஆடுகின்றார் எனத் தாம் தலையசைத்து அலர்மாரி பொழிவ போல்’ என்று மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது.

101. வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதென
மணிமுறுவ னிலவுகாலும்
மழலைவாய் முத்துண்டு முச்சிமோந் துந்திரு
மடித்தலத் தினிலிருத்திப்

பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்
பாலமொடும் விளையா டெனப்பணித் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயும்

தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற
தையலு யகியும்வைத்துச்

சீராட்டி விளையாடு சேயு பதிக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. (க0)

தீராதவினை தீர்த்த தம்பிரானும் தையல் நாயகியும் முருகனுகிய குழந்தையைப் பாராட்டிய நிகழ்ச்சி கூறப்படுகிறது.

(இ—ள்) வார் ஆட்டு தட முலை பால் ஒழுகி வழிவது என மணி முறுவல் நிலவு காலும் மழலை வாய் முத்து உண்டும் — கச்சினை வருத்துகின்ற பெரிய நகிலின் பால் (நகிலிலிருந்து உண்ட பால்) ஒழுகி வழிவதைப்போல முத்துப்போன்ற பற்கள் வெண்மையான

ஒளியை வெளிப்படுத்துவதற்கிடமான இளஞ் சொல்லைப் பேசும் வாயினால் முத்தமிடுதலைப் பெற்றும்;

உச்சி மோந்தும் — உச்சியிடத்தை முகர்ந்தும்;

திரு மடி தலத்தினில் இருத்தி பாராட்டியும் — அழகிய மடியிடத்தே இருக்கச்செய்து கொண்டாடியும்;

தமது கண் மணி பாவை நின் படிவம் ஆக காட்டி இ பாலரொடும் விளையாடு என பணித்தும் — தங்களுடைய விழியினுள் கருமணியில் தோன்றும் பாவையை உனது மறு வடிவமாகக் காண்பித்து இக்குழந்தைகளோடு விளையாடுவாயாக என்று ஏவியும்;

தங்கள் பார்வை களி ஆட செயும் தார் ஆட்டு மதி முடி தீராத வினை தீர்த்த தம்பிரானும் தம்பிரான் தழல் உருவில் ஒரு பாதி குளிர ஒரு புறம் நின்ற தையல் நாயகியும் வைத்து சீராட்டி விளையாடும் சேனாபதிக் கடவுள் — (இவ்வாறெல்லாஞ் செய்து) தங்கள் விழிகளை மகிழ்ச்சியில் மூழ்கச் செய்கின்ற, மாலையாகச் செய்த பிறைத்திங்களை முடியிலேயுடைய, (அன்பரது) தீராத தீவினைகளையெல்லாம் தீர்த்தருளிய சிவபெருமானும், அவரது நெருப்புருவத்திலே ஒரு பாதி குளிர்ச்சி அடையும்படி (இடப்பாகமாகிய) ஒரு பக்கத்திலே நின்ற தையல் நாயகி என்னும் அம்மையும் (இவ்வாறு) வைத்துக் கொண்டு சிறப்புச்செய்து விளையாடுதற்குரிய தெய்வ சேனைக்குத் தலைவனான கடவுளே! (எ-று)

முடிபு :— முத்துண்டும், உச்சி மோந்தும், மடித்தலத்தினில் இருத்தி பாராட்டியும், தமது கண்மணிப் பாவையை நின் படிவமாகக்காட்டி இப்பாலரொடு விளையாடு எனப் பணித்தும், தங்கள் பார்வை களியாடச் செயும் தீராத வினை தீர்த்த தம்பிரானும், தையல் நாயகியும் சீராட்டி விளையாடும் சேனாபதிக் கடவுள்! குமர! சிறு தேர் உருட்டியருள்.

---

ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய முத்துக் குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழுக்கு, குகையூர்-சித்தநாதேச்சுராதீனம், பட்டத்து பெரியசாமி ஐயர் மகன் வித்துவான், திரு. அடிகளாசிரியன் செய்த சொற்பொருள் உரை ஏவிளம்பி யாண்டு தைத்திங்கள் ஒன்றாம் தேதி முற்றிற்று. (14—1—58).

முருகன் துணை.



# முத்துக் குமார சுவாமிப் பிள்ளைத் தமிழ்ப் பாட்டு முதற் குறிப்பகராதி.

